# எழில் உதயம்

(அபிராமி அந்தாதி விளக்கம்)



கி. வா. ஜகந்நாதன்



அமுத நிலையம் லிமிடெட்
ராயப்பேட்டை :: சென்னை-600 014

அமுதம்—22
பதிப்புரிமை
முதற் பதிப்பு—பிப்ரவரி, 1964
இரண்டாம் பதிப்பு—மார்ச், 1976
மூன்றும் பதிப்பு—அக்டோபர், 1980
நான்காம் பதிப்பு—மார்ச், 1982

**விலை ரூ. 12-00**

அச்சிட்டோர் :
ஸ்ரீ கோமதி அச்சகம்
லாயிட்ஸ் சாலை,
சென்னை-600 005.

# முன்னுரை

பல ஆண்டுகளுக்கு முன் திருப்பனந்தாளில் உள்ள காசி மடத்தின் அதிபர் ஸ்ரீலஸ்ரீ அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் அபிராமி அந்தாதிக்கு உரை எழுதிப் பதிப்பிக்க வேண்டும் என்று பணித்தார்கள். அவர்கள் திருவுள்ளப் படியே முதலில் அப்பதிப்பு, காசிமடத்தின் வெளியீடாக வந்தது. பிறகு இரண்டாம் பதிப் பும் வெளியாயிற்று. மூன்றும் பதிப்பு அமுத நிலைய வெளியீடாக மலர்ந்தது. அந்த நூலுக்கு உரை எழுதும்போது ஸ்ரீ வித்யா சம்பந்தமான நூல்களைப் படித்தும் உபாசகர்களோடு பழகியும் பல செய்திகளைத் தெரிந்துகொண்டேன்.

என்னுடைய ஆசிரியப்பிரானுகிய டாக்டர் மகாமகோபாத்தியாய ஐயரவர்கள் தக்கயாகப் பரணியைப் பதிப்பித்தபோது அம்பிகையின் சம்பந்தமான பல நூல்களைப் படிக்கும் செவ்வி கிடைத்தது. அதன் பின்பு அபிராமியந்தாதிக்கு உரை எழுதும்போது அந்தத் துறையில் பின்னும் ஆராய்ச்சி செய்யும் அவசியம் உண்டாயிற்று. பிறகு ஸ்ரீ சிருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் ஆதரவில் 'சங்கரகிருபா' என்ற பத்திரிகையை வெளியிடத் தொடங்கினுர்கள்.

அதனாசிரியராகிய ஸ்ரீ கே. ஆர். வேங்கடராமை யரவர்கள் அந்தப் பத்திரிகையில் தொடர்ந்து ஏதாவது எழுதி வரவேண்டுமென்று விரும்பினார் கள். அவர்கள் விருப்பப்படியே அபிராமி அந்தா திப் பாடல்களின் விளக்கத்தைக் கட்டுரை வடி வில் எழுதத் தொடங்கினேன். இன்னும் அந்தக் கட்டுரைகள் தொடர்ந்து வெளியாகிக்கொண் டிருக்கின்றன.

அவற்றைப் படித்தவர்கள் மகிழ்ச்சியுடன் பாராட்டி எழுதினார்கள். பலர் கட்டுரைகள் புத்தக வடிவில் வரவேண்டும் என்று தெரிவித் தார்கள். முழு நூலும் எழுதிய பிறகு வெளியிட லாமெனின் அது மிகவும் பெரிய புத்தகம் ஆகி விடும் என்று நினைத்து முதல் 25 பாடல்களின் விளக்கக் கட்டுரைகளை மட்டும் தொகுத்து, "எழில் உதயம்" என்ற பெயரில் இந்த உருவத் தில் வெளியிடலானேன்.

அபிராமி பட்டர் ஸ்ரீ வித்யா உபாசகர். தேவி சம்பந்தமான உண்மைகளை நன்கு உணர்ந் தவர். உண்மையான சாக்தர். ஆதலின் அவ ருடைய நூலுக்கு வேறு சம்பிரதாயப்படி உரை வகுப்பது பொருத்தம் ஆகாது. எனவே, படித்தும் கேட்டும் அறிந்த தேவி சம்பந்தமான கருத்துக்களைக் கொண்டு இந்தப் பாடல்களுக்கு விளக்கம் எழுதத் தொடங்கினேன். தேவி உபா சனைத் துறையில் பெரும் பயிற்சி பெறாதவன் எளியேன். அந்த உபாசனை விரிவானது; நுட்ப மானது. எனினும் ஸ்ரீ ஷண்முக நாதனுடைய திருவருளைத் துணையாகக் கொண்டு விளக்கம் எழுதத் தொடங்கினேன்.

சம்பிரதாய விரோதமும், பிழையும் இந்த விளக்கங்களில் இருத்தல் கூடும். இந்தத் துறையில் புகுந்து நலம்பெற்ற பெரியார்கள் அவற்றை எடுத்துக் காட்டினால், அவற்றைத் தெரிந்து கொண்டு திருத்தம் செய்து பயன் அடைவேன்.

இந்த விளக்கங்களைச் 'சங்கரகிருபா'வில் வெளியிடுவதற்கு ஆசி கூறியருளிய ஸ்ரீ சிருங்ககிரி ஜகத்குரு ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்களுடைய திருவடியைச் சிந்தித்து வந்திக்கின்றேன். அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் ஸ்ரீ கே. ஆர். வேங்கடராமையரவர்களுக்கு என் நன்றியறிவைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

"காந்தமலை"<br>
சென்னை—28.

கி. வா. ஜகந்நாதன்<br>
5—2—64

# உள்ளுறை

# எழில் உதயம்

உலகம் முழுவதும் எழில் மயம். இறைவன் படைத்த படைப்பு அத்தனையும் அழகுப் பிழம்பு. மனிதன் செயற்கையினால் அழகை அழுக்கு ஆக்குகிறான். இயற்கையில் எல்லாமே அழகுதான். குழந்தை அழகாகப் பிறந்து அழுக்காக மடிகிறது. தளிர் அழகாகத் தோன்றி அழுக்கேறிச் சருகாகி உதிர்கிறது.

இந்த அழகைத் தோற்றுவிக்கும் இணையில்லாச் சக்தி இறைவியாகிய ராஜராஜேசுவரி. அவள் பேரழகி. அவள் தூய அழகிலே சொக்கிப் போன அன்பர் பலர். அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத அவளை அபிராமி என்று வழங்குவர். அவளுடைய பேரருளிலே ஈடுபட்டவர் அபிராமிபட்டர். அவர் அபிராமியை அழகிய நூறு பாடல்களால் பாடியிருக்கிறார். அன்னையின் அழகையும் அருளையும் ஆற்றலையும் திருவிளையாடல்களையும் வீரச்செயல்களையும் திருநாமங்களையும் எண்ணி எண்ணி இன்புற்று, நம்மையும் எண்ணி எண்ணி வழிபாடு பண்ணி நலம்பெறச் செய்கிறார். எழில் உதயமானால் அதனைக் கண்டு இதய மலர் மலரும் அல்லவா?

அபிராமியின் பேரெழில் உதயமாக, அதை அகத்தும் புறத்தும் கண்டு காட்டினவர் அபிராமிபட்டர். அவர் தந்த எழில் தமிழ்க் கவிதை அபிராமி அந்தாதி.

# அபிராமி பட்டர்

அன்று அமாவாசைக்கு அடுத்த பிரதமை. தஞ்சைச் சரபோஜி மன்னர், காவிரிப்பூம்பட்டினத்தில், சங்கமுகத் துக்குச் சென்று நீராடிவிட்டுத் திரும்புகாலில், திருக்கட வூரில் அமிர்த கடேசுவரரையும் அபிராமி யம்பிகையை யும் தரிசிக்கத் தங்கினார். அரசர் தரிசனத்துக்கு வருகிறார் என்று அறிந்து கோயிலில் சிறப்பான ஆராதனைக்கு ஏற்பாடு ஆகியிருந்தது. அரசர் தம் பரிவாரங்களுடன் ஆலயத்துக்கு வந்தார். சுவாமி சந்நிதிக்குச் சென்று தரிசனம் செய்துகொண்டு அபிராமி அம்பிகையின் சந்நிதிக்கு வந்தார். அரசர் வருவதை அறிந்து யாவரும் விலகி நின்று மரியாதை செய்தனர். அங்கே பூஜை தொடங்கியது.

அப்போது அம்பிகையின் சந்நிதியில் ஒருவர் கண்ணை மூடியபடியே நின்று கொண்டிருந்தார். அவர் அரசர் வந்ததையோ, அவர் வரவால் நிகழும் ஆரவாரங்களையோ கவனித்தவராகத் தோன்றவில்லை. யாவரும் அரசர் வந்ததை அறிந்து ஒதுங்கி நின்று மரியாதை காட்டும் போது, அவர் மாத்திரம் நின்றபடியே தூண் போல இருந் தார். அவரைக் கண்டு சிலருக்குக் கோபம் வந்தது. அரசர் முன்னிலையில் அவரை என்ன செய்ய முடியும்?

அரசரும் அவரைக் கவனித்தார். எல்லோரும் பரபரப்புடன் இருக்க, அவர் கண்ணை மூடியபடியே எதை யும் கவனியாமல் இருப்பதைக் கண்டு அரசருக்கே வியப் பாக இருந்தது. அருகில் இருந்த ஒருவரைப் பார்த்து, "இவர் யார்?" என்று கேட்டார். அவர், "இவர் ஒரு

பித்தர்; ஏதோ துர்த்தேவதையை வழிபடுகிறவர்; கொஞ்சம் சோதிடம் தெரிந்தவர்'' என்று சொன்னார்.

தீபாராதனை நடந்தது. வாத்தியங்கள் முழங்கின. அந்தப் பேரொலியினால் கண்ணை மூடியபடியே நின்று கொண்டிருந்தவர், சற்றே கண்ணை விழித்துச் சுற்று முற்றும் பார்த்தார். அவரைக் கவனித்த சரபோஜி மன்னர், "இன்று என்ன திதி?'' என்று கேட்டார். நின்றவர் உடனே, "பௌர்ணமி'' என்று சொன்னார், அங்கே இருந்தவர்கள் யாவரும் தமக்குள்ளே சிரித்துக்கொண்டார்கள். மன்னர் அவர் அறிவுக்குழப்பமுடைய பித்தர் என்றே முடிவு செய்தார்.

அரசர் தரிசனம் செய்து கொண்டு தம்முடைய இருப்பிடம் சென்றார். பௌர்ணமி என்று சொன்னவரும் தம்முடைய வீடு சென்றார். அவரைக் கண்டவர்கள், "நேற்றுத்தான் அமாவாசை; இன்று இவருக்குப் பௌர்ணமி வந்துவிட்டதாம்!'' என்று பரிகாசம் செய்தார்கள். அவர் ஒன்றும் பேசாமல் ஏதோ மயக்கத்தில் ஆழ்ந்தவர்போல வீடு போய்ச் சேர்ந்தார்.

அவர் அபிராமி பட்டர் என்னும் அந்தணர். வழிவழியாகத் தேவி உபாசனை செய்யும் குடும்பத்தில் பிறந்தவர். முறைப்படியே ஸ்ரீவித்தியா உபாசனை செய்கிறவர் அவர். சரியை, கிரியை என்னும் இரண்டு சோபானமும் கடந்து யோக நிலையில் யாமளையின் திருக்கோலத்தை ஆதார பீடங்களில் கண்டு கண்டு, இடைப்பட்ட கிரந்திகளைத் தாண்டிச் சென்று, பிரம்மரந்திரத்தில் சகசிரார கமலத்தில் ஒளிமயமாக எழுந்தருளியிருக்கும் லலிதாம்பிகையின் திருவருளின்பத்தில் திளைத்துப் பித்தரைப் போல ஆனந்தாதிசய வெறி மூண்டு உலவுகிறவர். அவருடைய அநுபவ நிலையை உணராதவர்கள், "இவர் ஏதோ துர்த்தேவதையை உபாசித்து அந்தணருக்கு மாறுபாடான

ஆசாரங்களை மேற்கொண்டு உண்ணத்தகாததை உண்டு மதிமயங்கி அலைகிறார்'' என்றார்கள். அவர்கள் ஏசுவதைக் காதில் வாங்காமல் அபிராமி யம்பிகையை நாள்தோறும் தரிசித்துத் தியானம் செய்து, 'உள்ளத்தே விளைந்த கள்ளால் உண்டான களியிலே' பெருமிதத்தோடு மிதந்து வந்தார் அவர்.

சரபோஜி மன்னர் அவரை அபிராமி சந்நிதியில் கண்ட போது அவர் அம்பிகையின் தியானத்தில் ஈடுபட்டிருந்தார். சந்திரமண்டலத்தில் அமுதமயமாய் வீற்றிருக்கும் திரிபுர சுந்தரியைத் தம்முள்ளே தரிசித்து, அங்கே சூழும் சுடர்க்கு நடுவே கிடந்து சுடர்கின்ற அப்பெருமாட்டியின் திருக் கோலத்தில் ஆழ்ந்திருந்தார். கண்ணை விழித்தபோது அரசர் ஏதோ கேள்வி கேட்கவும், அவருக்குப் பௌர்ணமி தான் சொல்லில் வந்தது. அவர் ஒளிமயமான காட்சியி லிருந்து இறங்கினவர் அல்லவா?

வீட்டுக்கு வந்துகொண்டிருந்தபோது அவருக்கு உலக உணர்வு தெளிவாக வந்தது. தாம் தவறாகப் பௌர்ணமி என்று சொல்லிவிட்டதை அறிந்தார். தம்மைக் குறை கூறுவார்க்கு இந்த நிகழ்ச்சியும் ஒரு பலமாக ஏற்பட்டதைத் தெரிந்து கொண்டார். கேள்வி கேட்டவர் மன்னர் என்பதையும் நினைந்து பார்த்தார்.

வீட்டை அடைந்தவுடன் அவர் மனம் சற்றே குழம்பியது. 'அம்பிகையின் சந்நிதியில் அப்படி வந்தது வார்த்தை. அவள்தான் அப்படிப் பேசச் செய்து விட்டாள். நன்றே வரினும் தீதே வருகினும் நான் அறிவது ஒன்றேயும் இல்லை' என்று தெளிவு பெற்றார். உடனே அபிராமியம்மை யைப் பாடத் தொடங்கினார். மனம் கனிந்து உருகித் தமிழில் பக்தி மணக்கும் செய்யுட்களைப் பாடும் பழக்கம் அவருக்கு இருந்தது.

சரபோஜி மன்னர் தம்முடைய இருப்பிடத்தில் தங்கியிருந்தபோது அவர் மனம் எண்ணமிட்டது; 'நம்மைக் கண்டு இப்படி மாறுபாடாகப் பதில் சொன்னாரே அவர்; அவரைப் பித்தர் என்று சொன்னார்களே. பித்தராக இருந்தால் அவ்வளவு நேரம் ஒன்றையும் கவனியாமல் கண்ணை மூடிக்கொண்டு நிற்க முடியுமா? அவர் நெற்றியிலே ஒளி இருந்ததே!'—இவ்வாறு அவர் சிந்தனை ஓடியது.

அப்போது முன் இரவு நேரம். மன்னருக்குத் தூக்கம் வந்தது. சற்றே படுத்தார். அப்போது அவர் ஒரு கனவு கண்டார். கனவில், அபிராமியம்பிகை எதிரே நிற்கிறாள். தன்னுடைய காதில் உள்ள ஒரு தோட்டைக் கழற்றிக் கீழ்த்திசையில் வீசி எறிகிறாள். அது கீழ் வானத்தில் நின்று முழுமதியைப்போல் நிலவு பொழிந்து சுடர் விடுகிறது. அருகில் நின்ற அபிராமிபட்டர், "இதோ பாருங்கள், பூர்ண சந்திரனை. இன்று பௌர்ணமியல்லவா?" என்கிறார்.

அரசர் கனவிலிருந்து விழித்துக்கொண்டார். கனவிலே கண்ட காட்சி அவரை எல்லையற்ற வியப்பில் ஆழ்த்திவிட்டது. அபிராமியம்பிகையின் தரிசனத்தைக் கனவில் காணும் பாக்கியம் தமக்குக் கிடைத்ததை எண்ணி எண்ணி உருகினார். தன் பக்தருடைய பெருமையை விளக்கவே அம்பிகை கனவில் தோன்றினாள் என்று முடிவு செய்தார்.

அடுத்த கணமே எழுந்து அபிராமிபட்டரைத் தேடிப் புறப்பட்டுவிட்டார். அவர் வீடு சென்றார். அப்போதும் பட்டர் அபிராமியின் துதியாகப் பாடல்களைப் பாடிக்கொண்டிருந்தார். அங்கே சென்ற பின்னர் அரசர் அபிராமி பட்டரை வணங்கி எழுந்தார். அந்தாதியாகத் துதிகளைப் பாடிக்கொண்டிருந்த பேரன்பர் அப்போது 79—ஆவது

பாடலை முடித்தார். மன்னர் வணங்கி, "உங்கள் பெருமையை அறியாமல் இருந்துவிட்டேன். என்னை மன்னிக்க வேண்டும். உங்கள் தரிசனம் பெற்ற காரணத்தால் அபிராமி அம்பிகை எனக்குக் காட்சி கொடுத்து உங்கள் பெருமையையும் விளக்கியருளினாள்" என்று நிகழ்ந்ததைச் சொன்னார்.

கேட்ட அபிராமிபட்டர் அம்பிகையின் பேரருளை எண்ணி வியந்தார். "அவளைத்தான் பாடிக்கொண்டிருக்கிறேன். அவளுடைய காட்சியிலே நான் உண்மையிலே பித்தனாகிவிட்டவன்தான்" என்றார்.

மன்னர் அந்தப் பாடல்களை முழு நூலுருவத்தில் நூறு பாடலால் நிறைவேற்ற வேண்டும் என்று வேண்டினார். தாம் பெற்ற அநுபவத்தையும் மன்னர் பெற்ற அநுபவத்தையும் இணைத்து ஆனந்த அதிசயப் பெருக்கோடு 80-ஆவது பாட்டைப் பாடினார்.

**கூட்டிய வாஎன்னைத் தன்அடி யாரில்! கொடியவினை**
**ஓட்டிய வா! என்கண் ஓடிய வா! தன்னை உள்ளவண்ணம்**
**காட்டிய வா! கண்ட கண்ணும் மனமும் களிக்கின்றவா!**
**ஆட்டிய வாநடம்! ஆடகத் தாமரை ஆரணங்கே!**

[ஆயிர இதழ் அமைந்த பொற்றாமரையில் எழுந்தருளியிருக்கும் அரிய அழகியாகிய தேவி, ஒன்றுக்கும் பற்றாத என்னைத் தன் அடியாருள் ஒருவனாகச் சேர்த்தருளியவாறும், அங்ஙனம் சேர்த்துப் பின் என்பால் உள்ள கொடிய இருவினைகளையும் போக்கியவாறும், என்பால் அருள்புரிய ஓடி வந்தவாறும், தன் திருக்கோலத்தை உள்ளபடியே காட்டியவாறும், அதனைத் தரிசித்து அறிந்த கண்ணும் மனமும் ஆனந்த மேலீட்டால் மகிழ்கின்றவாறும், இவ்வாறெல்லாம் என்னைத் திருவருள் நாடகம் ஆட்டியவாறும் என்ன அதிசயம்!]

மேலே இருபது பாடல்களையும் பயனையும் பாடி அபிராமி அந்தாதியாகிய அந்த நூலை நிறைவேற்றினார் அபிராமிபட்டர்.

பாடல்களில் மெய்ம்மறந்திருந்த மன்னர் பின்பு அபிராமிபட்டரை வணங்கிச் சில விளைநிலங்களை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினர். பட்டர் இணங்கவில்லை. "தங்கள் வழியே வருகிறவர்களின் நன்மைக்காக ஏதையேனும் ஏற்றருள வேண்டும்" என்று மீண்டும் வேண்டினர். இறுதியில், சில கிராமங்களில் ஆண்டு ஒன்றுக்கு வேலிக்கு எட்டு நாழி நெல் அவருக்கும் அவர் சந்ததியாருக்கும் அளிக்கும்படி சுரோத்திரிய உரிமை அளித்துச் செம்பில் எழுதிக் கொடுத்தார் மன்னர்.

இன்னும் இந்த உரிமையை இவர் பரம்பரையினர் அநுபவித்து வருகின்றனர். திருச்சிராப்பள்ளியில் வயலின் வித்துவானாக இருக்கும் ஸ்ரீ அமிர்த பாரதி என்பவர் அபிராமி பட்டரின் வழி வந்தவர். அவர் ஒவ்வோராண்டும் இந்த நெல்லைத் தொகுத்து அபிராமி சந்நிதியில் அபிஷேக ஆராதனை செய்வித்து அன்னதானம் செய்து வருகிறார்.

அபிராமி பட்டர் பாடிய அபிராமியந்தாதி மிகச் சிறந்த நூல். பலர் இதைப் பாராயணம் செய்து நலம் பெற்றிருக்கிறார்கள். அன்போடு படிப்பவர் நெஞ்சில் அபிராமியின் திவ்வியத் திருவுருவம் தோற்றும்படியும், மேலும் மேலும் படிப்பவர்களுக்குப் பக்தி நலம் பழுக்கும் படியும் செய்வது இந்த நூல். அங்ஙனம் செய்வதற்குரிய சொல் நடையும் பொருள் ஆற்றலும் இதில் நிரம்ப அமைந்து கிடக்கின்றன. உண்மையான ஞானம் பெற்று அதனால் வரும் ஆனந்தாநுபவத்தை உடையவர்க்கன்றி இத்தகைய பொருட் சிறப்புடைய வாக்கு அமைவது மிகவும் அருமை. பாடல்தோறும் ஆசிரியருடைய அநுபவ நிலை கொப்புளித்துக் குமிழியிட்டு மணக்கின்றது. அந்த மணத்தை நுகரவைத்த ஆசிரியர் 'அபிராமி சமய'த்தை இதன் மூலமாக நமக்குக் காட்டுகிறார்.

# காரமர் மேனிக் கணபதி

அபிராமியைப் பாடத் தொடங்குகிறார் அபிராமி பட்டர். அந்தப் பெருமாட்டியின் திருவருளால் பாடத் தொடங்கினாராலும், அப்பிராட்டியின் குமாரராகிய கணபதியைத் தொழுதுதானே எதையும் தொடங்க வேண்டும்? "எந்தக் காரியம் யார் செய்தாலும், உன்னை வழிபட்டால் விக்கினத்தை நீக்கவும், வழிபடாமல் இருந்தால் விக்கினத்தை ஆக்கவும் செய்யும் அதிகாரம் உனக்கு உண்டு" என்று தாயும் தந்தையும் சேர்ந்து அருளியபடி விநாயகர் விக்கினேசுவரராக எழுந்தருளியிருக்கிறார். முப்புரம் எரித்தபோது இந்தச் சட்டத்தை மீறி விக்கினேசுவரரை வழிபடாமல் சிவபெருமான் புறப்பட்டபோது, அவனுடைய தேரின் அச்சு விநாயகர் ஆணையால் ஒடிந்து விட்டது என்பது புராணவரலாறு. சட்டத்தை உண்டாக்கினவனானாலும் அவன் சட்டத்துக்கு உட்பட்டு நடக்க வேண்டும் என்ற உண்மையை இந்தத் திருவிளையாடலால் இறைவன் உணர்த்தினான்.

ஆகவே, அபிராமி அந்தாதியைப் பாடுவதற்கு அப்பெருமானுடைய கருணையும் இருந்தால் அது எளிதில் நிறைவேறும் அல்லவா? அந்தக் கணபதியினிடம், "பெருமானே, உன்னுடைய அன்னையாகிய அபிராமியைப் பாடப் போகிறேன். அதற்கு வேண்டிய உதவியெல்லாம் புரியவேண்டும்" என்று பிரார்த்தனை செய்து கொண்டு, முதலில் விநாயகர் காப்பைச் சொல்கிறார் அபிராமி பட்டர்.

விநாயகர், சிவபெருமான், அம்பிகை எல்லோரையும் ஒருங்கே தியானிக்கிறார் இந்தப் பேரன்பர். இறைவன் எல்லாக் கோயில்களிலும் எழுந்தருளியிருக்கிறான். திருக் கடவூரிலும் அமிர்தகடேசுவரன் என்ற திருநாமத்தோடு விளங்குகிறான். முதலில் பெரிய தலமாக ஒன்றை நினைக் கலாம் என்று தோன்றியது. சிவபெருமானுடைய தலங் களில் சிறந்ததாகக் கருதப்பெறுவது தில்லை மற்றவற்றை யெல்லாம் பெயர் குறிப்பிட்டுச் சொன்னால்தான் விளங் கும். கோயில் என்று சொன்ன மாத்திரத்தில், அதனைத் தன் பெயராக உடைய சிதம்பரந்தான் நினைவுக்கு வரும். இவர் இயற்றப் புகும் அந்தாதிக்கு உரியவள் அபிராமி. அவ் வம்பிகை திருக்கடவூரில் எழுந்தருளியிருப்பவள். அபிராமிபட்டர் அங்கே எழுந்தருளியிருக்கும் அர்ச்சா மூர்த்தியை மாத்திரம் பாட வரவில்லை. எங்கும் நிறைந் திருக்கும் மகாமாதாவாகிய திரிபுர சுந்தரியையே பாடப் போகிறார். அவளுக்குத் திருக்கடவூர் மாத்திரமா சொந்தம்? ஆகையால் அவள் எழுந்தருளியிருக்கும் இடங்களிற் பல வற்றையும் இடையிடையே சொல்லப் போகிறார். முதலில் எல்லாத் தலங்களிலும் சிறந்த சிதம்பரத்தைப் போற்றத் தொடங்குகிறார்.

சிவபெருமானை வழிபடுகிறவர்களுக்குத் தில்லை என்றதும் நடராஜப் பெருமான் நினைவு எழும்; தொடர்ந்து சிவகாமசுந்தரியின் நினைவும் உண்டாகும். லயம் இல்லாவிட்டால் அப்பெருமானுடைய ஆட்டம் நடவாது. அந்த லயத்தை உண்டாக்குகிறவள் அம்பிகை தானே? அவள் இப்போது தனியே நின்று தாளம் போடு கிறாளேயன்றி, எப்போதும் ஐயனிடமிருந்து பிரியாமல் அவனுடைய வாமபாகத்திலே இருப்பவள் அல்லவா?

அந்தப் பழைய நிலையை—ஒட்டிய நிலையை—தம் உள்ளக் கண்ணினால் பார்க்கிறார் பட்டர். தில்லை நடராஜ னுடைய வாமபாகத்தில் அம்பிகை இருக்கிறாள். ஆ!

என்ன அற்புதக் காட்சி! குஞ்சித சரணம் அம்பிகையுடையதாக அல்லவா இருக்கிறது? ஆம், அதுதானே யமனைக்கூட உதைத்தது? சிவபெருமான் கொன்றை மாலையை அணிபவன். அம்பிகைக்குச் சண்பகமாலை உகப்பானது. 'சாம்பேயகுஸுமப் பிரியை' அல்லவா? வலப் பக்கத்தில் கொன்றைத் தாரும் இடப்பக்கத்தில் சண்பக மாலையும் புரளத் தில்லை ஊரனும் அவன் பாகத்தில் உள்ள உமையும் ஒருவரில் இருவராகக் காட்சி அளிக்கிறார்கள். தில்லை ஊரனைப் பார்த்துப் பின் வாமபாகத்துப் பெருமாட்டியை உள்ளக் கண்ணில் தரிசிக்கிறார். அப்போது தான் தாம் எடுத்துக்கொண்ட காரியம் நினைவுக்கு வருகிறது. "நாம் கணபதியை அல்லவா வணங்க ஆரம்பித்தோம்?" என்று எண்ணிப் பார்க்கிறார். அந்த ஆனந்த நடன சபையில் கணபதியும் நிற்கிறார்; கார் போன்ற கரிய மேனியோடு நிற்கிறார். மழை பொழியும் மேகம் போல அருள் பொழியும் ஆனைமுகன் அம்மையப்பனது ஆட்டத்தைக் கண்டு தாமும் ஆடிக் கொண்டிருக்கிறார். "சுவாமி, கொன்றைத் தாரை அணியும் தில்லைப் பெருமானுக்கும், அவர் திருப்பாகத்தில் சண்பகமாலையை அணிந்து விளங்கும் உமாதேவிக்கும் பிரியமான மைந்தரே, கார்போன்ற திருமேனியை உடைய கணபதியே, தேவரீரிடத்தில் ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறேன்" என்று தொடங்கி விட்டார்.

**தார் அமர் கொன்றையும் சண்பக மாலையும்**
**சாத்தும் தில்லை**
**ஊரர்தம் பாகத்து உமை மைந்தனே!...**
**கார் அமர் மேனிக் கணபதியே!**

"என்ன விண்ணப்பம்?" என்று கணபதி தும்பிக் கையை அசைத்துக் கேட்கிறார்.

"உம்முடைய அன்னையைப் பாடவேண்டும்."

"என் அன்னையை நீ பாடுவது ஏன்?"

"அந்தப் பிராட்டி எனக்கும் அன்னை."

"உனக்கா?"

"ஆம்; எனக்கு மட்டும் அல்ல; உலகம் ஏழுக்கும் அவளே தாய். சொல்லமுடியாத சீரைப் பெற்ற அபிராமி உலகேழும் பெற்ற பெருமாட்டி."

"நீ என்ன செய்யப் போகிறாய்?"

"அந்த அன்னையைப்பற்றி ஓர் அந்தாதி பாட வேண்டும்."

"அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?"

"தேவரீரே அதை நான் பாடும் வகையைக் கற்பித்தருளவேண்டும். இன்ன இன்னபடி பாடு என்று கட்டுரைத்தருளவேண்டும்."

"நல்ல காரியம் செய்தாய்! இப்போது இந்த ஆனந்த நடனத்தை விட்டுவிட்டு உனக்குப் பள்ளிக்கூடம் போடச் சொல்கிறாயா?"

'அகடித கடனா சாமர்த்தியம் உடைய தேவரீருக்கு இது ஒரு பெரிய காரியமா? என் சிந்தையிலே தேவரீர் நின்றருளி எப்போதும் இந்த அந்தாதி மாலை இடைவிடாது பெருகும் வண்ணம் அதற்குரிய சொல்வளத்தையும், பொருள் வளத்தையும் பாலித்தருளவேண்டும்.'

நல்ல கவி பாடவேண்டுமானால், பேனாவை எடுத்து உடனே எழுதிவிட முடியாது; அல்லது வாயைத் திறந்தவுடன் பேச்சு வருவதுபோலக் கவிதை வந்துவிடாது; முதலில் உள்ளத்திலே அது உருவாகவேண்டும். சிந்தனைச் செல்வம் பெறாதவன் எந்தக் கலையிலும் வல்லவனாக இருக்க முடியாது. சொல்லேருழவராகிய புலவர்களின் அகமாகிய வயலில் செய்யுள் விளையும்.

"உளங்கொண்டு தெள்ளித்
தெளிக்கும் பனுவற் புலவோர்
கவிமழை சிந்தக்கண்டு
களிக்கும் கலாப மயிலே சகல
கலாவல்லியே!"

என்று குமரகுருபரர் பாடுகிருர். கவிமழை உள்ளத்தே தெளிவு பெற்றவர்களிடமே உண்டாகும்.

"உள்ளத்தில் உண்மைஒளி உண்டாயின்
வாக்கினிலே ஒளிஉண் டாகும்"

என்பார் பாரதியார்.

சிந்தனையிலே செம்மை பெருதவன் கவி பாட இயலாது. ஆகவே அபிராமிபட்டர் தம் சிந்தையுள்ளே ஒளி உண்டாக வேண்டும் என்று வேண்டுகிருர். ஒளிமயமான திருமேனியை உடையவராகிய கணபதி உள்ளத்திலே நின்ருல் அபிராமி அந்தாதி ஊற்று அங்கே எழும். அந்தப் பெருநூல் உள்ளத்திலே இடையருது ஊற்றெடுக்க வேண்டும் என்று கணபதியை இறைஞ்சுகிருர். அவர் பாடிய கணபதி வணக்கச் செய்யுள் வருமாறு:

தார்அமர் கொன்றையும் சண்பக மாலையும்
சாத்தும்தில்லை
ஊரர்தம் பாகத் துமைமைந்த னே,உல
கேழும்பெற்ற
சீர் அபிராமிஅந் தாதிஎப் போதும்என்
சிந்தையுள்ளே
கார்அமர் மேனிக் கணபதி யேநிற்கக்
கட்டுரையே.

[மாலையாக அமைந்த கொன்றையையும் சண்பகமலர் மாலையையும் முறையே அணிந்த தில்லைப்பதியில் உள்ள பிரானாகிய நடராஜருக்கும், அவர் தம் பாகத்தில் எழுந்தருளிய உமாதேவிக்கும் உரிய மைந்தனே, மேகம்போன்ற கரிய திருமேனியை உடைய கணபதியே, உலகங்கள் ஏழையும் பெற்ற சிறப்பையுடைய அபிராமியம்மைக்கு அணியும் அந்தாதி எப்போதும் என் உள்ளத்துள்ளே நிற்கும்படியாக உரைத்தருள்வாயாக.

தார்—மார்பில் அணியும் மாலை. அமர்தல்-பொருந்தி விளங்குதல். கொன்றை, சிவபிரானுடைய அடையாள மாலை. தாரமர் கொன்றை சாத்தும் தில்லையூரர் என்றும், சண்பகமாலை சாத்தும் உமையென்றும் நிரல்நிறையாகக் கூட்டிப் பொருள்கொள்ளவேண்டும். சாத்துதல்-அணிதல். எல்லாப் பிரபஞ்சங்களும் அம்பிகையிலிருந்து தோன்றியமையின், "உலகேழும் பெற்ற சீர் அபிராமி" என்றார். எப்போதும் என்றது இடைவிடாமல் என்ற பொருள் உடையது. சிந்தையுள்ளே அபிராமி அந்தாதிக்குரிய சொல்வளமும் பொருள் வளமும் உண்டாகவேண்டும் என்பதே கருத்து. கட்டுரைத்தல்-அடைவாகச் சொல்லுதல்.]

பூமாலை சாத்தும் பிராட்டிக்குப் பாமாலை சாத்தப் புகுகிறேன் என்ற நினைவில் முதலில் பூமாலையைச் சொன்னார். சர்வலோக ஜனனியாகிய அம்பிகையை வணங்கும் உரிமை யாவருக்கும் உண்டு. ஆதலின், "உலகேழும் பெற்ற சீர் அபிராமி" என்று கூறினார். "முதல் உரிமை உனக்குத்தான்; பின் உரிமையே எளியேங்களுக்கு" என்று உரைப்பாரைப்போல முதலில் உமை மைந்தனே என்(றவ)ர், 'உலகேழும் பெற்றமை' யைப் பின்பு கூறினார். தில்லையும், கடவூரும் மட்டும் அப்பெருமாட்டிக்(கு) உரியவை அல்ல, உலகம் ஏழுமே அவளுக்கு உரியன என்(ற) கருத்தும் இதில் குறிப்பாக உள்ளது. அந்தாதி பாடு

முன்னர் அது வெளிவருவதற்கு ஏற்ற சிந்தனையும், அது வெளிவந்த பின்னர் அது என்றும் மறவாமல் உள்ளத்தில் நிற்கும் நிலையும் வேண்டும் என்பதைக் கருதி, "எப்போதும் என் சிந்தையுள்ளே நிற்க" என்று கூறியதாகவும் கொள்ளலாம். சிந்தை என்றது சித்தத்தை, ஒன்றைப் பற்றிக் கொண்டு இடைவிடாது திண்ணியதாக இருப்பது அதுவேயாதலின்.

கணபதியின் நிறம் வெண்மையென்றும் சிவப்பென்றும் சொல்வதுண்டு. இங்கே கவிமழை பொழிய எண்ணியவர் ஆதலின், மழை முகிலனைய திருமேனியை உடையவராகத் தியானித்தார்.

# எழில் உதயம்

## 1

## சமுதாய சோலை

விநாயகப் பெருமானை வணங்கிய அபிராமிபட்டர் அபிராமி அந்தாதியைத் தொடங்குகிறார். தொடங்கும் போது அவர் தம் உள்ளத்தில் தேவியைத் தியானம் செய்கிறார். தேவியின் அங்க எழிலையும், திருவிளையாடல் களையும், அருட்பெருக்கையும், பிற பெருமைகளையும் விரிவாக நூறு பாடல்களால் பாடுவதாக எண்ணியே இந்த நூலைத் தொடங்கியிருக்கிறார். முதலில் எம்பெரு மாட்டியின் அழகுப்பிழம்பை, சமுதாய சோபையை, எண்ணிப் பார்க்கிறார். அவளுடைய திருமேனித் தேசு பொலிவு பெற்றுக் காட்சி அளிக்கிறது. சூரியோதயம் ஆகும்பொழுது கீழ்வானம் வெளுத்துப் பிறகு ஒரே ஒளிப்பரப்புத் தோன்றுமே, அப்படி உள்ளம் முழுதும் பரவிய செஞ்சோதிப் பிழம்பு தோன்றுகிறது. அபிராமி அந்தாதியின் உதயத்திலே அம்பிகையின் செம்மேனிச் சுடரும் உதயமாகிறது.

அம்பிகையின் எழிலை எப்படிச் சொல்வது? இன்ன படி உள்ளது என்று சுட்டிக்காட்ட ஒண்ணாத சோதி உருவுடையவள் அவள். ஆனாலும் சொல்ல வேண்டும் என்ற ஆர்வம் மீதூர்கின்றது. அதனால் உவமைகளின் வாயிலாகச் சொல்லத் தொடங்குகிறார்.

அம்பிகையின் உருவம் ஒரே சோதி மயம்; முழுவதும் செவ்வண்ணச் சோதி. செம்மை என்பது நம் நாட்டில்

உயிர்த்தன்மையையும், நிறைவையும், நேர்மையையும், அழகையும், சேர்த்தியால் உண்டாகும் சோபையையும் குறிக்கும் நிறம். அம்பிகை உயிருக்குயிராக, பரிபூரணப் பொருளாக, நேர்மையே உருவாக, அழகுக்கு ஒருவரும் ஒவ்வாதவளாக, நல்லவற்றைச் சேர்த்து அருள் வழங்குபவளாக விளங்குகிறாள். அவளுடைய திருமேனிக்கு எதை உவமை சொல்வது?

நமக்குத் தெரிந்த சோதிப் பொருள்கள் மூன்று; அக்கினி, சந்திரன், சூரியன் என்பன அவை. அவற்றில் சிறந்தது சூரியன், அதனை உவமை கூறலாம் என்று தோன்றியது. ஆனால் சூரியன் பார்க்கக் கூசும் உருவமுடையவன் அல்லவா? அம்பிகையோ தன்னை உபாசிப்பவர்களின் அகக்கண்ணில் கூசுதலைப் போக்கும் எழிலுடன் காட்சி தருபவளாயிற்றே! கதிரவன் உதயமாகும் பொழுது எல்லோரும் காணும்படி இருப்பான். ஒளியும் எழிலும் பொருந்திய உதய சூரியனை உவமையாகச் சொல்லலாம். லலிதா சகசிரநாமத்திலும் அந்த உவமை உண்டு. ''உத்யத்பானு ஸஹஸ்ராபா'' என்று வருகிறதல்லவா?

இந்த எண்ணங்களின் முதிர்வாக அபிராமி அந்தாதியின் முதல் தொடர் உதயமாகிவிட்டது.

**உதிக்கின்ற செங்கதிர்.**

* * *

உதய சூரியன் உலகின் இருளை ஓட்டுவதுபோல அம்பிகை அஞ்ஞான இருளை ஓட்டுகிறாள். சூரியன் உதயமானவுடன் நடுக்கத்தைத் தரும் பனி அகன்று போகிறது; அம்பிகையின் காட்சியினால் நடுக்கத்தைத் தரும் தாபத்திரயங்கள் ஒழிகின்றன. தாமரைகள் செங்கதிரவன் உதயமாகும்போது விரிகின்றன; அம்பிகை

யின் உதயத்தால் அன்பர்களின் இதயதாமரைகள் மலர்கின்றன. மக்கள் செஞ்சுடரோன் வந்தானென்று துயில் நீங்கி முயற்சியில் ஈடுபடுகிறார்கள்; அம்பிகையின் சமுதாய சோலையில் கலந்தவர்கள் தம்முடைய தாமத குணத்தினின்றும் நீங்கி விழித்துக்கொண்டு தம்முடைய தொழிலாகிய உபாசனையைச் செய்கிறார்கள்.

இப்படிப் பல படியாக விரிக்குமாறு அந்த உவமை அமைந்துவிடுகிறது. ஆனாலும் இங்கே முக்கியமாக அம்பிகையின் திருமேனி லாவண்யத்துக்கு உவமையாக நிற்கிறான் உதயசூரியன்.

உதய சூரியனாகிய உவமை பொருத்தந்தான். அம்பிகையின் உயர்வுக்கும் சோதி வடிவுக்கும் அது ஏற்றதாக அமைந்துவிட்டது. ஆனால் ?

இங்கே ஓர் எண்ணம் குறுக்கிடுகிறது. சூரியன் வானத்தில் உலவுகிறான். நாம் வா என்றால் வருவதில்லை; போ என்றால் போவதில்லை நம்முடைய விருப்பத்தையோ வெறுப்பையோ எண்ணி அவன் ஒன்றும் செய்வதில்லை. அம்பிகையோ அத்தகையவள் அல்லள். வானவருக்கும் ஏனையவருக்கும் எட்டாதவளாக இருந்தாலும் அடியவர்களுக்கு எப்போதும் அணிமையில் இருக்கிறாள். அவள் தன் உருவத்தைக் காட்டுவது அடியவர்களின் வணக்கத்தைப் பெறுவதற்காகவே. அவளை உபாசகர்கள் எப்போதும் தலையால் பணிகிறார்கள். மங்கைமார் தம் உச்சியிலே திலகத்தைத் தாங்குகிறார்களே, அதுபோல இந்தச் செம்மையுருவமைந்த பிராட்டியை அன்பர்கள் முடியணி யாக்குகிறார்கள். ஆகவே வணங்குவதற்குரியவளாக, அடியாரின் தலைக்கு அணியாக, அவர்களுக்கு அண்ணியவளாக, செந்நிறம் பூத்தவளாக இருக்கும் அவளுக்கு உச்சியிலே அணியும் திலகத்தை உவமை சொல்லலாமே;

## உச்சித் திலகம்.

*

திலகம் பொருத்தந்தான். ஆனால் அது வைத்துக் கொண்டால் சில நேரத்தில் அழிவதாயிற்றே. எட்டாத செம்மை உதய சூரியன் என்று சொன்னால், இது கரைந்து போகும் செம்மையாயிற்றே! கிடைக்கும் பொருளாய், அணியும் போருளாய், மதிக்கும் பொருளாய், செவ்வண்ணப் பொருளாய் இருப்பது ஏதேனும் உண்டானால், அதைச் சொல்லலாம்.

அப்படி ஒரு பொருள் இருக்கிறதே! மாணிக்கம் என்னும் செம்மணி பெரியவர்களால் மதிக்கத்தக்க செம்பொருள் அல்லவா? ஞானிகள் மதிக்கும் எம்பிராட்டிக்கு மணி நூலில் அறிவுடையவர்கள் மதித்துப் பாரட்டும் மாணிக்கத்தை உவமையாகச் சொல்வது பொருத்தமாக இருக்கும். பழம் புலவர்கள் அவளை, "மாணிக்க வல்லி" என்று பாரட்டியிருக்கிறார்கள். ஆகவே மாணிக்கத்தை உவமை சொல்வதே பொருத்தம்.

உணர்வுடையோர் மதிக்கின்ற மாணிக்கம்.

* * *

இப்போது வேறு ஓர் யோசனை வந்து குறுக்கிடுகிறதே. மாணிக்கம் கைக்கு எட்டுவது; ஒளியுடையது; கரையாதது. எல்லாம் சரி. ஆனால் அது கடினமானதல்லவா? அம்பிகை வன்மை உடையவள் அல்லவே! அவள் மென்மையே உள்ளமாகவும் உருவமாகவும் படைத்தவள். கோமலாங்கி என்ற அவள் பெயர் மென்மையைக் குறிப்பதல்லவா? மென்மையாகவும், கைக்கு எட்டுவதாகவும், உயர்வான பொருளாகவும், செவ்வண்ணம் உடையதாகவும் ஒன்று கிடைத்தால் அதைச் சொல்லலாம்.

மாதுளம்பூ இப்போது நினைவுக்கு வருகிறது. அது குளிர்ச்சியும் செம்மையும் மென்மையும் கொண்டதல்லவா? அம்பிகையின் மென்மைக்கும் வண்ணத்துக்கும் ஏற்ற உவமைதான். "தாடிமீ குஸுமப்ரபா" என்று லலிதா சகஸிரநாமமே சொல்லுகிறதே!

**மாதுளம் போது**

என்பதே பொருத்தம்.

* *

உவமைகளுக்கு அப்பால் நிற்கும் பெருமாட்டி ஸ்ரீ மகா திரிபுரசுந்தரி. உதயசூரியனும், உச்சித் திலகமும், மாணிக்கமும், மாதுளம் போதும் அவள் திருமேனி லாவண்யத்திற்கு ஏதோ ஒரு சிறிய அளவில்தான் ஒப்பாக நிற்பவை. அவற்றை உவமை சொல்லி, "அம்பிகைக்கு ஏற்ற உவமையைச் சொல்லிவிட்டோம்" என்று திருப்தி அடைந்துவிட முடிகிறதா?

அம்பிகையின் உபாசகர்கள் கோடானு கோடி பேர்கள். சிவபிரான் முதலிய தேவர்களும் பிறரும் அவளுக்கு அடியவர்கள். எப்போதும் அவள் அருகிலிருந்து திருமகளும் மலைமகளும் சாமரை வீசிக்கொண்டிருக்கிறார்கள். அப்படி இருந்தும் அவர்கள் அப்பிராட்டியின் திருமேனிப் பேரழகு முற்றும் கண்டு மனநிறைவடைந்தார்களா? அதுதான் இல்லை.

மனம் அமைதியாக இருந்தபோது, அகந்தையொழிந்து நின்றபோது, திருமகள் திரிபுரசுந்தரியைக் கண்கொண்டு பார்த்தாள். மின்னல் மின்னியதுபோல் அப்பெருமாட்டியின் சோதித் திருமேனி தோன்றியது. ஒரு கணந்தான் அதைக் கண்டாள். பிறகு காணமுடியவில்லை. மின்னல் ஒருகணந்தானே தோற்றும்? "மின்னல் அடித்தாற்போல ஒரு கணம் தன் உருவத்தைத்

தரிசனம் செய்யச் செய்தாயே! அதனை என்றும் காணத் திருவருள் செய்ய மாட்டாயா?'' என்று திருமகள் ஏங்கி நிற்கிருள். தான் கண்ட மின்னற் கொடியனைய திருவுரு வத்தைத் துதித்துக் கொண்டே இருக்கிருள்.

இப்படி ஒரு கற்பனைக் காட்சியை அபிராமிபட்டர் கண்டார், திருமகள் துதிக்கின்ற மின்னுக் கொடி போன்றவள் என்ற எண்ணம் வரவே,

**மலர்க்கமலை துதிக்கின்ற மின்கொடி**

என்று பாடினர்.

* * *

இதனாலும் அவர் நிறைவு பெறவில்லை. அம்பிகையின் உருவத்தை நன்ருகத் தியானித்தார். அவள் திருமேனிக்குக் காச்மீரத்துக் குங்குமப்பூவை உவமையாகச் சொல்லுவது வழக்கம். மூககவி ஆர்யாசதகத்தில். ''காச்மீரஸ்தபக கோமலாங்கலதா'' என்று பாடியிருக்கிருரே, அதை நினைக்கிரு.ர் அபிராமிபட்டர். அதற்கு மேலும் அவர் உள்ளம் விரிகிறது. இந்தக் குங்குமப் பூவைக் கடாரத்தில் பூரித்த தீர்த்தத்தில் நிறையக் கொட்டி அம்பிகைக்கு அபிஷேகம் செய்வார்கள். அந்த நீர் சிவப்பாக இருக்கும். அம்பிகையின் திருமேனி முழுவதையும் ஆட்டும் வண்ண நீர் அது. மனத்தில் குங்கும தோயத்தால் அம்பிகையை ஆட்டினர். ஆ! அம்பிகை திருமேனி வண்ணமும் இந்தக் குங்கும வண்ண நீர் நிறமும் வேறுபாடு தெரியாமல் இருக் கின்றனவே! அம்பிகையின் திருமேனி முழுவதுமே பரவி நனைத்து அழகு பெற்று ஒளிர்கிறது இந்த நீர். இப்போது உபமான உபமேயங்கள் அருகருகே இருக்கின்றன. அவள் திருமேனியும் அத்திருமேனி முழுவதும் பரத்து படிந்த குங்கும தோயமும் ஒன்றற்கு ஒன்று இணைந்ததாக உள்ளன. இதுதான் சரியான உவமை என்று தோன்றுகிறது.

மென்மையான மணமுள்ள குங்குமப்பூக் கரைத்த குழம்பு நீரைச் சொல்லி நிறைவு பெறலாம் என்று,

**மென்கடிக் குங்கும தோயம்**

என்று பாடினர்.

* * *

அப்படியும் திருப்தி உண்டாகவில்லை. இவ்வளவும் தனித்தனியே ஒவ்வொரு சிறப்பினல் அம்பிகையின் வண்ண மேனிக்கு உவமையாகின்றன. எல்லாவற்றை யுமே சொல்லி விடலாம் என்று தோன்றுகிறது. பெரிய வர்கள் இந்தப் பொருள்களை உபமானமாகச் சொல்லியிருக் கிருர்கள். ஆதலால் இத்தனையையும் சொல்லி ஒரு வாறு அம்பிகையின் சமுதாய சோபையைத் தியானிக்க வழிகோலலாம் என்று எண்ணி, மேலே சொன்ன எல்லா உவமைகளையும் தொகுத்து வைத்தார்.

**உதிக்கின்ற செங்கதிர், உச்சித் திலகம்,**
**உணர்வுடையோர்**
**மதிக்கின்ற மாணிக்கம், மாதுளம் போது,**
**மலர்க்கமலை**
**துதிக்கின்ற மின்கொடி, மென்கடிக் குங்கும**
**தோயம்என்ன**
**விதிக்கின்ற மேனி அபிராமி என்றன்**
**விழுத்துணையே.**

ஒன்றை மூன்று முறை சொல்வதனுல் உறுதி உண் டாகும். இங்கே ஒட்டிக்கு இரட்டியாக அம்பிகையின் திருமேனிக்குரிய உவமைகள் ஆறைச் சொல்லியிருக் கிருர் ஆசிரியர். அப்பிகையைப் பூஜித்துத் தம் கையாலே அபிஷேகம் செய்கிறவர்களுக்குத்தான் கடைசி உவமை யின் அருமை தெரியும். அந்த அருமையான பொருளை,

உபாசகர்களே உணரும் நுட்பப்பொருளை, இறுதியிலே வைத்தார் அபிராமிபட்டர்.

"இப்படி நூல்களும் பெரியோரும் உபமானமாக வரையறை செய்து வருணிக்கும் திருமேனியையுடைய அபிராமி என்னுடைய மேலான துணையாக இருக்கிறாள்" என்று முதற்பாட்டைப் பாடி நிறைவேற்றினார் பட்டர்.

உவமைகளைப்பற்றி விரிவாக ஆராய்ந்தோம். மற்றக் கருத்துக்களை இனிப் பார்ப்போம்.

## 2

## விழுத்துணை

அபிராமியம்மையின் சமுதாய சோபையை முதலில் தியானித்துக் கொள்கிறார், அபிராமிபட்டர். நெடுந் தூரத்தில் ஒருவர் வந்தால் அவருடைய உருவம் பிழம் பாகத் தெரியுமே அன்றி, அவருடைய அங்கங்களின் விரிவு தெளிவாகத் தெரியாது. அருகில் அணுக அணுக உறுப்பு நலன்கள் தெரியவரும். இங்கே அம்பிகை பிரசன்னமாகும்போது முதலில் அவளுடைய திருக் கோலத் தேசு புலனாகிறது. அவளுடைய திருமேனி முழு வதும் பரவிப் படர்ந்து முழுமை பெற்ற லாவண்யம் தெரிகிறது. இனிமேல் அப்பெருமாட்டியின் எழில் தவழும் உறுப்புகளைப் பற்றிச் சொல்லப் போகிறார்.

இப்படிச் சொல்வது ஒரு மரபு. திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் முருகனுடைய கோலத்தை எடுத் துரைக்கிறார். அவனுடைய கால், கை, முகங்கள் முதலியவற்றின் அழகையும் சிறப்பையும் சொல்கிறார். எல்லாவற்றுக்கும் முதலில் அவனுடைய ஒளியுருவப் பிழம்பைக் காட்டுகிறார். நீல மயிலின்மேல் செக்கச்

செவேலென்ற வண்ணத்தோடு முருகன் எழுந்தருளுவதைப் பார்த்தால், கடலின்மேல் உதயசூரியன் தோன்றுவதைப்போல இருக்கிறதாம்.

"உலகம் உவப்ப, வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி"

என்று தொடங்குகிருர். திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில் இளம் செஞ்ஞாயிற்றைக் காண்பது போலவே அபிராமி அந்தாதியின் ஆரம்பத்திலும், "உதிக்கின்ற செங்கதி"ரைக் காணுகிருேம்.

அம்பிகையின் திருமேனி செக்கச் சிவந்தது. அதனுல் உதய ஞாயிற்றையும் உச்சித் திலகத்தையும் மாணிக்கத்தையும் மாதுளம் பூவையும் மின்னற் கொடியையும் குங்குமக் குழம்பையும் உவமையாகச் சொன்ஞர். அவளுடைய எழில் மேனியை உள்ளவாறே சொல்லிக் காட்ட முடியாது. அதனுல் உவமையினுலே சொல்லப் புகுந்தார்.

பொதுவாகத் திருக்கோயில்களில் சிவபெருமானை வணங்கிவிட்டு அம்பிகையை வழிபடுகிருேம். அம்மையின் தோத்திரங்களைப் பாடுகிருேம். அம்மையைப் பற்றி நாம் பல செய்திகளை அறிந்திருக்கிருேம், படங்களிலும் அம்மையின் திருவுருவத்தைப் பார்க்கிருேம். உமாதேவி, பார்வதி என்று போற்றும் அன்னை பச்சை வடிவினள் என்பதுதான் யாவருக்கும் தெரியும். ஆனுல் இங்கே அபிராமிபட்டர் அம்மையைச் செவ்வண்ண மேனியினளாகத் துதிக்கிருர்.

இந்த வேறுபாடு—இந்த உண்மை—ஸ்ரீவித்தியா உபாசர்களுக்குத் தெரியும். சைவர்கள் பரமசிவம் என்றும், வைணவர்கள் பரவாசுதேவன் என்றும் கடவுளைப் பாராட்டி மற்றவர்கள் யாவரும் அவர்களிலும் தாழ்ந்த

வர்கள் என்று சொல்லுவார்கள்: அல்லது தனிமுதற் கடவுளைச் சைவர்கள் பரசிவம் என்றும், வைணவர்கள் பரவாசுதேவன் என்றும் வழிபடுவார்கள். பரம் என்ற சொல் மேலானது என்னும் பொருளுடையது. அவ்வாறே ஸ்ரீவித்தியா உபாசகர்கள் அம்பிகையைப் பராசக்தி என்று கொண்டாடுவார்கள். ஸ்ரீராஜராஜேசுவரி, மகா திரிபுரசுந்தரி என்றெல்லாம் வழங்கும் அந்தப் பரமேசுவரி திரிமூர்த்திகளையும் பிற தேவர்களையும் தன்னுடைய ஆணையைத் தாங்கி நடத்தும் அதிகாரிகளாகக் கொண்டு விளங்குகிருள் என்று கொள்வர். துர்க்கை, லக்ஷ்மி, சரசுவதி என்ற மூன்று சக்திகளும் அந்தப் பெருமாட்டி யின் கூறுகளாக மும்மூர்த்திகளிடமும் இருந்து அவர வர்களின் தொழிலைச் செய்விப்பவர்கள். அந்த வகையில் சிவனுடைய சக்தியாக இருக்கும் உமாதேவி பச்சை நிறம் உடையவள். லக்ஷ்மி, சரசுவதி ஆகிய இருவர்களை யும்விட உமாதேவியினிடம் அம்பிகையின் கூறு மிகுதி.

எல்லோருக்கும் மேலாக விளங்கும் அம்பிகையாகிய ஸ்ரீராஜராஜேசுவரி செம்மை நிறம் உடையவள். செம்மை என்பது இந்த நாட்டில் நிறைவுக்கும், முழுமைக்கும், உயிர்த் தன்மைக்கும், நேர்மைக்கும், நன்மைக்கும், மங்கலத்துக்கும் அடையாளம். இதை முன்பும் பார்த் தோம். அம்பிகை எங்கும் நிறைந்தவளாய், முழுமுதற் பொருளாய், உயிர்களுக்கு உயிராய், நேர்மையான அருளாணையைச் செலுத்துபவளாய், நலந்தரும் மாதா வாய், சர்வமங்கலையாய் விளங்குகிருள் என்பது அவளு டைய செவ்வண்ணத்தால் பெறப்படும் குறிப்பாகும். அது வெறும் சிவப்பு அன்று; தேசுடைய சிவப்பு. ஒளி விடும் சிவப்பு; கண்ணைக் குளிர்விக்கும் சிவப்பு: அந்தச் சிவப்புக்குத்தான் முதல் பாட்டில் ஆறு உவமைகளைச் சொன்னர் அபிராமிபட்டர்.

உதிக்கின்ற செங்கதிர், உச்சித் திலகம்,
உணர்வுடையோர்
மதிக்கின்ற மாணிக்கம், மாதுளம் போது,
மலர்க்கமலை
துதிக்கின்ற மின்கொடி, மென்கடிக் குங்கும
தோயமென்ன
விதிக்கின்ற மேனி அபிராமி என்றன்
விழுத்துணையே.

[எழுகின்ற செஞ்சூரியன், உச்சியிலே மங்கையர் வைத்துக் கொள்ளும் குங்குமத்திலகம், அறிவுடையவர்கள் மதிப்பிடுகின்ற மாணிக்கம், மாதுளம்பூ, தாமரை மலரில் உள்ள திருமகள் துதிசெய்கின்ற மின்னல்கொடி, மெல்லிய நறுமணமுடைய குங்குமக் கலவை நீர் என்று அன்பர்கள் உவமையாக எடுத்துச் சொல்கின்ற திருமேனியை உடைய அபிராமியம்மை எனக்கு மேலான துணை யானவள்.

உச்சி—தலையின் உச்சி. உணர்வு-ஞானம்; அறிவு. கடி-நறுமணம். தோயம்—நீர்.]

அபிராமி என்பதற்குப் பேரழகுடையவள் என்பது பொருள். அம்மையின் எழில் கண்டாரைத் தன்வயமாக்கிப் பேரின்பத்துள் ஆழ்த்துவது. "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என்று இந்த அந்தாதியில் பின்னே வருகிறது.

"இத்தகைய அம்பிகை என் விழுத்துணை" என்று பாட்டை முடிக்கிறார் ஆசிரியர்,

விழுத்துணை—மேலான துணை. மனிதர்களுக்கு வாழ்க்கையில் பல வகையான துணைகள் இருக்கின்றன. ஜடமான கருவிகளும், உயிருடையவையும், மனிதர்களும் வெவ்வேறு வகையில் துணையாக உதவுகின்றன. நெடுந்

தூரம் நடப்பவர் காலுக்குச் செருப்புத் துணை. வெயிலில் நடப்பவருக்குக் குடை துணை. ஆற்றைக் கடப்பவருக்கு ஓடம் துணை. போர் புரிபவனுக்குப் படைக்கலம் துணை. சட்டி பானை வனைபவர்களுக்குத் தண்ட சக்கரங்கள் துணை. இவை யாவும் ஜடப்பொருள்கள். பால் வேண்டி நிற்பாருக்குப் பசுத்துணை. இராக்காவல் வேண்டுமானால் நாய் துணை. நெடுந்தூரம் போகக் குதிரை துணை. இவை யாவும் உயிருடைய ஜீவன்கள். குழந்தைக்குத் தாய் துணை; தகப்பனும் துணை. மனைவிக்குக் கணவன் துணை. குடிகளுக்கு மன்னன் துணை. இவர்கள் மனிதர்கள். இந்த மூவகைத் துணைகளும் பொதுவாக மனிதனுடைய உடம்பைப் பாதுகாக்கவும் அதைக் கொண்டு நல்வாழ்வு வாழவும் உதவி புரிகின்றன.

உடம்பு, உள்ளம், உயிர் என்ற மூன்றில் ஒன்றை விட ஒன்று சிறந்தது. உள்ளத்தில் கலக்கம் வந்தாலும் அச்சம் வந்தாலும் பாதுகாத்து நலம் செய்யும் துணைவர்கள் இருக்கிறார்கள். ஆசிரியர்களும் ஞான குருக்களும் உள்ளத்துக்குத் துணையாக இருக்கிறார்கள். உடம்புக்குத் துணையாக நிற்பவர்களை விட உள்ளத்துக்குத் துணையாக நிற்பவர்கள் சிறந்தவர்கள், உடம்பைவிட உள்ளம் சிறந்தது, ஆகையால். அதுபோலவே உயிருக்குத் துணையாக யாரேனும் இருந்தால் அவர்கள் எல்லாத் துணைவர்களையும்விட மேலானவர்கள் என்று உறுதியாகக் கூறலாம். அவர் யார்?

நம்முடைய உயிர் உடலில் இருக்கிறது. உயிரும் உடலும் சேர்ந்தே மனிதன் ஆகிறான். உயிருள்ள உடம்பைப் பிறப்பித்தவர்கள் தாயும் தந்தையும். அவர்கள் இந்த உயிருக்குத் துணையாவார்களா என்று பார்த்தால், இல்லை என்றுதான் சொல்லவேண்டியிருக்கும். காலன் உயிரைக் கொண்டு போகும்போது தாய் தந்தையர் அதைக் காப்பாற்ற இயலாது. ஆருயிர்க்

காதலன், ஆருயிர்க் காதலி என்று பாராட்டி அன்பு செய்யும் காதலர்களை உயிர்த்துணை என்று சொல்லலாமா? அவர்கள் வாழ்க்கைத் துணையேயன்றி உயிர்த் துணை ஆக மாட்டார்கள். காதலி தன் காதலன் உயிரைக் காப்பாற்ற முடியாது. அப்படியே காதலனும் தன் காதலி உயிரைக் காப்பாற்ற முடியாது.

உயிர் இந்த உடம்போடு இருக்கும் போது உடன் இருந்து உணவு தந்து வளர்க்கிற தாய்தான் எல்லோரையும் விடச் சிறந்த அன்புடையவள். அவள் இந்த ஒரு பிறவியில் தன் அன்பைச் சொரியலாம். நமக்கு முன் அவள் இறந்தாலும், அவளுக்கு முன் நாம் இறந்தாலும் அவளுடைய அன்பு நமக்குப் பயன்படாமல் போய்விடும். அப்படியின்றி உயிர் எங்கே சென்றாலும் எந்தப் பிறவி எடுத்தாலும் அங்கும் வந்து நமக்குத் துணை நிற்கும் யாரேனும் இருந்தால் அவளை உயிருக்குத் துணையென்றும் மேலான துணையென்றும் சொல்லலாம். அவள் தான் அபிராமி.

அவள் எக்காலத்தும் எல்லா இடத்தும் எல்லா உயிர்களுக்கும் தாயாக விளங்குகிறாள். அவளுடைய கருணைக்கு எல்லை இல்லை. ஆருயிர்களுக்குத் தாயாக விளங்கும் இந்தப் பெருமை எல்லாவற்றையும் விடச் சிறந்தது. அதனால்தான் லலிதாம்பிகையின் நலங்களை யெல்லாம் சொல்லப் புகுந்த திருநாம வரிசைகளில் முதல் திருநாமமாக "ஸ்ரீ மாதா" என்பதை லலிதா சகசிரநாமம் வைத்துப் போற்றுகிறது. நாவுக்கரசர் இறைவனை, "தொடர்ந்து நின்ற என் தாயானை" என்று பாராட்டுவர்.

உயிருக்கு எக்காலத்தும் துணையாக நின்று பாது காப்பவள் அம்மையாதலால் அவளே மேலான துணையாக விளங்குகிறாள். உயிருக்கு மட்டுமா துணை? உடம்புக்கும்

உள்ளத்துக்குங்கூட அவளே துணையாக நின்று அருள் பாலிக்கிறாள். உடம்பின் ஆதாரங்களில் பல உருவங்களாக நின்று பாலிக்கிறாள். உள்ளமாகிய புண்டரீகத்திலே வீற்றிருந்து இயக்குகிறாள். உயிருக்குயிராகி நலம் செய்கிறாள். அதனால் அவளே விழுத்துணை. அவள் ஒருத்தியே விழுமிய துணை; வேறு யாரும் இல்லை. இந்தக் கருத்தினால்தான்,

அபிராமி என்றன் விழுத்துணையே

என்று பாடிப் பாட்டை நிறைவேற்றி மனநிறைவு பெறுகிறார் அபிராமிபட்டர்.

# திரிபுர சுந்தரி

## 1

## வேத உருவினள்

"என்னுடைய விழுமிய துணை அபிராமி" என்று துதித்து முதற்பாட்டை நிறைவேற்றிய அபிராமி பட்டருக்குத் தொடர்ந்து கருத்து ஓடுகிறது. துணையென்றால் துன்புறும்பொழுது வந்து பாதுகாப்பது என்று தோன்றும். அன்னை ஒரு காலத்தில் ஓரிடத்தில் மட்டும் துணையாக வருபவள் அல்லள். அவள் எக்காலத்திலும் எல்லா இடத்திலும் எல்லா உயிர்களுக்கும் துணையாக இருக்கிறாள்.

துணையாக இருக்கும் ஒருவர் நம்மினும் தாழ்ந்தவராக இருக்கலாம்; நமக்குச் சமானமானவராக இருக்கலாம்; நம்மினும் உயர்ந்தவராக இருக்கலாம். வேலைக்காரனைத் துணை கூட்டிக்கொண்டு ஒரு செல்வர் ஊர்ப்பயணம் போகிறார். அவருக்குத் துணையாகச் செல்லும் ஏவலாளன் அவரை விடத் தாழ்ந்தவன். நாய்கூட நமக்குத் துணையாக வருவதுண்டு. இரண்டு நண்பர்கள் துணை சேர்ந்து வழிநடக்கிறார்கள்; அவர்கள் ஒருவருக்கு ஒருவர் துணையாக இருக்கிறார்கள். அவர்கள் இருவரும் ஒத்தவர்கள். தந்தையுடன் மகன் வழி நடக்கிறான்; அவன் இளம் பிராயமுடையவன். அவனுக்குத் துணையாகச் செல்லும் தந்தை அவனைவிட உயர்ந்தவர்.

இந்த வகையில் பார்த்தால் உயிர்களுக்கெல்லாம் துணையாக நிற்கும் பிராட்டியாகிய தேவி எல்லாரினும் உயர்ந்தவள்; நமக்குத் துணையாக வருதல் எவ்வகைச் சக்தி

களிலும் சிறந்த பராசக்தி. உயர்ந்தவர்களைத் தொழுது வணங்குவது வழக்கம். அண்ணன், தமக்கை, தந்தை, தாய், மாமன், மாமி, வயசாற் பெரியோர்கள், ஆசாரியன், துறவி முதலியவர்கள் தொழுதற்குரியவர்கள். ஆனல் இவர்கள் எல்லோரும் சேர்ந்து தொழும்படி நிற்பது தெய்வம். அபிராமி நமக்குத் துணையாக இருப்பதோடு எல்லோரும் தொழும் தெய்வமாகவும் இருக்கிறள். "திக்கற்றவருக்குத் தெய்வமே துணை" என்பது பழமொழி. வேறு யாரும் துணை இல்லாதவர்களுக்கும் துணையாக நின்று அருள் பாலிப்பவள் அம்பிகை; அதனல் அவளைக் காட்டிலும் சிறந்த துணை வேறு இல்லை; உயர்ந்த துணையும் இல்லை. அவள் யாவரும் தொழும் தெய்வமாகவும் இருப்பவள்,

நமக்கு ஒருவர் துணை செய்தால் அவரை நாம் அறிந்துகொள்கிறேம். வேறு ஊரிலிருந்து பணம் அனுப்பி உதவி செய்தாலும் ஒரு சமயம் அவரைக் கண்டு நன்றியைத் தெரிவிக்கலாம். ஆனல் இறைவியோ தோன்ருத் துணையாக விளங்குகிறள். தனுகரணபுவன போகங்களை வழங்கி ஒவ்வொரு கணமும் நம்மைப் பாது காத்தாலும் அவள் இயல்பை யாரும் அறிந்துகொள்வ தில்லை. இதுதான் அவளுடைய மாட்சி.

துணையும் தொழும் தெய்வமும்.

* * *

உயிர்கள் விரும்பிக் கேட்க, அதனல் அம்மை அவற்றிற் குத் துணையாக வந்து உதவுகிறள் என்று சொல்வதற்கு இல்லை. அவளுடைய இயற்கை அது. கதிரவன் வானிலே தோன்றி ஒளிர்வது போலவும், திங்கள் நிலவு வீசுவது போலவும் அவள் தன் அருளை வழங்கி உயிர்களைக் காப் பாற்றுகிறள். "நீ காப்பாற்ற வேண்டும்" என்று விண்

ணைப்பித்துக் கொள்வதையோ, "நீ காப்பாற்றினுயே; உனக்கு நன்றி" என்று பாராட்டுவதையோ அவள் எதிர் பார்ப்பதில்லை. அவள் கருணை அவ்யாஜமானது; எதனையும் நோக்காதது.

இந்தத் தயை உலகில் தாயிடம் இருக்கிறது. அவள் தன் இளங்குழந்தை, "பால் தா" என்று கேட்டு ஊட்டுவதில்லை. குழந்தைக்குக் கேட்கத் தெரியாது. குழந்தை பெரியவனுனல் தன்னைக் காப்பாற்றுவான் என்று எதிர் பார்த்தும் ஊட்டுவதில்லை. எதையும் எதிர் பாராமல் நலம் செய்வது தாயன்பு.

ஒருகால் தன் பிள்ளை தன்னைப் புறக்கணித்தாலும் அதனை எண்ணுமல் அவன் நன்ருக வாழவேண்டும் என்று நினைப்பது தாய்க்கு இயல்பு. "பெற்ற மனம் பித்து; பிள்ளை மனம் கல்லு" என்று ஒரு பழமொழி வழங்குகிறதல்லவா?

அம்பிகையும் நாம் அவளை எண்ணுமல் புறக்கணித்தாலும் நமக்கு வேண்டியவற்றை அருள்வதை நிறுத்துவதில்லை. "கடவுளே இல்லை; இருந்தால் என் தலையில் இடி விழச் செய்யட்டும்" என்று ஒருவன் சொன்னுல், அதற்காக அவனிடம் சினம் கொள்வதில்லை. அவனையும் அவள் காப்பாற்றுகிருள். இது சிறந்த தாய்ப்பண்பு அல்லவா?

தாயின் உருவம் தயை. தயையின் பிழம்பு தாய். "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" என்று மணிவாசகர் தாயைத் தயைக்கு எடுத்துக்காட்டாகச் சொல்வார். எல்லாத் தாய்களையும்விடப் பெரிய தாய் அம்பிகை. அன்னை, அம்மை, அம்பா, அம்பிகை என்று சொன்னுல் உலகத்து அன்னைகளைச் சார்வதில்லை. அடையின்றிச் சொல்லும்

போதெல்லாம் அது பராசக்தியையே குறிக்கும். அவளே தயையின் பிழம்பு. அவளுடைய அருட்பெருக்கே அங்கங்கே ஆறு போலவும் கால்வாய் போலவும் ஓடுகிறது. இதை உணர்ந்தே அம்பிகையின் சகசிரநாமம் எடுத்தவுடன் அவளை, "ஸ்ரீமாதா" என்று துதிக்கத் தொடங்குகின்றது. அந்தத் திருத்தாய் உலகுக்கெல்லாம் தாய். அவளிடமுள்ள அகடிதகடனு சாமர்த்தியங்கள் பலவானுலும் எல்லாவற்றினும் சிறந்ததாக நிற்பதும் ஆத்மாக்களுக்குப் பயன் படுவதும் அருள். அந்த அருளின் நிலையம் தான் என்பதை அறிவுறுத்தவே அவள் பெண்மைக் கோலத்தில் தாயாக விளங்குகிருள்.

அவளுடைய பெருமைகள் பலவற்றையும் தெரிந்து கொண்டாலும் அவள் அருள் நிரம்பிய தாயாக நிற்கிருள் என்பதைத் தெரிந்து கொள்ளாவிட்டால் ஒரு பயனும் இல்லை. அதனுல்தான் சகசிர நாமம் எல்லா நாமங்களுக்கும் முதலாக 'ஸ்ரீமாதா' என்பதை வைத்துப் போற்றுகிறது.

அது மாத்திரம் அன்று. ஆயிர நாமங்களையும் சொல்லப் புகுந்த ஒருவன் இடையிலே தடைப்பட்டு நிற்கிருன். சொன்ன அளவுக்கு அவனுக்குப் பயன் உண்டு. முதல் நாமத்தைச் சொன்னுலே போதும்; எது உயிராக நிற்கிறதோ அதைத் தெரிந்து கொண்டவனுகிருன். அதற்கு ஏற்ற வகையில் இருப்பது அந்தத் திருநாமம்.

இவற்றையெல்லாம் எண்ணிய அபிராமிபட்டர் அவளைத் துணையென்று சொல்லுவதோடு நிறைவு பெற வில்லை; உயர்ந்த துணையென்பதைக் காட்ட, "தொழுந் தெய்வம்" என்ருர். அப்போதும் அவர் திருப்தி அடைய வில்லை. அவ்யாஜமான கருணையுடையவள் அவள் என்

பதைச் சொல்ல வேண்டுமென்று விரும்புகிறார். நாம் அவளை உணராவிட்டாலும் நம்மை அவள் உணர்ந்து அருள் செய்கிறாள் என்பதைக் குறிப்பிக்க விரும்புகிறார்.

**பெற்ற தாயும்**

என்று பாட்டு வருகிறது.

**துணையும் தொழும் தெய்வமும் பெற்ற தாயும்.**

* * *

**தெ**ய்வம் என்றும் தாய் என்றும் பெரியவர்கள் சொல்லுகிறார்கள். அதனால் நாமும் சொல்கிறோம். அந்தப் பெரியவர்களுக்கு ஆர் சொன்னார்கள்? அவர்கள் தம்முடைய அநுபவத்தால் உணர்ந்திருக்கலாம். ஆனால் திடீரென்று அவர்களுக்கு அநுபவம் வந்துவிடவில்லையே! முதலில் அம்பிகையை வழிபட்டுச் சாதனங்களில் ஈடு பட்ட பிறகே அநுபவம் சித்தித்திருக்கும். அவ்வாறு வழிபடுவதற்கு முன்பு அவளைத் தெய்வமென்று தெளிந்து தானே பக்தி செய்திருக்க வேண்டும்? அவர்களுக்கு அந்தத் தெளிவைத் தந்தவர் யார்? அவர்களுடைய ஆசாரியர்கள் என்று சொல்லலாம். அந்த ஆசாரியர் களுக்கு அறிவித்தவர்கள் யார் என்ற கேள்வி அடுத்தபடி எழும். இப்படிக் கேட்டுக்கொண்டே போனால் முடிவே இராது. முதல் முதலாக அவளைத் தெய்வமென்று தெளிந் தவர் எப்படித் தெரிந்து கொண்டார் என்று ஒரே கேள்வியாகக் கேட்டுவிடலாம்.

ஒன்று, இறைவியே தெரிவித்திருக்க வேண்டும்; அல்லது தன்னைப்போல அநாதியாக இருக்கும் ஒரு பிரதி நிதி வாயிலாகத் தெளிய வைத்திருக்க வேண்டும். ஆம்; அம்பிகை தன்னை அறியாதவர்கள் அறியும்படி செய்ய ஒரு பழைய விளக்கை வைத்திருக்கிறாள். அதை அபௌருஷேயம் என்றும், அநாதியென்றும் சொல்வார்கள்

அதுதான் வேதம். அம்பிகையே அதன் வடிவாக நின்று நமக்கு அறிவுறுத்துகிருள்; அதனூடே நின்று இலங்குகிருள்.

வேதத்துக்கும் அம்பிகைக்கும் உள்ள தொடர்பை அடுத்தபடி விளக்குகிருர் ஆசிரியர்.

அவள் வேத சாகைகளாகப் படர்ந்திருக்கிருள். வேதம் பெரிய கற்பக தருவைப் போன்றது. மரத்தின் பெருமை அதன் பரந்த கிளைகளால் தெரியவரும். ஆல மரம் பெரியது என்று சொல்கிறோம். ஏன்? அது,

"அண்ணல் யானை
அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு
மன்னர்க் கிருக்க நிழலாகும்"

வண்ணம் பல கிளைகளை விட்டுப் படர்ந்திருக்கிறது. அதுபோல வேதமும் சாகைகளால் விரிந்தது. அதனால், "அனந்தாவை வேதா:" என்று பெரியோர் கூறுவர். கம்பரும்,

"அலகில்லன உள்ளன வேதம் என்பன"

என்று பாடினர்.

பல பணைகளையுடைய வேதம் சுருதி எனப்படும். தமிழில் கேள்வி யென்பர்.

"நான்மறைக் கேள்வி நவில்குரல் எடுப்ப"

என்பது பரிபாடல்.

இவ்வாறு சாகைகளால் பரந்து விரிந்திருக்கும் வேதத்தில் அந்தக் கிளைகளாகவே இருந்து அவரவர்களுக்கு வேண்டியதை அறிவுறுத்துகிருள் ஸ்ரீ மாதா.

**சுருதிகளின் பணையும்.**

* * *

வேதத்தில் கர்மம், உபாசனை, ஞானம் என்று மூன்று பிரிவுகள் உண்டு. இம்மூன்றிலும் சிறந்தது ஞானபாகம். அது வேதத்தின் முடிவில் இருப்பது. அதுவே உபநிடதம். உபநிடதங்களை வேதசிரஸ் என்பர். ஞானமயமான அம்மை உபநிடதங்களே தன் வடிவாக இலங்குகிறாள். ஆதலின் அவளை வேதத்தின் உச்சிப் பகுதி என்று சொல்லலாம். மரத்தின் உச்சியில் இருப்பது கொழுந்து. ஆதலின் வேதமரத்தின் கொழுந்து அவள் என்று சொல்கிறார்,

## சுருதிகளின் கொழுந்தும்.

உபநிடதங்களைக் கொழுந்து என்பதில் ஒரு நயம் இருக்கிறது. பழைய மரத்தில் உள்ள கொழுந்து புதுமையைக் காட்டுவது. மரம் பழையது என்பதை அதன் வயிரமும், அதில் புதிய விளைவும் உண்டு என்பதை அதன் கொழுந்தும் காட்டும். பழமையும் புதுமையும் ஒருங்கே பொருந்திய மரத்தில் வயிரமும் கொழுந்தும் அவற்றிற்கு அடையாளம். அப்பர் சுவாமிகள் இறைவன் பழம் பொருளாகவும் புதுப் பொருளாகவும் இருக்கிறான் என்பதை,

"குருகாம் வயிரமாம்"

என்பதனால் புலப்படுத்துகிறார்.

வேதத்தின் மற்றப் பகுதிகள் காலத்துக்கும் இடத்துக்கும் அதிகாரிகளுக்கும் ஏற்பப் பயன்படும். ஆனால் வேத சிரசாகிய உபநிடதமோ யாவருக்கும் உரிய மெய்ஞ்ஞானத்தை உணர்த்தி என்றும் புதுமையாக விளங்குவது. ஆதலின் இளமையும் அழகும் உடைய கொழுந்தாக அதைச் சொன்னார்.

* * *

அம்பிகையை வேதமென்னும் மரத்தின் இடையிலே உள்ளனவாகிய கிளைகளாகவும் மேலே உள்ளதாகிய கொழுந்தாகவும் சொன்னார். ஒரு மரம் பல கிளை விட்டு வளரவும், மலர் காய் கனிகளை உண்டாக்கவும் வல்லதாக இருப்பதற்குக் காரணம் அதன் வேர் உரத்துடன் நிலவுவதுதான். வேரில் பலம் இல்லையென்றால் மரம் நன்றாக வளராது; பல நாள் உயிருடன் நில்லாது.

வேதமோ அநாதி காலமாக உள்ளது. அதன் வேர் மிக்க உரம் பெற்றதாக இருந்தால்தான் இப்படி இருக்க முடியும். அந்த வேர் எது? அம்பிகையே அதனை வேராக நின்று தாங்குகிறாளாம். வேர் புறத்தே புலப்படாமல் நிலத்திற்குள் மறைந்து பதிந்திருக்கும். வேதத்தின் சாகைகளில் அம்பிகையைப் பற்றிய செய்திகள் தெளிவாகக் காண முடியாமல் இருக்கலாம். ஆனாலும் வேதத்தின் தனி மூலமாக நின்று அதைத் தாங்குபவள் அம்பிகையே. வேதத்துக்கு மூலமாக இருப்பதனால் அவளை, "வேத ஜனனி" என்று சகஸ்ரநாமம் துதிக்கிறது. ஆகவே இங்கே ஆசிரியர்,

**சுருதிகளின் பதிகொண்ட வேரும்**

என்று பாடினார்.

வேதத்துக்கு மூலமாக இருப்பது பிரணவம். அதிலிருந்தே எல்லாம் தோன்றின. ஆதலின் வேத மூலமாகிய பிரணவமாக் நிற்பவள் அபிராமி என்று கொள்வதும் பொருத்தமாக இருக்கும்.

குமரகுருபர சுவாமிகள் மீனாட்சியை,

"பழமறையின் குருந்தே வருக"

என்று பாடுகிறார்;

"தொடுக்குங் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே"

என்று பாராட்டுகிறார்.

வேதத்தின் அடி நடு முடியாகிய மூன்ருகவும் தேவி ஒளிர்கிருள். இதைச் சொல்ல வருகிறவர் அடி, நடு, முடி என்ருே முடி, நடு, அடி என்ருே சொல்லியிருக்கலாம். அவற்றில் ஒரு முறை இருக்கும். ஆனல் நடு, முடி, அடி என்பது போல, பணை, கொழுந்து, வேர் என்று சொன்ஞர். இதற்குக் காரணம் என்ன?

மரத்தை அணுகும்போது நமக்கு முதலில் கண்ணில் படுபவை அதன் கிளைகளே, நெடுந்தூரத்திலிருந்து பார்த்தாலே அடர்த்தியான தழைகளையுடைய கிளைகள் தெரிகின்றன. நெருங்கி வந்து அண்ணுந்து கவனித்துப் பார்த்தால் அதன் உச்சி தெரியும் பிறகு அதன் அடியில் அமர்ந்து தோண்டி ஆராய்ந்தால்தான் வேர் தெரியும். முதலில் தெரிவது கிளை; அப்பால் தெரிவது கொழுந்து; பிறகு முயன்ருல் தெரிந்து கொள்வது வேர். இந்த முறை பற்றி வைத்தார்.

வேதத்தின் திறத்திலும் இந்த முறையே பயனைத் தருவது. முதலில் அதன் சாகைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு பயனைத் தரும் உபநிடதங்களை உணர வேண்டும். சிரவண மனன நிதித்தியாசங்களுக்குப் பிறகு நிஷ்டையில் இருக்க வேதத்தின் வேராகிய பிரணவம் உதவுகிறது. இந்த வகையிலும் பாட்டில் உள்ள முறை பொருத்தமாக இருக்கிறதல்லவா?

துணையும் தொழும் தெய்வமும்
பெற்ற தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட
வேரும்,

[பணை—கிளை. பதிகொண்ட-பதிதலைக்கொண்ட; அடியிலே ஆழப் பதிந்த.]

அபிராமி அந்தாதியில் பின்னே ஒரு பாடலில்,

"அகமகிழ் ஆனந்த வல்லி அருமறைக்கு
முன்னாய் நடுவெங்கு மாய்முடி வாய முதல்வி"

என்று பட்டர் பாராட்டுகிறார்.

இவ்வாறு விளங்கும் அம்பிகையின் அடையாளங்களை அடுத்தபடி சொல்ல வருகிறார்.

2

## திருக்கோலம்

அம்பிகையின் சமுதாய சோபையை முதல் பாட்டில் சொன்ன அபிராமி பட்டர் இரண்டாவது பாட்டில் அந்தப் பெருமாட்டியின் திருவுருவத்தைக் கூர்ந்து நோக்கித் தியானம் பண்ணுவதற்குரிய அடையாளங்களைச் சொல்ல வருகிறார். சுருதிகளின் பணையென்று, படர்ந்த கிளைகளை முதலில் சொன்னதுபோல், இரு புறமும் விளங்கும் திருக்கரங்களை முதலில் வருணிக்கிறார்.

**பனிமலர்ப்பூங்**
**கணையும் கருப்பஞ் சிலையும் மென் பாசாங்குசமும் கையில்**
**அணையும் திரிபுர சுந்தரி.**

அம்பிகையின் நான்கு திருக்கரங்களிலும் உள்ள பொருள்களைக் கூறுகிறார். அழகே திருவுருவாக அமர்ந்த அன்னையின் திருக்கரங்களில் அழகிய பொருள்கள் இருக்கின்றன. அவளுடைய வலக்கரங்கள் இரண்டில் மேல் கரத்தில் ஐந்து மலரம்புகளையும் அதற்கு இணையான மேல் இடக்கரத்தில் கரும்பாகிய வில்லையும் வைத்திருக்கிறாள். பாசத்தைக் கீழ் இடக்கையிலும் அங்குசத்தைக் கீழ் வலக்கரத்திலும் வைத்துக்கொண்டிருக்கிறாள். இவை யாவும் படைக்கலங்களாக உதவு.

பவை. இந்த நான்கையும் வைத்திருப்பதனுல் நான்கு திருநாமங்கள் அம்பிகைக்கு அமைந்தன. அவை, பஞ்ச தன்மாத்ர ஸாயகா (11), மனோரூபேக்ஷு கோதண்டா (10), ராகஸ்வரூப பாசாட்யா (8) க்ரோதாகாராங்கு சோஜ்வலா (9) என்று லலிதா சகசிரநாமத்தில் வருகின்றன.

இந்த நான்கு படைகளும் சிலவற்றைக் குறிக்கும் அடையாளப் பொருள்கள் என்பதை இந்தத் திருநாமங் கள் புலப்படுத்துகின்றன. செங்கரும்பாகிய வில் மனத் தைக் குறிக்கிறது. எண்ணுதலையும், அதனை ஒழிதலையும் உடைய மனத்தையே அம்மை வில்லாக ஏந்தியிருக்கிருள். மனம் இந்திரியங்களின் வாயிலாக நுகர்ச்சியைப் பெறு கிறது; இந்திரியங்களால் நுகரப்படுபவற்றைப் புலன்கள் என்பார்கள். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் ஐம்பொறிகளால் நுகரப்படுவன; இவற்றைத் தன்மாத்திரைகள் என்று வடமொழியில் கூறுவர். இவை களே அம்பிகையின் திருக்கரத்தில் கணைகளாக உள்ளன.

அம்பிகையின் திருக்கரத்தில் உள்ள அங்குசம் குரோ தம் அல்லது வெறுப்பின் அடையாளம்; ராகம் அல்லது விருப்பின் உருவமாக அமைந்தது பாசம் அல்லது கயிறு. விருப்பு வெறுப்புக்களையே பாசாங்குசமாகத் தரித்தவள் எம்பெருமாட்டி.

இந்த நான்குக்கும் அதிதேவதைகள் உண்டு. பாசத் துக்கு அதிஷ்டான தேவதை அச்வாரூடை; அங்கு சத்துக்கு ஸம்பத்கரி; கரும்பு வில்லுக்கு மந்த்ரிணி: மலர்ப் பூங்கணைக்குத் தண்டநாதா என்ற வராகி.

கரும்பு வில்லும் மலர்க்கணையும் உடையவன் காமன். அவற்றையே அம்பிகையும் கொண்டிருக்கிருள். செங் கரும்பை வில்லாகவும், தாமரை, மாம்பூ, அசோகமலர்,

முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து மலர்களையும் அம்பு களாகவும் வைத்துக்கொண்டு உலகைத் தன் வயப்படுத் தும் ஆற்றலுடையவன் காமன். அவன் திருமாலின் மகன். அவனுக்கு இந்தப் படைக்கலங்களை வழங்கியவள் அம்பிகையே. பாசமும் அங்குசமும் கணபதியின் திருக் கரத்தில் உள்ளவை. அப்பெருமான் சிவபிரானுடைய குழந்தை. அவனுக்கு அந்தப் படைக்கலங்களை வழங்கிய வள் திரிபுரசுந்தரியே.

உலகத்தைக் காமத்தின் வசப்படுத்தும் மாயா சொரூபியும், அதனின்றும் நீக்கும் ஞானசொரூபியுமாக விளங்குகிறவள் அம்மை. முதல் வேலையைக் காமனால் நிகழ்த்துகிறாள்; அவனுக்குத் தன் படைக்கலங்களை உதவி அச்செயல் நிகழ அருள் பாலிக்கிறாள். அப்படியே ஞானக் கொழுந்தாகிய கணபதியினால் உலகம் ஞானம் பெறத் திருவருள் பாலிக்கிறாள்; அப்பெருமானுக்குத் தன் பாசாங்குசங்களின் அம்சத்தை வழங்கியிருக்கிறாள்.

வீரம் மிக்க ஒருவர் மற்றொருவரை வென்றால் தோல்வியுற்றவருடைய படைக்கலங்களை வென்றவர் கைக்கொள்வது வழக்கம். அம்பிகை காமத்தை வெல்லும் ஆற்றலைத் தன் அடியாருக்குத் தருகிறவள். காமனுடைய படைகளைத் தன் கையில் கொண்டிருப்பது இதனைப் புலப் படுத்துகிறது. அம்பிகையின் இந்தக் கரங்களைத் தியானிப் பவர்கள் காமத்தால் அல்லல் அடையமாட்டார்கள்.

அகங்காரத்தை யானையாகச் சொல்வது வழக்கம். அதனைப் போக்குகிறவள் அம்பிகை. யானையை அடக்கும் பாசமும் அங்குசமும் அவள் திருக்கரத்தில் இருப்பதன் பொருள் இது என்று கொள்ளலாம். அகங்காரம் போக வேண்டுமானால் அம்பிகையைப் பாசாங்குசம் ஏந்தியவ ளாகத் தியானிக்க வேண்டும்.

'கையில் பனிமலர்ப் பூங்கணையும் (குளிர்ந்த மலராகிய பொலிவுபெற்ற அம்புகளும்). கருப்பஞ்சிலையும் (கரும்பு வில்லும்), மென்பாசாங்குசமும் (மென்மையான பாசமும் அங்குசமும்)அணையும் (தங்கிய) திரிபுரசுந்தரியே எனக்குத் துணையும், தொழும் தெய்வமும், வேதத்தின் நடுமுடி அடியாக இருப்பவளுமாக உள்ளாள் என்பதை நாம் அறிந்தோம்' என்று இரண்டாவது பாடலைப் பாடுகிறார் அபிராமிபட்டர்.

லலிதா பரமேசுவரியை மகா திரிபுரசுந்தரி என்று சொல்வர். திரிபுர சுந்தரி என்பதற்குத் திரிபுரங்களின் தலைவியாகிய பேரழகி என்பது பொருள். மூன்று என்ற எண்ணிக்கையுள்ள தொகுதிகள் யாவுமே திரிபுரம் எனப் படும். ஆக்கல், அளித்தல், அழிப்பு என்னும் தொழில் மூன்று; சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குணம் மூன்று; சந்திரன், சூரியன், அக்கினி என்னும் சுடர் மூன்று; ஸ்ரீ சக்கரத்தில் உள்ள கோணங்கள் மூன்று; ரேகைகள் மூன்று; பூபுரம் மூன்று; அந்தர்மத்யபாதலமாகிய அடுக்கு மூன்று; மனம் புத்தி சித்தம் என்பவை மூன்று; பீடங்கள் மூன்று; இடைகலை பிங்கலை சுழுமுனை என்னும் நாடிகள் மூன்று. இவை முதலிய மும்மைகள் பலவற்றின் உருவமாக இருப்பவளும் அம்பிகையாதலின் திரிபுர சுந்தரி என்ற திருநாமம் அவளுக்கு அமைந்தது.

'நான்கு திருக்கரங்களிலும் பாசம் முதலியவற்றை ஏந்தித் திரிபுர சுந்தரியாக அமர்ந்து தியானத்துக்கேற்ற திருவுருவம் படைத்த பெருமாட்டியே சப்தப் பிரபஞ்சத் தின் ஆதியாகிய வேதசொரூபியாய் விளங்குகிறாள். அவளே எனக்கு எப்போதும் எவ்விடத்தும் துணையாக இருக்கிறாள்; நான் தொழும் தெய்வமாக இருக்கிறாள்; என்னையும் பிற உயிர்களையும் பெற்ற தாயாகவும் விளங்குகிறாள்.'

இவ்வாறு பாடுகிறார் அபிராமி பட்டர்.

துணையும் தொழும்தெய்வ மும்பெற்ற
தாயும் சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட
வேரும், பனிமலர்ப்பூங்
கணையும் கருப்பஞ் சிலையும்மென்
பாசாங் குசமும்கையில்
அணையும் திரிபுர சுந்தரி
ஆவது அறிந்தனமே.

[பணை - கிளை. பதிகொண்ட - பதிதலைக் கொண்ட, பனி - குளிர்ச்சி. பூ - பொலிவு. கணை - அம்பு. கரும்பு சிலை; கருப்பஞ்சிலை; அம், சாரியை; அழகிய என்றும் கொள்ளலாம். சிலை - வில். அணையும் - சார்ந்து விளங்கும், திரிபுரசுந்தரி, துணை முதல் வேர்வரையில் உள்ள பொருள் ஆவதை அறிந்தோம் என்று கூட்டவேண்டும்.]

# புகல் அடைந்தேன்

திரிபுர சுந்தரியே துணையும், தொழும் தெய்வமும், சுருதிகளின் பணையும், கொழுந்தும், வேரும் என்று அறிந்ததாகச் சொன்ன அபிராமி பட்டர், அந்த அறிவால் பயன் பெற்றதை அடுத்த பாட்டில் சொல்ல வருகிறார்.

மனிதன் தன் வாழ்வில் எத்தனையோ விஷயங்களைத் தெரிந்துகொள்கிறான். சின்னஞ்சிறு குழந்தைப் பிராயம் முதற்கொண்டே, "அது என்ன? இது என்ன?" என்று கேட்டுக் கேட்டுப் பலவற்றை அறிந்துகொள்கிறான். அவன் கேட்கும் கேள்விகளும், அறியும் பொருள்களும் அவசியமானவையா என்பதை ஆராய்ந்தால், வேண்டாதவற்றையே மிகுதியாக அவன் தெரிந்து கொள்கிறான் என்பது தெரியவரும். புத்தி என்னும் அறையில் அழுக்கான பண்டங்களையெல்லாம் அடைத்துக்கொள்வதனால் புத்தியும் அழுக்காகிறது; வாழ்வும் அழுக்காகிறது. எதை அறிய வேண்டுமோ அதை அறிய வேண்டும். நாம் எத்தனை பொருள்களைக் கண்டாலும் கண்ட காட்சியளவிலே நின்று விடாமல் மேலும் ஆராய்ந்து மெய்ப்பொருள் இன்னதென்று தெரிந்து கொள்ள வேண்டும்; அதுதான் உண்மையறிவு.

> "எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்ப தறிவு"

என்பது திருக்குறள்.

அம்பிகையின் திருவருள் இருந்தால் அறிய வேண்டியவற்றை அறியும் திறம் வரும். இல்லையானால், பைத்தியக்

காரன் ஓட்டை உடைசல்களை யெல்லாம் பொறுக்கிச் சேர்த்துச் சுமப்பதுபோல நம்முடைய மூளையில் பயனற்ற பொருள்களை ஏற்றிக்கொண்டு திண்டாட வேண்டி வரும். அபிராமிபட்டர் எதைத் தெரிந்துகொள்ள வேண்டுமோ அதைத் தெரிந்துகொண்டார். நமக்குத் துணையாக இருக்கும் தெய்வம் மகாமாதாவாகிய திரிபுரசுந்தரி என்ற உணர்வு வந்தது.

அறிய வேண்டிய துறைகளை அறிந்துகொண்ட அளவில் நின்றுவிட்டால், பெற்ற அறிவுக்குப் பயன் இல்லை. ரெயில் வண்டி எந்த நேரத்தில் புறப்படுகிறது, எப்போது குறிப் பிட்ட ஊரை அடைகிறது என்பவற்றைத் தெரிந்து கொள்வது எதற்காக? அந்த வண்டியில் ஏறி ஊருக்குப் போவதற்காகத்தான். ஊர்ப்பயணம் செய்யாதவன் வண்டி புறப்படும் நேரம் முதலியவற்றைத் தெரிந்துகொண்டும் பயன் அடையாதவன்.

பலர், நூல்களைப் படித்து உலகம் நிலையாதது என்பதை யும், குருநாதன் கிருபையைப் பெற்றால்தான் ஆத்மானந்தம் கிடைக்கும் என்பதையும் தெரிந்துகொண்டிருப்பார்கள்; பிறருக்கும் எடுத்துச் சொல்வார்கள். ஆனால் தாம் ஒன்றும் செய்யமாட்டார்கள். அவர்கள் கற்ற கல்வியினால் பயன் என்ன?

> "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தான்அடங்காப்
> பேதையிற் பேதையார் இல்"

என்பது திருக்குறள். அத்தகையவர் முட்டாள்களில் பெரியவர் என்று சொல்கிறது அது.

ஆதலின் அறிந்ததைப் பயன்படுத்திக்கொண்டு செயலில் ஈடுபடவேண்டும். அப்போதுதான் எதனைப் பெற வேண்டுமோ, அந்தப் பேறு கிடைக்கும். பெண் ஒருத்தியின் படத்தை வைத்துக்கொண்டு ஒரு குமரன், "நான் இவளைத்

திருமணம் செய்துகொண்டுவிட்டேன்'' என்று சொல்ல இயலுமா? அந்தப் படத்தில் உள்ள பெண்ணின் பெற்றோரை அணுகிப் பெண்ணையும் கண்டு முயற்சி செய்தால்தான் திருமணம் புரிந்துகொள்ள முடியும்.

திரிபுர சுந்தரியே துணையென்பதைத் தெரிந்துகொண்ட பிறகு அப்பெருமாட்டியின் திருவடியைப் பற்றிக் கொண்டார்.

**அறிந்தேன் எவரும் அறியா மறையை;**
**அறிந்துகொண்டு**
**செறிந்தேன் உனது திருவடிக்கே.**

தமக்குத் துணையாக இருப்பவர்கள் தாரம், தமர், மக்கள் என்று எண்ணி உலக இயலில் ஈடுபட்டவர்களுக்கு இந்த இரகசியம் தெரியாது. அம்பிகையே விழுத்துணை என்ற மறையை உணர்பவர்கள் மிக அரியர். அந்த உண்மை எவரும் அறியா மறை. "அந்த இரகசியத்தை அறிந்து கொண்டேன்; அதன்பின் உன்னுடைய திருவடிக்கே சரண மென்று புகல் புகுந்து பொருந்தினேன்'' என்கிறார்.

அறிய வேண்டியதை அறிந்ததற்குப் பயன் அம்பிகை யின் அடியைச் சார்தல்.

'கற்றதனால் ஆய பயன்என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''

என்று குறள் கேட்கிறதல்லவா?

யாரும் அறியா மறையை அறிந்து அதைப் பயன் படுத்திக்கொண்டார். ஓரிடத்தில் புதையல் இருக்கிற தென்று இரகசியமாக உணர்ந்தவன், உடனே அதை எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளத் தொடங்குவது போல இவரும் செய்தார். தேவியினது திருவடியே சாரவேண்டிய

இடம் என்பதைத் தெரிந்து அதனைப் பற்றிக்கொண்டார்.

திருவடிதான் பக்தர்களுக்குத் துன்பம் போக்கி இன்பத்தைத் தருவது. அம்பிகையின் மலரடி, பற்றிக்கொள்ளும் அடியவர்களுக்கு மெத்தென்று இருந்தாலும், எல்லாவகைத் துன்பங்களுக்கும் உரமான கவசமாக இருந்து பாதுகாப்பது. அடியைப் பற்றிக்கொள்வதனால்தான் பக்தர்களுக்கு அடியார்' என்ற பெயர் வந்தது. ''பாதம் அல்லது பற்றிலர் பற்றிலார்'' என்று கம்பர் பாடுவார்.

''திருவடிக்கே செறிந்தேன்'' என்று ஏகாரம் போட்டுப் பாடுகிறார். அது பிரிநிலை ஏகாரம். வேறு எதனோடும் செறியாமல் திருவடியினிடமே பற்றுக்கொண்டு புகல் அடைந்தார். நமக்கும் சில சமயங்களில் அம்பிகையினிடம் அன்பு மின்னற் கீற்றுப்போலத் தோன்றுவதுண்டு. பெரிய பக்தர்களைக் கண்டாலும், சைதன்யம் மிக்க சந்நிதிகளுக்குச் சென்று தரிசித்தாலும், சிறந்த நூல்களைச் சொல்லக் கேட்டாலும் அன்னையின் திருவடி ஒன்றே பற்றுக்கோடு என்ற உண்மை நமக்குப் புலனாகும். ஆனால் அடுத்த கணத்தில் அந்த எண்ணத்தை மாற்ற நூறு நூறு உலகிய லெண்ணங்கள் வந்து மோதும். ஆயிர எண்ணங்களுக் கிடையே அம்பிகையின் திருவடி எண்ணமும் ஒன்றாக வந்து மறைந்து விடும்.

ஆனால் அவளுடைய உபாசகர்களுக்கோ வேறு நினைவே இராது. ஏது செய்தாலும் அவளுடைய மலரடிகளுக்கே அர்ப்பணம் செய்வார்கள். அந்த அடிமலரில் ஊதும் வண்டாக அவர்கள் உள்ளம் இருக்கும்.

''உன்னுடைய திருவடியினிடத்தே பொருந்தினேன்'' என்று சொன்னவர் மேலே, ''அப்படிப்

பொருந்தியிருக்கும் நிலையை மாற்றும் தீய சக்திகளுக்கு இடம் கொடுக்காமல் நான் அகன்று வந்து விட்டேன்'' என்று சொல்கிறார்.

நம்முடைய நாட்டில் ஞானிகளும் பக்தர்களும் இல்லாமல் போகவில்லை. அவர்களை நாம் சில சமயங்களில் சந்திக்கிறோம். கோயில் குளங்களுக்கும் குறைவில்லை. அவ்விடங்களுக்கு எப்போதேனும் போகிறோம். ஞான நூல்கள் பல பல உள்ளன. அவற்றை நமக்குச் சௌகரியமாக இருக்கும் நேரத்தில் படிக்கிறோம்; சொல்லக் கேட்கிறோம். இவ்வளவும் நம்முடைய வாழ்நாளில் சில நாழிகைகளே நிகழ்கின்றன. மற்ற நேரங்களிலெல்லாம் காமம் குரோதம் முதலிய ஆறு குணங்களுக்கு அடிமையாகி அவற்றை வளர்க்கும் பொருள்களோடு செறிந்து நிற்கிறோம். அந்த வாசனை நம் உள்ளத்தில் படலம் படலமாகச் செறிந்திருக்கிறது. அதனால், தப்பித் தவறிக் கோயிலுக்குப் போனால் அங்கும் அந்த வாசனை வந்து நலம் பெறாமல் தடுக்கிறது. கடவுளின் திருவுருவத்தைத் தரிசித்து உருகவேண்டியிருக்க, அங்கே வந்திருக்கும் மனிதர்களைப் பார்க்கிறோம்; அதிலிருந்து மனம் எங்கெங்கோ செல்கிறது. ஆகவே, நாம் இறைவன் அடியிலே என்றும் மாறாத அன்பை வைக்கப் பழகிக்கொள்ளவில்லை. பழகுவதற்குப் பிரபஞ்ச வாசனை நம்மை விடுவதில்லை.

நாம் பழகும் மனிதர்களில் பெரும்பாலோர் நம்மிடம் உலகியலைப்பற்றியே பேசுகிறார்கள். யாரேனும் நல்லவர்களைக் கண்டு அவர்களோடு பழகப்போனால், அந்தப் பேதையர் அவர்களை இகழ்கிறார்கள். அவர்களுடைய பெருமையை எண்ணுவதில்லை. நாம் நல்லவராவதற்கு எவ்வளவோ நாட்களாகலாம். அது அருமையான செயல். ஆனால் நல்லவர்களை நல்லவர்கள் என்று சொல்ல

நமக்கு என்ன இன்னல்? பலர் நல்லவர்களை இழித்துப் பேசுகிறார்கள். அன்பர் பெருமையை எண்ணாமல் வாழ்கிறார்கள். அவர்கள் பண்ணிய தீவினை, கருமம். அது அவர்களுக்கு நரகந்தான் கிடைக்கும்.

மெய்ஞ்ஞானியர்கள் எந்தச் செயலும் அவன் செயல் என்று இருப்பார்கள். அவர்களை எந்த வினையும் அடராது. இந்தப் பிறவியில் புதியதாக வரும் ஆகாம்யம் அவர்களைச் சாராது. புண்ணிய பாவங்கள் அவர்களைச் சேர்வதில்லை.

ஞானியர்கள் உடம்பு இருக்குமட்டும் நடமாடுவார்கள். அப்போது அவர்கள் இயங்குவதனால் பிற உயிர்களுக்குத் தீங்கும் நன்மையும் உண்டாகும்படி நேரலாம், அவர்கள் பிச்சை ஏற்று உண்ணுகிறார்கள். அப்போது சிறிது உணவு கீழே சிந்துகிறது. அதை எறும்புகள் உண்ணுகின்றன. அவை உண்டதனால் அவர்களுக்குப் புண்ணியம் சேர வேண்டும். நடக்கும் போது சில ஜந்துக்கள் காலடியில் நசுங்கிப் போகின்றன. அதன் விளைவாகப் பாவமும் அவர்களைச் சார வேண்டும். ஆனால், அவர்கள் மனோநாசம் ஆனவர்களாதலின் புண்ணிய பாவங்கள் அவர்களைச் சாரா.

அப்படியானால் எறும்புகள் உணவு பெற்றதன் பயனாகிய புண்ணியமும், எறும்புகள் நசுங்கியதன் பயனாகிய பாவமும் பயன்தராமல் போய்விடுமா? எந்தக் கர்மத்துக்கும் பயன் உண்டு. அது ஊட்டாமல் கழியாது. இது நியதி. அப்படியானால் இந்தப் புண்ணிய பாவங்கள் அநாமத்துக் கணக்கில் எழுப்படுவனவா?

இல்லை; அவற்றிற்கும் போக்கு உண்டு. இயல்பாகப் பிள்ளை பெறுகிறவர்களுடைய செல்வம் அப்பிள்ளைகளைச் சாரும். அவர்கள் பிள்ளை பெறாவிட்டால்

சுவீகாரமாக எடுத்துக்கொண்டவர்களைச் சாரும். அது போல், புண்ணிய பாவச் செயல்களின் பயன் அந்த ஞானியரைச் சார்ந்தவரை அடையும். யார் அவர்களை உபசரித்து வழிபடுகிறார்களோ அவர்களுக்கு அந்த ஞானியர்கள் இயக்கத்திலே நிகழும் நற்செயல்களால் வரும் புண்ணியம் சாரும். தற்செயலாக நேரும் தீங்குகளால் வரும் பாவம் அவர்கள் பெருமையை எண்ணாமல் இகழ்பவர்களைச் சாரும்; அதனால் அவர்கள் நரகில் விழுவார்கள்; நல்லவர்களுக்கு உறவாகாத அவர்கள் நரகுக்கு உறவாக இருப்பார்கள். அத்தகைய மனிதர்களின் தொடர்பு உடையவன் அதோகதி அடைவான்.

"நான் உன் திருவடியையே பற்றிக்கொண்டேன். உன்னுடைய அன்பர்களின் பெருமையை எண்ணி வழிபடாதவர்களும், தீவினை மிக்க நெஞ்சம் படைத்ததனால் குப்புற விழும் நரகத்துக்கு உறவானவர்களுமான துர்ச்சனர்களை நான் நெடுந்தூரத்தே விலகிப் பிரிந்துவிட்டேன்" என்று பாடுகிறார் அபிராமிபட்டர்.

விளக்கை ஏற்றிக்கொண்டு வெளியிலே போகிறவன், அதை அணைக்கும் காற்றுக்குப் பாதுகாப்புத் தேடிக்கொள்ள வேண்டும். காற்று வீசாத இடமாகப் பார்த்து அதை வைக்கவேண்டும். அதுபோல அம்பிகையின் அன்பு தோற்றினால் போதாது. அது தளர்ச்சி அடையும்படியாகப் பேதையர்கள் செய்துவிடுவார்கள். அவர்களின் உறவை நாம் விட்டுவிட வேண்டும். "உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்" என்று இராமலிங்க சுவாமிகள் பாடுகிறார்.

தாம் அம்பிகையின் திருவடிபற்றி உய்ந்ததையும் பொல்லாதவர்களைப் பிரித்து நின்றதையும் சொன்ன

பட்டர் அம்பிகையை, "திருவே!" என்று விளிக்கிறார். திரு என்பது செல்வத்துக்கும் திருமகளுக்கும் பெயர்.

அம்பிகைதான் பக்தர்களுக்குச் சிறந்த செல்வம். அன்றி, மகாலக்ஷ்மி என்பது லலிதாம்பிகையின் திரு நாமங்களில் ஒன்று. திருமாலின் சக்தியாகிய திருமகளாக இருந்து உலகுக்கு அனைத்துச் செல்வங்களையும் வழங்கு பவள் அம்பிகையே. கோலாபுரம் என்ற தலத்தில் எழுந் தருளியிருக்கும் தேவிக்கு மகாலக்ஷ்மி என்ற திருநாமம் வழங்குகிறது; மைலார தந்திரத்தில் அம்பிகையின் அம்ச மான மகாலக்ஷ்மி, மகாலன் என்ற அசுரனை அழித்தாள் என்ற செய்தி வருகிறது. பதின்மூன்று பிராயமுள்ள கன்னிகை உருவாக இருப்பதனால் திருவென்று பெயர் வந்ததென்றும் கொள்ளலாம்.

செல்வத்துக்குத் தலைவியாக இருப்பது பற்றித் திருவே என்று அமைத்ததாகவும் கொள்ளலாம். "தநாத்யக்ஷா" என்பது அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று

அவள் நுட்பமான செல்வமாக இருப்பவள். ஆதலின் அவள் செய்திகளெல்லாம் இரகசியமானவை. அந்த இரகசியத்தைத் தெரிந்து கொண்டு, ஈடும் எடுப்பு மற்ற அச்செல்வத்தைப் பற்றிக்கொண்டவர் அபிராமிபட்டர்.

அறிந்தேன் எவரும் அறியா
மறையை; அறிந்துகொண்டு
செறிந்தேன் உனது திருவடிக்
கே; திரு வே,வெருவிப்
பிறிந்தேன்நின் அன்பர் பெருமைஎண்
ணாத கருமநெஞ்சால்
மறிந்தே விழும்நர குக்குஉற
வாய மனிதரையே!

[திருமகளாக இருக்கும் அன்னையே, வேறு யாரும் அறிய இயலாத இரகசியத்தை அடியேன் அறிந்தேன்; அங்ஙனம் அறிந்து கொண்டு, நின் திருவடி ஒன்றுக்கே புகலாகப் புகுந்து சேர்ந்தேன்; நின்னுடைய அடியார்களின் பெருமையை எண்ணாத பாவம் மிக்க மனம் காரணமாகக் குப்புற விழும் நரகலோகத்தின் தொடர்புடைய மனிதர்களை அஞ்சி விலகினேன்.

மறை—இரகசியம். செறிந்தேன்—நெருங்கிப்பொருந்தினேன். வெருவி—அஞ்சி. பிறிந்தேன்: எதுகை நோக்கி இடையினம் வல்லினமாயிற்று. கரும நெஞ்சால்—தீவினையையுடைய நெஞ்சினால். மறிந்து—தலைகீழாகி.]

# உள்ளத்தில் வா

அம்பிகையின் திருவடியையே பற்றிக்கொண்டு வாழும் வாழ்க்கையைப் பெற்ற அபிராமிபட்டருக்குத் தாம் பெற்ற பேற்றை உறுதிப்படுத்திக்கொள்ள வேண்டு மென்று தோன்றியது. தம்முடைய உள்ளத்தில் ஒரு கால் சலனம் ஏற்பட்டால் என்ன செய்வது என்ற ஐயமும் தோன்றியது. அரிய பொருள் ஒன்று கைவரப் பெற்ற வர்களுக்கு, அதனைப் பல வகையினாலும் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாகும். அடிக்கடி, அந்தப் பொருள் பறிபோய்விடுமோ என்ற அச்சமும் உண்டாகும். அந்த வகையில், அம்பிகையின் திருவடியைச் சிக்கெனப் பிடித்துக்கொண்ட இந்த அன்பருக்குத் தம் முடைய முயற்சியினால் மட்டும் தாம் பெற்ற நிலையைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது என்ற உண்மை புலனா யிற்று.

"நான் எவரும் அறியா மறையை அறிந்தேன் என் றும், நின் திருவடிக்கே செறிந்தேன் என்றும் சொன்னே னே! என் அளவில் எத்தனை முயற்சி இருந்தாலும் உன்னு டைய திருவருளும் அதற்குத் துணைசெய்யவேண்டும். நீ எப்போதும் என் உள்ளத்தே நின்று அருள் புரியவேண் டும்" என்று விண்ணப்பித்துக் கொள்ள வந்தார். 'ஒரு கால் என் உள்ளம் உனக்கு ஏற்றதாகாதோ என்ற ஐயம் உண்டாகலாம். இது காமக் குரோத லோபமோக மத மாச்சரியமாகிய விலங்குகள் திரியும் காடு என்று எண்ணி, இங்கே வர நீ அஞ்சலாம். அப்படியானால் ஓர் ஆண் துணை யுடன் வந்து இங்கே குடிபுகுந்து இதைத் தூயதாக்க வேண்டும்' என்று கேட்டுக்கொள்கிறார்.

இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கத் தொடங்கும் போது அம்பிகை மகா தபஸ்விகளுடைய வணக்கத்தை ஏற்றுக் கொள்கிறவள் என்ற நினைவு வந்தது. திருக்கடவூரில் அம்மையையும் அப்பனையும் வழிபட்டு மாயாத வரத்தைப் பெற்றவர் மார்க்கண்டேயர். அந்த மாயா முனிவர் வந்து தம் சென்னியை வைத்து வணங்கும் திருவடியை உடையவள் அபிராமி. மச்சேந்திரர் முதலிய சித்தர்களும் அம்பிகையைத் தொழுபவர்கள். அவர்களை நினைத்தபோது, 'இருவினையும் அற்று ஜீவன் முக்தர்களாக விளங்கும் அந்த முனிவர்களும் அம்பிகையைப் பணிகிறார்கள். ஒன்றுக்கும் பற்றாத நாமும் பணிகிறோம். நம் உள்ளத்தில் வந்து அமரும்படி சொல்ல நமக்கு என்ன தகுதி இருக்கிறது?' என்ற எண்ணமும் உடன் வந்தது. பிறகு, 'புண்ணிய மிகுதியினால் சொர்க்க வாழ்வு பெற்ற தேவர்களும் அம்மையைப் பணிந்து நலம் பெறுவார்கள்' என்ற கருத்து நினைவுக்கு வந்தது. "ஞானத்தால் கர்மங்களைப் பொசுக்கிய முனிவருக்கு மாத்திரம் அருள்பவள் அல்லவே! புண்ணியப் பயனைப் பெறும் தேவர்கள் முனிவர்களை விடத் தாழ்ந்தவர்கள். அவர்களும் அம்பிகையைப் பணிகிறார்கள். ஆதலால் மிக அரியள் எம்பெருமாட்டி என்று அஞ்ச வேண்டாம்" என்ற எண்ணம் தோன்றி அவருக்குச் சிறிதே தைரியம் ஊட்டியது. மறுபடியும் ஐயம் எழுந்தது, "தேவர்கள் பெரும் புண்ணியம் செய்தவர்கள். அதன் பயனாகத் தேவலோகத்தில் வாழ்கிறார்கள், அவர்கள் முனிவர்களை விடத் தாழ்ந்தவர்களாக இருக்கலாம். ஆனால் நம்மை விட எத்தனையோ பங்கு உயர்ந்தவர்களாயிற்றே!" என்று கருதினார். உடனே அம்மையின் சௌலப்பிய குணம் நன்றாக நினைவுக்கு வந்தது. திருக்கடவூரில் மனிதர்களும் வந்து பணிகிறார்களே என்ற நினைவு எழுந்தது, அதற்காகத்தானே அம்மை இத்தகைய தலங்களில் மூர்த்திகரித்து

எழுந்தருளியிருக்கிறாள்? எத்தகையவர்களானாலும் வந்து தன் திருவடிகளில் விழுந்து பணியும் வண்ணம் யாவரும் காண நிற்கிறாள் அபிராமி. ஆகவே, 'நாம் இந்த விண்ணப்பத்தைச் சமர்ப்பிப்பதற்கு அஞ்ச வேண்டியதில்லை' என்ற உறுதி பூண்டார்.

மனிதரும் தேவரும் மாயா
முனிவரும் வந்து சென்னி
குனிதரும் சேவடிக் கோமளமே!

என்று அம்பிகையை விளித்தார். தமக்கும் உரிமை உண்டு என்பதைப் புலப்படுத்த மனிதர்களை முன்னே வைத்தார். மிக உயர்ந்த இடத்துக்கு ஏற விரும்புகிறவன் கீழ்ப் படியிலிருந்து மெல்ல மெல்ல ஏறுவது போலக் கீழ்ப்படியிலுள்ள மனிதரைச் சொல்லி, பிறகு தேவரைச் சொல்லி, பிறகு முனிவரைச் சொன்னார். மனிதரும் தேவரும் மாய்பவர்கள்: பிறக்கிறவர்கள். முனிவர்களோ மாயா முனிவர், அவர்களுக்கு மாத்திரம் அம்பிகையைப் பணிந்த பயன் கிடைத்துவிட்டது. கிடைத்தும் அவர்கள் அம்மையின் சேவடியில் தம் சென்னியை வைத்து வணங்குகிறார்கள்.

யாவருக்கும் எளியதாக உள்ள எம்பெருமாட்டியின் உள்ளம் தயை நிரம்பியது. அம்பிகையின் உருவம் மென்மையானது; உள்ளமும் தயையினால் மென்மையானது. கோமலாகாரா, கோமலாங்கி என்பன அம்பிகையின் திருநாமங்கள். அவ்விரண்டும் அவளுடைய மெல்லிய திருமேனியை மட்டும் குறித்தன. இங்கே அகமும் புறமும் மென்மையானவள் என்று புலப்படுத்த வந்த ஆசிரியர், "கோமளமே" என்று பாராட்டினார். கோமளம் - மென்மை; அதை உள்ளும் புறமும் உடையவளாதலின் இவ்வாறு விளித்தார்.

"நீ என்னுடைய புத்தியில் எப்போதும் வந்து குடியிருக்க வேண்டும்" என்று வேண்டிக் கொள்கிறார்

ஆசிரியர்; "சிவபெருமானோடு வந்து பொருந்துக" என்கிறார். 'எந்தக் காலத்தும் சிவத்தினின்றும் பிரிவின்றி நிற்கும் உன்னைத் தனியே அழைத்தல் தகுதியன்று. அப்படித் தனியே நீ வந்தால் பிரிவு பொறாமல் எந்தச் சமயத்திலும் போய்விடக்கூடும். ஆகையால், உன் துணைவருடனே வந்து என் நெஞ்சத்தையே திருக்கட்டிலாகக் கொண்டு வீற்றிருந்தருள வேண்டும்' என்று இரந்து வேண்டுகிறார்.

**புனிதரும் நீயும் என் புந்தி எந்**
**நாளும் பொருந்துகவே.**

சிவபெருமானாகிய துணைவரை நினைக்கிறார். அம்பிகையின் திருவடியை எண்ணியவர், சிவபெருமானுடைய திருமுடியைப் பாடுகிறார். அவர் தம் திருமுடியில் கொன்றை மலரையும் சந்திரனையும் பாம்பையும் கங்கையையும் வைத்திருக்கிறார். நெடுஞ்சடையின் மேல் இவற்றைக் கொண்ட புனிதராக அவர் விளங்குகிறார்.

**கொன்றை வார்சடைமேல்**
**பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதியும் படைத்த புனிதர்.**

கொன்றை சிவபெருமானுடைய அடையாள மாலை. விநாயகர் காப்பிலே, "தாரமர் கொன்றையும்" என்று சொன்னார் அல்லவா? அதுபிரணவம் போன்ற வடிவுடைமையால் பிரணவ மலர் என்று பெயர் பெறும். பொன்னிறம் பெற்ற அதனை இறைவன் திருமுடியில் கண்ணியாகவும் திருமார்பில் மாலையாகவும் அணிந்திருக்கிறான். தன்னுடைய வார்சடைமேல் திங்களை வைத்திருக்கிறான். சந்திரனுக்கு ஹிமகரன் என்பது ஒரு பெயர். அதனால் 'பனிதரும் திங்கள்' என்றார். சந்திரன் இறைவனுடைய திருமுடியின்மேல் தங்கியதனால் பாவம் நீங்கிப் புனிதம் அடைந்தான். தேயாமல் வளராமல் எப்போதும் பிறை

யாகவே இருக்கிறான். சந்திரனோடு அவன் பகையாகிய பாம்பையும் அந்தத் திருமுடியில் காண்கிறோம். நஞ்சை யும் பாம்பையும் அலங்காரப் பொருளாகக் கொள்கிறவன் இறைவன்.

கங்கையும் இறைவன் திருமுடியில் இருக்கிறது எல்லோருக்கும் தூய்மையைத் தரும் அது பகீரதனுடைய தவத்துக்கு இரங்காமல் அகங்காரத்தால் சோபம் அடைந்தது. அதனால் தூய்மை கெட்டது; கலங்கியது. அது தெளிவு பெற்றுப் புனிதத்தை அடையும் வண்ணம் அதைத் தன் சடாபாரத்திலே தேக்கி வைத்துப் பிறகே உலகில் பாயவிட்டான் சிவபெருமான். பிறருக்குப் புனிதம் உண்டாக்கும் கங்கையின் மாசைத் தீர்த்த புனிதன் பரமசிவன்.

"புரிசடைமேல் புனலேற்ற புனிதன் தான்காண்"

என்று அப்பர் சுவாமிகள் அருளியிருக்கிறார். இவற்றை எண்ணியே,

கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும் பகீரதிபும் படைத்த புனிதரும்

என்றார். கொன்றையாகிய தூய மலர் விளங்கும் சடையின் மேல் மாசுடைய திங்களையும் பாம்பையும் கங்கையையும் வைத்துப் புனிதமாக்கியருளிய கருணையாளன் சிவபிரான். அந்தப் பெருமானுடன் அம்பிகை உள்ளத்தே தங்கினால் அது தூய்மை பெறும்.

சிவபெருமானாகிய துணையுடன் கோமளமாகிய அம்பிகை தம் புத்தியில் எந்நாளும் பொருந்தி எழுந் தருளியிருக்க வேண்டும் என்பது அபிராமிபட்டரின் ஆசை.

மனிதரும் தேவரும் மாயா
முனிவரும் வந்துசென்னி
குனிதரும் சேவடிக் கோமள
மே. கொன்றை வார்சடைமேல்
பனிதரும் திங்களும் பாம்பும்
பகீரதி யும்படைத்த
புனிதரும் நீயும்என் புந்திஎந்
நாளும் பொருந்துகவே.

[மனிதர்களும் தேவர்களும் இறவாத முனிவர்களும் அணுகிவந்து தம் தலையை வணங்கி வழிபடும் செம்மையான திருவடிகளையுடைய, அகமும் புறமும் மென்மையான அம்மையே, கொன்றை மலரை அணிந்த நீண்ட சடையின் மேல் பனியை உண்டாக்கும் சந்திரனையும், பாம்பையும், கங்கையையும் வைத்த தூயவராகிய சிவபெருமானும் நீயும் என் உள்ளத்தே வந்து எந்த நாளிலும் இணைந்து எழுந்தருளிவீராக.

மாயா—மரணம் இல்லாத. குனிதரும்—வளைந்து பணியும் வார் சடை—நீண்ட சடை. பனி—குளிர்ச்சியுமாம். பகீரதி: பாகீரதி என்பது குறைந்து நின்றது; தமிழ் முடி பென்று கொள்ளுதலும் ஆம். படைத்த—கொண்ட. புனிதர்—தூய்மை உடையவர். புந்தி—புத்தி; இங்கே உள்ளத்தைக் குறித்தது. பொருந்துக—வந்து அமைந்து எழுந்தருளவேண்டும்.]

இறைவியுடைய திருவடியை ஊடல் நீக்கும் பொருட்டு இறைவர் வணங்கித் தம் திருமுடிமேற் கொள்வதாகச் சொல்வது மரபு. ''சரணாவிந்தம்...எம்பிரான் முடிக் கண்ணியதே'' (11) என்று அபிராமிபட்டரே கூறுவர். ஆதலின் இறைவியின் திருவடியை நினைத்தவுடன் அதிற் படியும் சிவபிரான் திருமுடியையும் நினைத்தார் என்று பொருத்தம் காட்டலாம்.

# அந்தரி பாதம்

தான் மனம் போனபடி பல இடங்களுக்குப் போகும் ஆற்றல் இல்லாத குழந்தை தாயை விட்டு அகலாது. பக்கத்தில் உள்ள இடங்களுக்குப் போய் அங்குள்ளவர்களோடு சிறிது பழகினாலும் தாயை அடிக்கடி நினைத்துக் கொண்டு ஓடி வரும். அண்ணன், தந்தை, உறவினர், தோழன் என்பவர்களோடு பழகும்; ஆனால் மறுபடியும் தாய் மடியில் வந்து படுத்து இன்புறும்.

பக்தர்கள் இறைவனுடைய திருவடியில் வைத்திருக்கும் பற்று இத்தகையதுதான். அவனுடைய புகழைப் பேசுவார்கள். அவனுடைய அங்கலாவண்யத்தில் ஈடுபடுவார்கள். ஆனால் அடியை மறக்கமாட்டார்கள்; அடுத்தடுத்துத் திருவடியை எண்ணியும் பேசியும் ஆறுதல் பெறுவார்கள்.

அம்பிகையின் திருவடியைச் சரணமென்று பற்றிக் கொண்ட அபிராமிபட்டர் முதல் பாட்டில் அப்பெருமாட்டியின் சமுதாய சோபையை, "குங்கும தோயம் என்ன விதிக்கின்ற மேனி அபிராமி என்றன் விழுத்துணையே" என்று சொல்லிப் புகுந்தவர், பிறகு திருக்கரங்களை, "பனி மலர்ப்பூங் கணையும் கருப்பஞ் சிலையும் மென் பாசாங்குசமும் கையில் அணையும்" என்று பாடி அப்பால் சேவடியைப் பற்றினார்; "செறிந்தேன் உனது திருவடிக்கே" என்று பாடினார். திருவடியைத் தொட்ட பிறகு அதனை விட்டு அகல மனம் வரவில்லை. அதன் நிழலில் வெம்மையை ஆற்றிக்கொள்ள இன்னும் சிறிது நேரம் இருக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

"மனிதரும் தேவரும் மாயமுனிவரும் வந்து சென்னி குனிதரும் சேவடி" யிலே நின்ருர். இன்னும் அவருக்கு மன நிறைவு உண்டாகவில்லை. அவர்கள் தம் சென்னியை அம்பிகையின் திருவடியில் வைத்து வணங்குகிருர்கள் என்று சொன்னவுடன், "தாயே, நானும் உன் திருவடியில் என் சென்னியை வைக்கிறேன்" என்று சொல்ல வந்தார். 'தேவரும் முனிவரும் வயசுவந்த பிள்ளைகள்; நாம் இளம் பிள்ளை; நமக்கு அதிக உரிமை உண்டு அம்பிகையிடம்' என்று எண்ணினுர் போலும்! 'உன் திருவடியை என் சென்னியில் வைத்துக்கொள்கிறேன்' என்று உரிமையுடன் சொல்லுகிருர். அபிராமி அந்தாதியின் ஐந்தாவது பாட்டில் அவ்வாறு பாடுகிருர்.

* * *

"அம்பிகையின் பாதம் என் சென்னியில் இருக்கிறது" என்ற பாட்டை நிறைவு செய்ய வருகிறவர், அதற்கு முன் அம்பிகையின் பெருமையைப் படர்க்கையில் வைத்துச் சொல்கிருர்.

அம்பிகை திரிபுரசுந்தரி. திரிபுரை என்றும் அப் பெருமாட்டிக்குப் பெயர் உண்டு. புரை என்பது மூத்தவள் என்னும் பொருளுடையது. மும்மூர்த்திகளுக்கும் மூத்தவள் என்னும் பொருளை உள்ளடக்கியது திரிபுரை என்னும் திருநாமம் என்று கூறுவர். திரிபுரங்களுக்குத் தலைவி என்றும் பொருள் கொள்ளலாம். இரண்டாவது பாடலின் விளக்கத்தில் திரிபுரசுந்தரி என்ற திருநாமத்தின் பொருளைச் சொல்லும்போது திரிபுரங்கள் இன்னவை யென்று சிந்திக்க முடிந்தது அல்லவா?

திரிபுரை என்ற திருநாமத்தை அபிராமி பட்டர் முப்புரை என்று மாற்றிச் சொல்கிருர். மூவகையான

புரங்களில் இணைந்து பொருந்தியிருக்கும் பெருமாட்டி அபிராமி ஆதலின்,

பொருந்திய முப்புரை

என்கிறார்.

அம்பிகையின் திருமேனியையும் திருக்கரங்களையும் திருவடியையும் தரிசித்துப் போற்றிய இவ்வன்பர் இந்தப் பாட்டில் அவளுடைய தனபாரங்களையும் இடையையும் துதித்து மீட்டும் திருவடியைப் பற்றுகிறார். அவளுடைய இடை கொடிபோலத் துவண்டு மென்மையாக இருக்கிறதாம், அது பின்னும் அலசும்படி பெருமாட்டியின் தனங்கள் செய்கின்றன. ஞானப்பால் சுரக்கும் ஞான நிலையம் அம்பிகையின் திருநகில்கள். அம்பிகை ஞானமே திரு உருவானவள். ஞானமலைபோல் நிற்கும் இரண்டு நகில்களின் பாரத்தால் அன்னையின் வஞ்சிக்கொடி போன்ற இடை நைந்து வருந்துகிறதாம். அந்தத் தனபாரங்களுக்குப் பக்தர்களும் புலவர்களும் செப்பை உவமை கூறுகிறார்கள். எல்லா உயிர்களையும் படைத்துக் காத்து அழிக்கும் பெரிய விளையாட்டைச் செய்கிறாள் பிராட்டி. பெரிய இந்திரசால வித்தைபோன்றது அவள் செய்யும் இந்தத் திருவிளையாடல். உலகத்து உயிர்களுக்குக் கருணை சுரக்கும் பகுதியையே பிராட்டியின் நகிலாகச் சொல்லலாம். செப்பிடு வித்தைக் காரன் செப்பை வைத்து வித்தை காட்டுவதுபோலே, இந்தப் பிராட்டி மகாமாயையாக இருந்து, திருவுருவம் உடையவளாகக் காட்டிச் செப்பிடு வித்தை செய்கிறாள், அதற்காகத்தான் இந்தச் செப்பை வைத்திருக்கிறாளோ? செப்பிலே பண்டத்தை வைக்கிறவர்கள் அதை நிமிர்த்து வைத்திருப்பார்கள். ஆனால் வித்தைக்காரனோ அதைக் கவிழ்த்து வைத்திருப்பான். அன்னையும் செப்பைக்

கவிழ்த்து வைத்திருக்கிருள். ஆம், அவள் செய்யும் செப்பிடு வித்தைக்கு ஈடும் எடுப்பும் இல்லை.

பெருமாட்டியின் இரண்டு நகில்களும் செப்பை உவமையாக உரைக்கும் வடிவுடையன; அன்னையின் மருங்குலை வருத்துவன.

**செப்பு உரைசெய்யும் புணர்முலையால்**
**வருந்திய வஞ்சி மருங்குல்,**

புணர்முலை—இரண்டு தனங்கள்; காமேசுவரனேடு ஒன்றுகின்ற தனங்கள் என்றும் சொல்லலாம். இத்தகைய மருங்குலையுடைய மனேன்மணி என்று அம்பிகையைப் புகழ்கிருர்.

மனேன்மனி என்பது தமிழில் மனேன்மணி என்று வந்தது. லலிதாம்பிகையின் திருநாமங்களில் மனேன் மனி என்பது ஒன்று. அத் திருநாமத்துக்கு மனத்தை ஞான நிலைக்கு எழுப்புகிறவள் என்பது ஒரு பொருள். ஸ்ரீவித்தியாஸ்வரூபியாக அம்மை ஞானத்தை அடியார் களுக்கு அருள்பவள். ஞானப் பெட்டகமாகிய வடிவை உடையவள். தன்னை விரும்பிக் குழந்தையாகியவர் களுக்கு ஞானப்பாலை ஊட்டுகிறவள். ஞானத்தின் உறைவிடத்தையே தனமாகக் கொண்டவள் என்று நினைத்தவுடன், அவள் ஞான நிலைக்கு மனத்தை ஏற்றும் தகைமையினள் என்ற நினைவும் வந்து, அதனைக் குறிக்கும் திருநாமமாகிய மனேன்மணி என்பதும் நினைவுக்கு வருகிறது. எல்லாவற்றையும் சேர்த்து,

**புணர்முலையால் வருந்திய வஞ்சி**
**மருங்குல் மனேன்மணி**

என்று பாடுகிருர்.

புருவ மத்திக்குமேலே பிரமரந்திரத்திற்குக் கீழே உள்ள இந்து முதலிய எண்வகை நிலைகளில் இறுதி

நிலை உன்மனி அல்லது மனோன்மணியாகும். அவ்விடத்தே உறைதலின் அன்னைக்கு மனோன்மணியென்ற திருநாமம் வந்தது என்பது ஒரு சாரார் கொள்கை. மனம் பற்றற்றுச் சலனமற்று இயங்காமல் நிற்கும். நிலை உன்மனி என்று கூறுவர். அந்த மனோலயத்தை அருளுவதனால் இந்தத் திருநாமம் வந்தது என்று சொல்வதும் பொருந்தும்.

அடுத்தபடி, அம்பிகை செய்த திருவிளையாடல் ஒன்றைச் சொல்ல வருகிறார். முப்பத்து முக்கோடி தேவர்களும் அமுதம் கடைந்தார்கள். அப்போது அவர்கள் சிவபெருமானை எண்ணவில்லை அங்கு முதலில் உச்சைசிரவம், ஐராவதம் முதலிய பொருள்கள் வந்தன. அவற்றைத் தேவர்களிற் சிலர் தங்களுக்கென்று எடுத்துக் கொண்டனர். இன்னும் 'அமுதம் தோன்றவில்லை. ஆனால் ஆலகால நஞ்சு தோன்றியது. அதனைக் கண்ட அமரர் அஞ்சி நடுங்கினர்; 'அமுதம் வராமல் இருந்தாலும் இருக்கட்டும்: இந்த நஞ்சு நம்மை அழிக்காமல் இருக்க வேண்டுமே!' என்று மனம் குலைந்து வருந்தினர். அப்போதுதான் அவர்களுக்குச் சிவபெருமானின் நினைவு வந்தது. அவனிடம் ஓடிச் சென்று தங்களைக் காப்பாற்ற வேண்டுமென்று அடியில் வீழ்ந்து புலம்பினர். இறைவன் அந்த நஞ்சை வாங்கி உண்டான். புறத்திலே உள்ள தேவர்கள் அழியாமல் இருக்க அதனை எடுத்து விழுங்கினான்.

ஆனால், அவன் திருவயிற்றுள் எத்தனையோ கோடி அண்டங்கள் உள்ளனவே! உள்ளே சென்று அவற்றை அழித்துவிட்டால் என் செய்வது? இந்த எண்ணம் அம்பிகைக்கு உண்டாயிற்று. இறைவன் நஞ்சை விழுங்கத் தொடங்கியவுடன் பிராட்டி தன் கரத்தால் இறைவன் கழுத்தை அணைத்துக்கொண்டாள். அந்தக்

கொடிய நஞ்சு கழுத்திலே நின்றுவிட்டது, அதன் நீலநிற மிகுதியினுல் சிவபிரானுடைய கழுத்து நீல நிறமாகியது; நீலகண்டன் என்னும் திருநாமத்துக்கு உரியவனுனன் எம்பெருமான்.

அம்பிகை தன் திருக்கரத்திஞல் தடுத்து நிறுத்த, அவள் கரத்தின் பரிசத்திஞல் நஞ்சு அமுதம்போல ஒரு தீங்கும் செய்யாமல் அங்கே நின்றுவிட்டது. சர்வலோக ஜனனியாகிய அவளுக்கு இறைவன் திருவயிற்றிலுள்ள உயிர்கள் இறவாமல் இருக்கவேண்டுமே என்ற கருணை பிறந்ததனுல் இவ்வாறு செய்தாள். அவளே தன் கையால் தீண்டி அந்தக் கொடிய நஞ்சை அமுதாக்கினுள். இதை இவ்வாசிரியர் சொல்கிருர்.

**வார்சடையோன்**
**அருந்திய நஞ்சு அமுது ஆக்கிய அம்பிகை.**

இந்தக் கருத்தை **மீனுட்சியம்மை குறத்திலும்** காணலாம்.

> "எவ்விடத்தும் தாமாகி இருந்தவருக் கருந்தவரும்
> வெவ்விடத்தை அமுதாக்கும் விரைக்கொடியைப்
> பாடுவனே"

என்பது அதில் வரும் ஒரு கண்ணி.

அம்பிகையே திருமகளாக விளங்குகிருள். ஆதலின் அவளை, 'பத்மாசனு' என்று **லலிதா சகசிரநாமம்** கூறுகிறது. சகசிரார கமலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமாட்டியும் அவள்தான். இவற்றையெல்லாம் எண்ணி,

**அம்புயமேல் திருந்திய சுந்தரி**

என்கிருர்.

அன்னையின் பெயர்களுள் அந்தரி என்பது ஒன்று, அந்தரம்-ஆகாசம். அவள் பராகாச வடிவுடையவள்;

'பராகாசா' என்பது லலிதா சகசிரநாமத்தில் ஒரு நாமம். சிதாகாசத்தில் உறைபவளாதலின் அந்தரி என்ற பெயர் கொண்டாள் என்றும் கூறலாம். இதயத்தினூடே உள்ள நுட்ப வெளியாகிய தசராகாச உருவினளாக உறைகின்றவள் என்றும் அதற்குப் பொருள் கூறலாம். 'தகராகாச ரூபிணி' என்பது அன்னையின் ஆயிரம் திருநாமங்களில் ஒன்று.

'இத்தகைய பெருமாட்டியின் திருவடி என் தலை மேல் இருக்கிறது' என்று சொல்லுகிறார் அபிராமிபட்டர்.

பொருந்திய முப்புரை, செப்புரை
செய்யும் புணர்முலையால்
வருந்திய வஞ்சி மருங்குல்
மனோன்மணி, வார்சடையோன்
அருந்திய நஞ்சமு தாக்கிய
அம்பிகை, அம்புயமேல்
திருந்திய சுந்தரி, அந்தரி
பாதம்என் சென்னியதே.

[சேர்ந்து பொருந்திய திரிபுரத்தின் தலைவி, செப்பை உவமையாகச் சொல்லும் இரண்டு தனங்களின் பாரத்தால் வருந்திய வஞ்சிக்கொடியைப் போன்ற இடையையுடைய மனோன்மனி, நீண்ட சடையை உடைய சிவபெருமான் அருந்திய ஆலகால நஞ்சைத் தன் கையால் கழுத்தளவில் நிற்கச்செய்து அமுதம்போல ஆக்கிய தாய், தாமரையின்மேல் அழகுபெற வீற்றிருந்தருளும் பேரழகி, பராகாச வடிவினள்-ஆகிய அபிராமியின் திருவடி என் தலையின்மேல் உள்ளது.]

திருவடிகள் இரண்டாயினும் ஒன்றாக வைத்துச் சென்னியது என்றார்.

எம்பெருமாட்டியின் அடியைப் பணிந்து வாழ்வேன் என்பது கருத்து.

# முக்கரண வழிபாடு

அம்பிகையின் திருவடியைச் சென்னியிலே வைத்து மகிழ்ந்த அபிராமிபட்டர், திரிகரணங்களாலும் அவளை வணங்கி வழிபட்டு வாழும் இயல்புடையவர். அன்னையின் திருவடிகளைத் தலைக்கு அணியாகச் சூடுவதோடு, அவள் மந்திரத்தைத் தியானிப்பதும், அவளுடைய ஆகமங்களை வாயாரச் சொல்லிப் பாராயணம் செய்வதும் அவருடைய வழிபாட்டு முறைகளாக இருந்தன. அவற்றை ஆறுவது பாட்டில் சொல்கிறார்.

முன் பாட்டில், "அந்தரி பாதம் என் சென்னியதே" என்று படர்க்கையிலே வைத்துச் சொன்னவர், இந்தப் பாட்டில் அம்பிகையை முன்னிலைப்படுத்திச் சொல்கிறார்.

**சிந்துர வண்ணப் பெண்ணே!**

என்று விளிக்கிறார்.

அம்பிகையாகிய திரிபுரசுந்தரி செக்கச் சிவந்த திருமேனியுடையவள். அந்தத் திருமேனியின் சமுதாய சோபையை முதல் பாட்டிலே, "உதிக்கின்ற செங்கதிர் உச்சித் திலகம்" என்று பாராட்டித் துதிக்கத் தொடங்கினவர் அல்லவா? பிராட்டியின் பிரசாதப் பொருளாகிய குங்குமத்தைக் காணும் போதெல்லாம் அவளுடைய திருமேனியை நினைத்து உருகுவது பக்தர்களுக்கு இயல்பு. "சிந்துர வண்ணத்தினாள்" (8), "சிந்துர மேனியள்" (53) என்று பின்னும் இவ்வாசிரியர் கூறுகிறார். ஸ்ரீவித்யா உபாசகராகிய இவர் தம்முடைய தியானத்தில் திரிபுர சுந்தரியை நினைப்பவர். ஆதலின் அவளுடைய செவ் வண்ணத் திருமேனியையே அடிக்கடி நினைவு கூர்வார்.

நம்முடைய தலை சிக்குப் படிவது; தக்கபடி வைத்திராவிட்டால் நாற்றம் எடுப்பது. தலையில் மலர் சூடுவது கேசத்திலுள்ள நாற்றத்தைப் போக்கிக் குளிர்ச்சி தரும் பொருட்டு. ஆடவரும் மலர் அணிவது உண்டு, மலர் தலையில் கேசத்திற்கு அழகு தந்து மணமும் தண்மையும் தரும். ஆனால் தலையில் மற்றொன்று இருக்கிறது. அந்த வடுவை வெறும் மலரால் மாற்ற இயலாது. பிரமதேவன் எழுதிய எழுத்துத்தான் அது. அதைப் போக்கும் ஆற்றலுடைய தாமரை ஒன்று உண்டு. அதுதான் அம்பிகையின் திருவடித் தாமரை. தம் தலைக்குப் பூவாக அம்பிகையின் திருவடியைச் சூடுபவர் அபிராமி பட்டர். அப்பர் தம் தேவாரத்தில் இறைவனுடைய திருவடி அப்பூதியடிகளின் குஞ்சிப்பூவாக இருக்கிறதென்று பாடுகிறார்;

"அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய்"

என்பது அது. அவ்வாறே இவ்வாசிரியரும் அம்பிகையின் பொலிவு பெற்ற திருவடித் தாமரையைத் தம் சென்னிப் பூவாகச் சூடியவர்.

**சென்னியது உன் பொன் திருவடித் தாமரை.**

இறைவியின் திருவடிக்கும் நம் தலைக்கும் இணைப்பு உண்டாகாவிட்டால் இந்தப் பிறவி எடுத்ததனால் பயன் இல்லை.

"கோளில் பொறியிற் குணம்இலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை"

என்பது குறள். நமக்கு உத்தமாங்கமாக இருப்பது தலை. அம்மைக்கு உத்தமாங்கமாக இருப்பது திருவடி. இந்த இரண்டும் ஒன்றுபட்டால், நாம் பிறப்பு இறப்புகளில் உழலும் மனிதராக இராமல் அம்பிகையின் அடியாராகி

விடுவோம். திருவடியோடு தொடர்பு கொள்வதனால்தான் அடியார் என்ற பெயரே உண்டாயிற்று.

*　　　*　　　*

முதலில் அன்னையின் திருவடித் தாமரையில் விழுந்து வணங்கி அப்பெருமாட்டியின் மந்திரத்தைத் தியானிக்க வேண்டும். யார் தன்னை மனத்தால் நினைக்கிறார்களோ, அவருடைய பாவத்தை நீக்குவது என்னும் பொருளை உடையது மந்திரம் என்னும் சொல். வாயினால் மந்திரத்தை வெளிப்படையாகச் சொல்வது மரபன்று. நாவை இயக்கிச் சொன்னாலும் புறத்தே புலனாகாமல் சொல்ல வேண்டும்.

''ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி
நாவியல் மருங்கின் நவிலப் பாடி''

என்று திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் சொல்கிறார்.

மந்திரங்களை மூன்று வகையாக ஜபிக்கலாம். வெளிப்படையாகப் பிறர் காதில் விழும்படி சொல்வதை வாசிகம் என்பர். மந்திரத்தின் முழு வடிவம் தெரியாமல் மெல்ல இரகசியமாகச் சொல்லுதலை மந்தம் என்பர். மனத்துள் தியானிப்பதை மானஸம் என்பர். இந்த மூன்று முறைகளிலும் ஒன்றைவிட ஒன்று சிறந்தது. மிகச் சிறந்ததாகிய மானஸமே பெரியோர் விரும்புவது.

அம்மையின் மந்திரத்தை இடைவிடாமல் தம் சிந்தையிலே நிலைபெறச் செய்து தியானிக்கும் செயலையுடையவர் இந்த அன்பர்.

**சிந்தையுள்ளே
மன்னியது உன் திருமந்திரம்.**

அம்பிகையின் மந்திரங்கள் பலவகைப்படும். ஏகாக்ஷரி, நவாக்ஷரி, பஞ்சதசாக்ஷரி, ஷோடசாக்ஷரி என்று வெவ்வேறு

மந்திரங்களைத் தக்க குருவின் முகமாக உபதேசம் பெற்று ஜபிக்க வேண்டும். அப்படி ஜபிக்கும்போது அந்த அந்த மந்திரத்திற்கு ஏற்ற தியான சுலோகத்தைச் சொல்லி, அப்பால் ஜபம் செய்யவேண்டும். அந்தத் தியான சுலோகத்தில் மந்திரத்தின் தேவதையின் திருவுருவ வர்ணனை இருக்கும். அந்த உருவத்தை மனத்தில் இருத்தி மந்திரத்தை ஜபிக்க வேண்டும். இதற்காகவே ஒவ்வொரு மந்திரத்திற்கும் தனித்தனியே தியான சுலோகம் அமைந்திருக்கிறது.

'மந்திரம் என் மனத்தில் மன்னியது' என்று சொல்ல வந்தவர், 'வெறும் மந்திரம் மட்டும் அன்று; உன்னுடைய உருவத் தியானமும் உடன் செய்கிறேன்' என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துவதற்கு,

**சிந்தையுள்ளே**
**மன்னியது உன் திரு மந்திரம் சிந்துர வண்ணப்பெண்ணே!**

என்று சேர்த்துச் சொன்னார்.

அம்பிகையின் திருவடியைத் தொழுது அவள் மந்திரத்தை ஜபித்து அவள் திருவுருவத்தைத் தியானித்து வாழ்வோருக்கு உலகியல் வந்து தாக்கும்போது சற்றே சலனம் உண்டாகலாம். உயர்ந்த இரத்தினத்தைப் பெற்றவன் அதைப் பெட்டியில் வைத்துப் பூட்டுவதோடு வேறு யாரும் அந்தப் பெட்டியை எடுத்துச் செல்லாதபடி பல காவலர்களிடையே அதை வைத்துக் காவல் செய்வான். இங்கே அம்மையின் மந்திரமாகிய மாணிக்கத்தை மனம் என்னும் பெட்டியில் வைத்தவர், அந்தப் பெட்டி உலகியல் வாசனையினால் களவு போகாதபடி அடியார்களினிடையே இருந்து பாதுகாக்கிறார். அவர்கள் எப்போதும் அன்னையையே தியானம் செய்கிறவர்கள். அவர்களுடைய

கூட்டத்தினிடையே இருந்தால் நம்முடைய நல்ல பழக்கம் வலிமையை அடையும்; தீய பழக்கம் மறைந்து போகும்.

மனிதன் ஒரு கூட்டத்தினிடையே பழகினுல் அவர் களுடைய பழக்கம் அவனை அறியாமலேயே அவனுக்கும் சார்ந்துவிடும்.

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்ருகும், மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு"

என்பது திருக்குறள். ஆதலின் நல்லவர்கள் சத்சங் கத்தையே நாடுவார்கள். அருமையான பொருளைப் பெற்றவர்கள் அதனை மேலும் மேலும் வளர்ப்பதற்குப் பாங்கான கூட்டத்திலே சேர்வது முறை.

இங்கே, இவ்வாசிரியர் அன்னையைத் தியானிக்கும் அடியாருடன் கூடுகிருர். அவர்கள் எப்போதும் அம்பிகை யின் ஆகமங்களையும் அவற்றின் வழிவந்த நூல்களையும் ஓதிக்கொண்டே இருக்கிருர்கள். அவர்களோடு, கூடி எந்த முறையில் அவற்றைப் பாராயணம் செய்யவேண் டுமோ அந்த முறைப்படி ஆகமபத்ததிகளை இவ்வன்பரும் பாராயணம் செய்கிருர்.

ஆகம வழி வந்த நூல்களைப் பத்ததி என்று சொல்வது வழக்கம்; சதாசார பத்ததி என்பது போன்ற நூல்கள் அத்தகையவை.

**முன்னிய நின் அடியாருடன் கூடி முறைமுறையே**
**பன்னியது என்றும் உன்றன் பரமாகம பத்ததியே.**

ஆகமங்கள் சிவாகமம், வைஷ்ணவாகமம், சாக்தா கமம் என்று வெவ்வேறு பிரிவாக உள்ளன. ஆகமத் துக்குத் தந்திரம் என்பது ஒரு பெயர். பொதுவாக ஆகமம் என்ருல் சிவாகமங்களையும், தந்திரம் என்ருல் சாக்தாமங்களையும் கொள்வது பெரு வழக்காகிவிட்டது.

அம்பிகையின் ஆகமங்கள் யாமளம் முதலிய பல வாகும். அறுபத்து நான்கு ஆகமங்கள் ஒன்று ஒரு கணக்கு உண்டு. 'சதுஷ்ஷஷ்ட்யா தந்த்ரை' என்று சௌந்தர்ய லகரி கூறுகிறது. மற்ற ஆகமங்களைவிட அம்பிகையின் தந்திர சாத்திரங்கள் மேலானவையாதலின் அவற்றைப் பரமாகமம் என்றார்.

* * *

அம்பிகையின் திருவடித் தாமரையைச் சென்னியிலே வைத்துக் காயத்தால் ஆகும் வழிபாட்டைச் செய்தார்; அவள் திருமந்திரத்தைச் சிந்தையுள்ளே மன்னச் செய்து மனத்தால் ஆகும் வழிபாட்டைச் செய்தார்; அவள் அடியாருடன் கூடிப் பரமாகம பத்ததியைப் பன்னி வாக்காலாகும் வழிபாட்டைச் செய்தார். இப்படி மனோ வாக்குக் காயங்களாகிய முக்காரணங்களாலும் வழிபாடு புரிந்தார் அபிராமிபட்டர்.

சென்னியது உன்பொற் றிருவடித்
 தாமரை; சிந்தையுள்ளே
மன்னியது உன்திரு மந்திரம்;
 சிந்துர வண்ணப்பெண்ணே!
முன்னிய நின்அடி யாருடன்
 கூடி முறைமுறையே
பன்னிய தென்றும்உன் றன்பர
 மாகம பத்ததியே.

[சிந்தூரத்தைப் போன்ற செவ்வண்ணத் திருமேனி படைத்த இளம் உருவத்தில் எழுந்தருளியிருக்கும் தாயே, அடியேனுடைய தலையின்மேல் இருப்பது உன்னுடைய பொலிவுபெற்ற அழகிய பாதமாகிய தாமரை மலர்; அடியேனுடைய மனத்திலே என்றும் நிலையாக இருப்பது உன்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய மந்திரம்; உன்னையே தியானித்து வாழும் அடியார்

கருடன் என்றும் முறையாகப் பாராயணம் செய்பவை உன்னுடைய மேலான ஆகம பத்ததிகளாகும்.

பொன்-பொலிவு. முன்னிய-எண்ணிய; தியானித்த. முறை முறையென்றது பலகாலும் பாராயணம் செய்வதைக் குறிப்பது. பன்னுதல்-பலகால் சொல்லுதல், பன்னியது என்பது தொகுதி ஒருமை.]

மூன்று கரணங்களாலும் அன்னையை வழிபடுவது அடியார்களின் இயல்பு என்பது இதன் கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 6-ஆவது பாடல்.

# தயிரும் மத்தும்

ஆத்மாக்கள் இறந்தும் பிறந்தும் உழன்று துன்புறுகின்றன. அந்த இருவகைப் பிணிகளாலும் தளர்ச்சி அடைகின்றன. பரப்பிரம்மத்தோடு ஒன்றினால் அந்தத் தளர்ச்சி நீங்கி இன்பத்தை அடையலாம். புண்ணியம் பாவம் என்ற இரண்டு வினைகளாலும் உயிருக்கு எப்போதும் பயணம் இருந்துகொண்டே இருக்கிறது. சில சமயங்களில் மேலான பிறப்பைப் பெற்று மறுபடியும் கீழான பிறப்பை அடைவது உண்டு. வேறு சமயங்களில் கீழான பிறப்பைப் பெற்ற உயிர் மேற்பிறப்பை அடைவதும் உண்டு. புழுவாய்ப் பிறந்த உயிர் மனிதனாகப் பிறக்கலாம். மனிதனாகப் பிறந்தவன் மாடாகப் பிறக்கலாம். உயர்ந்த கதி, தாழ்ந்த கதி ஆகிய இரு நெறிகளிலும் சென்று இறந்து பிறந்து வாழ்வதையே தன் கதையாகக் கொண்டிருக்கும் உயிருக்கு இந்தப் பயணத்தால் தளர்ச்சியே உண்டாகிறது.

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
சொல்லாஅ நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்"

என்று மணிவாசகர் முறையிடுகிறார். இத்தனை பிறப்புகள் எடுத்ததன் பயன் இளைப்புத்தான்.

"மாதா உடல்சலித்தாள், வல்வினையேன் கால்சலித்தேன்
வேதாவும் கைசலித்து விட்டானே"

என்று பட்டினத்தார் இந்தப் பயணத்தால் உண்டான சலிப்பைச் சொல்கிறார்.

இப்படி மேலும் மேலும் பிறந்து உழலுவதால் உண்டாகும் தளர்ச்சியைப் போக்கிக்கொள்ளும் வழி யாது? கடவுளின் அருள் இருந்தாலன்றி இந்தத் தளர்ச்சி நீங்காது.

அபிராமிபட்டர் அம்பிகையை இந்தத் தளர்ச்சியைப் போக்கியருள வேண்டுமென்று வேண்டுகிறார்; தளர்ச்சி இல்லாத கதியை அடையவேண்டுமென்று விரும்புகிறார்.

* * *

தயிரைக் கடையும்போது கயிற்றில் அகப்பட்ட மத்து, சுழன்று சுழன்று தயிரினிடையே ஆடுகிறது. ஒரே மாதிரி சுழலுவதில்லை. கயிற்றை இழுத்துக் கடைகிறவர் இரண்டு கைகளாலும் அதன் இரு முனையையும் பிடித்து இழுப்பதால் மாறி மாறிச் சுழல்கிறது. வலக்கையால் கயிற்றை இழுக்கையில் மத்து வலமாகச் சுழல்கிறது. இடக்கையால் இழுக்கும்போது இடமாகச் சுழல்கிறது. இப்படியே மாறி மாறி அது சுழன்று தயிரைக் கடைகிறது, மத்துத்தான் தயிரைக் கடைவது போலத் தோன்றினாலும் அதைக் கருவியாக்கி ஒரு பெண்மணி கடைகிறாள். பிரபஞ்சமென்னும் சட்டியில் இன்ப துன்ப அநுபவங்களிடையே சுழலுகிறது, உயிராகிய மத்து. அதற்குக் காரணம் புண்ணிய பாவவினைகளாகிய கயிறு. ஒரு தலைப்புப் புண்ணியம்; மற்றொரு தலைப்புப் பாவம்.

"அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால்"

என்பது திருவாசகம்.

புண்ணிய பாவ வினைகள் காரணமாகவே நாம் இன்ப துன்பங்களை அடைகிறோம். அந்த வினைகள் நம் பிறவிக்குக்

காரணமாக இருக்கின்றன. ஆனால் அவை ஜடம். ஜடத்துக்குத் தானே இயங்கும் ஆற்றல் இல்லை. அந்த வினைகளைக் காரணமாகக் கொண்டு எம்பெருமாட்டியே உயிர்களுக்கு இன்பதுன்பங்களை ஊட்டுகிறாள். மத்தைப் பானையிலிட்டுக் கடைகிற பெண்ணைப்போல் விளங்குகிறாள், எம்பிராட்டி. குதித்துச் சுழன்று வரும் மத்துப்போல் உயிர் பிரபஞ்சத்தில் அநுபவங்களைப் பெறுகிறது.

தயிர் உடைந்து வெண்ணெய் திரண்டு மோரிலே ஒட்டாமல் மிதக்கும் பக்குவம் வந்தால் பெண்மணி கடைவதை நிறுத்தி விடுகிறாள். பிரபஞ்சத்தோடு ஒன்றி நின்ற அநுபவம் நீங்கி, ஒன்றியும் ஒன்றாத முக்த நிலையில் பெறும் அநுபவமாகிய நவநீதம் தோன்றி விட்டால் உயிரும் செயலொழிந்து நிற்கிறது.

இப்போது தயிர் கடையும் மத்தைப் போலச் சுழன்று சுழன்று தவிக்கிறது உயிர். ''என்னுடைய உயிர் தயிரில் நின்று சுழலும் மத்தைப்போலச் சுழலுகிறது; அதனால் தளர்ச்சி அடைகிறது. இந்தத் தளர்ச்சி இல்லாததாகிய கதியை அடையும் வண்ணம் நீ நின் திருவுள்ளத்தில் எண்ணியருள வேண்டும்'' என்று பிரார்த்திக்கிறார் இந்தப் பேரன்பர்.

**ததி உறு மத்திற் சுழலும் என்**
**ஆவி தளர்வு இலதோர்**
**கதி உறு வண்ணம் கருதுகண்டாய்.**

[ததி-தயிர். மத்தின்-மத்தைப்போல.]

* * *

தயிர் கடைகிற பெருமாட்டி அம்பிகை. கைவளை குலுங்கத் திருமேனி அசையத் திருவிழி கயிற்றோடு செல்ல அம்பிகை கடைகிறாள். ஆம்! உயிர்க்கூட்டங்கள்

வினைப்பயனை அநுபவிப்பதற்காக அவள் சிருஷ்டியாதி தொழில்களைச் செய்கிறாள். வெண்ணெயை உருட்டித் திரட்டி மத்தை மூலையிலே சார்த்தும் வரையில் அவளுக்கு வேலை இருக்கிறது. தயிர் கடையும் வேலையை அவள் விடியற் காலையில் ஆரம்பித்து விடுகிறாள். தத்துவங்களைத் தோற்றுவிக்கும் விடியற்காலையில் அவள் எழுந்து வேலை செய்யத் தொடங்குகிறாள். தத்துவங்கள் அடங்கிய மகாப் பிரளயத்தில் அவள் சற்றே ஓய்வெடுத்துக் கொள்கிறாள்; இயங்காமல் தன் தொழில்களை ஒடுக்கிக் கொண்டு நிற்கிறாள். அவள் கடையாவிட்டால் மத்துக்கு ஆட்டம் இல்லை, தயிரில் வெண்ணெய் எடுக்க முடியாது.

இந்த ஆய்ச்சியைப் பார்த்துப் பேசுகிறார் அபிராமி பட்டர், "தாயே, இந்தத் தளர்ச்சியைப் போக்கித் தளர்வில்லாத ஒரு கதியை என் ஆவி அடையும்படியாகத் திருவுள்ளம் கொள்ள மாட்டாயா?" என்று வேண்டுகிறார்.

ஆவியே தாமாக நின்றாலும் வேற்றுமை நயம் கருதி, "என் ஆவி" என்றார்.

அம்பிகை வேலைக்காரர்களை வைத்து வேலை வாங்கும் பெரிய பண்ணைக்காரி. தான் உட்கார்ந்து ஒவ்வொரு காரியத்தையும் செய்து கொண்டிருக்க முடியுமா? உலகில் சிறிதளவு செல்வம் படைத்தவர்களும் வேலை செய்ய ஆள், சமையல் செய்ய ஆள் என்று ஆட்களை நியமித்து வேலை வாங்கும்போது எல்லாச் செல்வத்துக்கும் தலைவியான பராசக்தி பலரை ஏவலராகக் கொண்டு தன் அரசை நடத்துவது வியப்பு அன்றே?

அவள் செய்கிற தொழில்களுக்குப் பல அதிகாரிகளை நியமித்திருக்கிறாள். அவர்களுள் யாவரினும் சிறந்த தலைவர்களாக விளங்குபவர்கள் மூன்று பேர். படைப்புத்

தொழிலை ஓர் அதிகாரியிடம் ஒப்புவித்திருக்கிருள், அவன் தான் பிரமன்; தாமரையாதனத்தில் வீற்றிருக்கும் கமலாலயன். காப்புத் தொழிலைத் தன் அண்ணனிடம் விட்டிருக்கிருள்; அந்த அண்ணன்தான் திருமால். முடிக்கும் தொழிலைத் தன் கணவரிடமே ஒப்படைத்திருக்கிருள். எல்லா வேலைகளுக்கும் முடிவான வேலை அது; பொறுப்பான வேலை. அதற்குக் கண்டவர்களைப் போடலாமா? தன் அந்தரங்கம் தெரிந்தவரைப் போடுவதுதானே பொருத்தம்?

பெரிய கடை ஒன்று; லட்சக்கணக்கில் வியாபாரம் நடக்கிறது. கொள்முதல் செய்ய வேலைக்காரர்கள் போவார்கள். கடையில் சரக்கை விநியோகம் செய்ய ஆட்கள் இருப்பார்கள். கடைசியில் கடையை மூடும் போது பணத்தைக் கணக்குப் பார்த்து, எல்லாவற்றையும் மூடிக் கடைசிக் கதவையும் மூடுவதற்கு, யார் மிகவும் நம்பிக்கையானவர்களோ அவர்களைத்தானே வைப்பார்கள்? கடைசியில் கதவை மூடுவதையும், முதலில் கடையைத் திறப்பதையும் அந்த மனிதரிடம் ஒப்படைத்திருப்பார்கள்.

அதுபோலச் சிருஷ்டியையும் திதியையும் இரண்டு பேர்களிடம் வைத்த எம்பெருமாட்டி சங்காரத்தொழிலைத் தன் மகிழ்நனுக்கு வழங்கியிருக்கிருள் அவன் நல்ல அறிவாளி; மதி படைத்தவன். அவன் சடையில் சந்திரன் ஒளிர்கிருன். அவன் மிக்க ஞானம் உடையவன் என்பதற்கு இது அடையாளம். மதியுறு வேணி மகிழ்நனைச் சிறந்த பொறுப்பான வேலையில் வைத்து, எல்லாவற்றையும் மேற்பார்வை பார்த்துக்கொண்டு விளங்குகிறவள் இந்த அருட்பேரரசியாகிய இராஜராஜேசுவரி.

அதிகாரிகள் தங்களை நம்பி அதிகாரத்தை அளித்தவரை வணங்குவதும் புகழ்வதும் இயல்பு. இங்கே

அம்பிகையை இந்த மூன்று அதிகாரிகளும் வணங்கு கிறார்கள்; எப்போதும் அவளுடைய புகழைச் சொல்லித் துதிக்கிறார்கள்.

"மதியுறு வேணி மகிழ்நன்கூட வணங்குகிறானா?" என்று கேட்கத் தோன்றும். ஆம்; அவனும் வணங்கு வான், அரசுக்கு ஒரு தலைவன் இருந்தால் அவனை அரசன் என்போம். அவன் மனைவி அரசி. அரசுக்குத் தலைவி ஒருத்தி இருந்தால் அவளும் அரசிதான்; ஆனால் அந்த அரசியின் கணவன் அரசனாவதில்லை. இங்கிலாந்துக்கு அரசி எலிஸபெத்; பிலிப்ஸ் கோமகன் அவளுடைய கணவனே யன்றி அரசனாக மாட்டான்.

அவ்வாறே மதியுறு வேணி மகிழ்நனாக இருந்தாலும், அவன் அதிகாரிகளிற் சிறந்தவனேயன்றி, அவனும் அரசியை வணங்கும் நிலையில் இருப்பவனே. "நயனங்கள் மூன்றுடை நாதனும் வேதனும் நாரணனும், அயனும் பரவும் அபிராமவல்லி" (74) என்று பின்னே ஒரு பாட்டில் தருகிறது.

அந்த மகிழ்நன் இரு வகையில் வணங்குவதுண்டு. மூன்று அதிகாரிகளுடன் ஒருவனாக நின்று அரசியை வணங்கும் வணக்கம் இது. இதனையன்றி அம்பிகையோடு தனியே இருக்கும் போது ஊடற்காலத்து வணங்கும் வணக்கமும் உண்டு. அதைப்பற்றிச் சில இடங்களில் அபிராமிபட்டர் பாடுகிறார். அதைப் பிறகு பார்க்கப் போகிறோம்.

அபிராமியம்மை மூத்தேவரும் வணங்கும் செய்ய திருவடி உடையவள் என்பதை நினைவு கூர்கிறார் ஆசிரியர்.

**கமலாலயனும் மதியுறு வேணி மகிழ்நனும்**
**மாலும் வணங்கி என்றும் துதியுறு சேவடியாய்!**

அவளுடைய அடியின் புகழைச் சொல்லும்போது அதைப் பணியும் மூவரையும் பற்றிச் சொல்ல நேர்கிறது. அவளுடைய அடியார்களாக அம்மூவரும் இருக்கிறவர்கள் அல்லவா?

அடி முடியை நாடித் தியானிக்கும் ஆசிரியர் அடியைச் சொன்னவுடன் அம்பிகையின் திருமுகத்தைத் தியானிக்கிறார். அங்கேயுள்ள வண்ணத் திலகத்தை எண்ணுகிறார்; எம்பெருமாட்டி தன் திருநுதலில் சிந்துரத் திலகத்தைப் புனைந்திருக்கிறாள். அந்தச் சிந்துரானனத்தைப் பாடுகிறார். "சிந்தூர திலகாஞ்சிதா" (632) என்பது லலிதா சகசிரநாமம்.

சிவந்த அடியையும் செவ்வண்ணத் திலகம் அணிந்த நுதலையும் உடைய பிராட்டியின் திருமேனி முழுவதும் அழகு வெள்ளம் அலை புரண்டோடுகிறது. அதற்கு ஒரு கரை அடியானால் மறு கரை ஆனனம். இரு கரையும் கண்டு இடைப்பட்ட வெள்ளத்தை அளவிடமாட்டாமல், "அழகு வெள்ளமே!" என்று வியப்பில் மூழ்கிச் சுந்தரியே என்று வாயாரச் சொல்லிப் பாட்டை நிறைவு பண்ணுகிறார்.

**சிந்துரானன சுந்தரியே!**

ஸிந்தூரம் என்பது தமிழில் சிந்துரம் என்று வரும். "சிந்தூர திலகத்தையுடைய நெற்றியையுடைய அழகியே!" என்று புகழ்கிறார்.

பிரபஞ்ச அநுபவமாகிய தயிரிலே கிடந்து சுழலும் மத்தாக இருக்கிறது உயிர். அதை எம்பெருமாட்டியின் சௌந்தரியப் பெருங்கடலில் கரைத்துவிட எண்ணுகிறவர் போல, அதையும் சொல்லி அவள் அழகையும்

சொல்லுகிறார். அந்தச் சௌந்தரிய லஹரியிலே தம்மை மறக்கும் சங்கரர் பெருமை நாம் அறிந்தது தானே?

**ததியுறும் மத்திற் சுழலும்என்**
**ஆவி தளர்விலதோர்**
**கதியுறு வண்ணம் கருதுகண்**
**டாய்; கம லாலயனும்**
**மதியுறு வேணி மகிழ்நனும்**
**மாலும் வணங்கிஎன் றும்**
**துதியுறு சேவடி யாய்,சிந்து**
**ரானன சுந்தரியே!**

[தயிரில் நின்று சுழலும் மத்தைப்போலப் பிறப்பு இறப்புக்களினிடையே சுழலும் என் உயிர், தளர்ச்சியில்லாத தாகிய ஒருநல்ல நிலையை அடையும் வண்ணம் திருவுள்ளத் தில் கொண்டருள வேண்டும்; தாமரையை இருக்கையாகக் கொண்ட பிரமனும், சந்திரனை வைத்த சடாபாரத்தை யுடைய நின் கணவனாகிய சிவனும், திருமாலும் வணங்கி எப்போதும் துதிசெய்கிற செம்மையான திருவடிகளை உடை யவளே, செவ்வண்ணத் திலகம் அணிந்த நெற்றியுள்ள பேரழகியே!

ததி—தயிர். ஆவி—உயிர். கதி—வழி; இங்கே நிலை. கருது கண்டாய்; கண்டாய்,அசைநிலை. கமல ஆலயன்; ஆலயம்—இருப்பிடம். மதி—பிறை. வேணி—சடை. மகிழ்நன்—கணவன். சிந்துர ஆனனம்; சிந்துரம்—குங்குமத் திலகம்; ஆனனம்—முகம்; இங்கே நெற்றி.[

பிறப்பு இறப்பாகிய துன்பத்தைப் போக்கியருள வேண்டும் என்பது கருத்து.

மாணிக்கவாசகர் ஒரு வகையில் மத்தையும் தயிரையும் உவமையாக ஆண்டிருக்கிறார்; "மத்துறு தண்டயிரிற்புலன் தீக்கது வக்கலங்கி, வித்துறு வேனை விடுதி கண்டாய்" என்பது அவர் திருவாக்கு.

இது ஏழாம் பாடல்.

# அழியாத கன்னிகை

அடியையும் ஆனனத்தையும் தியானித்து அபிராம வல்லியின் பேரழகிலே உள்ளத்தைப் பறிகொடுத்த ஆசிரியருக்கு, அப்பெருமாட்டியின் திருவருள் வல்லபத்தால் தம்முடைய அறியாமை நீங்கியது நினைவுக்கு வருகிறது. தன்னை நம்புகிறவர்களுக்கு அருள் செய்ய முன்வரும் அன்னையின் பரங்கருணையை எண்ணி இன்புறுகிறார்.

அவள் கண்ணையும் கருத்தையும் கவரும் பேரழகி. அந்த அழகை நுகரும் ஒருவன் இருக்கிறான். அவன் தான் நம்முடைய தந்தையாகிய பரமசிவன். அவனுக்குத் துணைவியாக நின்று அவனுக்கே புகழைஉண்டாக்குகிற பெருமாட்டி அவள்; ஆண் எப்படியிருந்தாலும் அழகியாக ஒரு மனைவி அருகில் உடன் வந்தால் அவளால் அவனுக்குப் பெருமை உண்டாகிறது. அப்படி இந்தச் சுந்தரியைச் சிவபெருமான் தன் துணைவியாகக் கொண்டு பெருமையை அடைகிறார்.

சுந்தரி, எந்தை துணைவி.

மனையாட்டி என்று சொல்லாமல் துணைவி என்றார். இறைவன் அவளுடைய துணையினால் தருக்கோடு விளங்குகின்றான். ஆதலின் அவ்வாறு சொன்னார். 'பானை பிடித்தவள் பாக்கியம்' என்று பாராட்டுவது உலக இயல்பல்லவா?

எந்தைக்கே துணையாக இருந்து நலம் செய்யும் பெருமாட்டி, தன்னை நம்பிய குழந்தைகளின் துன்பத்தைப் போக்குகிறாள். அவளுடன் ஒன்றி அருளின்பம் பெறுமல், பாசத்தால் கட்டுண்டு கிடக்கிறார்கள் ஜீவர்கள்.

அவர்களிற் சிலர் தாமாக முயன்று அவளை அடைய எண்ணுகிறார்கள். பேதைக் குழந்தைகள் பலர் பவபந்தத்தினின்றும் விடுபட அறியாமல் தியங்கிக் கதறுகிறார்கள். அவர்கள் தம் அன்னை இவள் என்று உணர்ந்து உருகினால் அவள் கருணை மிக்கு அவர்களை அடைந்து அவர்களுடைய பாசக்கட்டை நீக்கிவிடுகிறாள். 'என்னுடைய பாச விலங்கையெல்லாம் எம்பெருமாட்டியே கருணையினால் என்பால் எழுந்தருளி வந்து அரிந்தாள்' என்று கூறுகிறார் அபிராமி பட்டார்.

என் பாசத் தொடரை எல்லாம்
வந்து அரி சிந்துர வண்ணத்தினாள்.

பாசத்தினால் கட்டுப்பட்ட பசு அந்தப் பாசத்தினின்றும் விடுபடுவதே முத்தி. பாசத்திற் கட்டுப்படாமல் இருப்பது பரப்பிரம்மமாகிய பதி. பாசக்கட்டு நீங்கினால் பசுவானது பதியோடு சேர்ந்துவிடும். அந்தப் பாசம் நீங்கப் பசுக்கள் பல பல முயற்சிகளைச் செய்கின்றன. இறைவன் திருவருள் இல்லாவிட்டால் பசுவினுடைய முயற்சியினால் பாசவிமோசனம் உண்டாகாது.

'என்னுடைய பாசத்தை நீக்கும் முயற்சியை நான் செய்ய வேண்டும். அதற்குரிய ஆற்றல் எனக்கு இல்லை. நான் எம்பெருமாட்டியே கதி என்று இருந்தேன். அன்னை என்னுடைய நிலையை உணர்ந்து தானே என்னை அணுகி என் பாசத் தொடரை அரிந்துவிட்டாள்' என்ற எண்ணங்களை உள்ளடக்கி,

என் பாசத்தொடரை எல்லாம்
வந்து அரி

என்கிறார். பசுபாச விமோசனி, பாசஹந்த்ரி என்பன அம்பிகையின் திருநாமங்கள். அவளை அடையாளம் கண்டு கொண்டவராதலின்,

சிந்துர வண்ணத்தினள்

என்கிறார். திரிபுரசுந்தரி செய்ய திருமேனியுடையவள் என்பதை முதற் பாட்டிலேயே நினைப்பூட்டிக்கொண்டு புக்கவர் அல்லவா?

'என் பாசத்தொடரை அரிந்தவள் என்று சொல்கிறாரே; இந்த அருள் அவரளவிலே நின்ற தனியுரிமையோ?' என்ற ஐயம் எழும். அதைப் போக்குபவரைப்போல உலகம் அறிந்த அவள் பராக்கிரமச் செயலைச் சொல்ல வருகிறார். "மகிஷாசுரனது தலையின்மேல் திருவடியை வைத்து நிற்கும் அந்தரி" என்று கூறுகிறார். எம்பெருமாட்டி மகிஷாசுர மர்த்தனி; தாமத குணத்தின் அடையாளமான எருமையுருப் பெற்ற அசுரனை மாய்த்த துர்க்கை அவள். பசுக்களை அஞ்ஞானக் குழியில் அழுந்தச் செய்வது தாமத குணம்; அதனை மாய்க்கும் அருளுடையாள் அன்னை என்பதே மகிஷாசுர சங்காரக் கதையின் கருத்து. 'என் பாசத்தை நீக்குவது மட்டுமன்று; உலகத்தில் எல்லா ஜீவர்களுடைய அறியாமையையும் போக்கும் பெருமாட்டி அவள். மகிஷாசுர சங்காரத்தின் கருத்து அதுதானே?' என்று குறிப்பாகச் சொல்பவரைப்போல,

> என் பாசத் தொடரை எல்லாம்
> வந்தரி சிந்துர வண்ணத்தினள்,
> மகிடன் தலைமேல் அந்தரி

என்று இரண்டையும் அடுத்தடுத்து வைத்தார்.

மகிடன் தலைமேல் நின்ற கோலத்தில் அம்பிகை துர்க்கை என்றும் சாமுண்டி என்றும் வழங்கப்பெறுவாள்.

> "ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
> கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்"

என்பது சிலப்பதிகாரம்.

"கொதியாது கொதித்தெழுந்த
கோட்டெருமைத் தலையின்மிசை
மிதியாத சீறடி மிதித்தனபோல் தோன்ற"

என்பது ஒரு பழம் பாடல்.

அந்தரி என்பது அம்பிகையின் திருநாமம். அந்தரம் என்பது ஆகாசமாதலின் ஆகாச வடிவினள் என்னும் பொருள் உடையது அது; "வானந்த மான வடிவுடையாள்" என்று இவ்வந்தாதியில் வரும்.

மகிஷாசுர மர்த்தனியாகிய துர்க்கையின் கோலத்தை நினைந்தவுடன்,

**நீலி**

என்று கூறுகிறார். நீலி என்பது துர்க்கையின் பெயர்; காளி என்றும் கூறலாம்.

"சங்கரி அந்தரி நீலி"

என்பது சிலப்பதிகாரம்.

நீல நிறத்துடன் மகிஷாசுர மர்த்தனியாக நின்ற அம்பிகையின் திருக்கோலத்தை எண்ணினவர், எல்லாப் பொருளும் அழிந்தாலும் தான் அழியாத கன்னிகையாக இருப்பதை நினைக்கிறார்.

**அழியாத கன்னிகை.**

அம்பிகை உலகத்துக்கெல்லாம் அன்னையாயினும் அவள் என்றும் கன்னிகையாக இருப்பவள். அவள் அழியாதவள்; அவள் கன்னித் தன்மையும் அழியாதது. ஆதலின் அழியாத கன்னிகை என்பதற்கு அழியாதவளாகிய கன்னிகை என்றும், அழியாத கன்னித் தன்மையையுடையவள் என்றும் பொருள் கொள்ளலாம்.

"கனிகையுமை" (திருப்புகழ்)

"அகிலாண்ட கோடி யீன்ற

அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும்

ஆனந்த ரூப மயிலே" (தாயுமானவர்)

என்னும் திருவாக்குகள் இங்கே நினைப்பதற்குரியவை.

பிரமன் தருக்கு மிக்கவனாக இருந்தான்; "எனக்கும் ஐந்து தலை; சிவனுக்கும் ஐந்து தலை" என்று ஒப்பு நோக்கி இறுமாப்படைந்தான். அப்போது சிவபிரான் அவனுடைய தலை ஒன்றைக் கிள்ளி அந்தக் கபாலத்தையே பிச்சை வாங்கும் கலனாகக் கொண்டான். சிவபிரான் செயல்கள் யாவும் அம்பிகையாகிய சக்தியின் செயலாகக் கொள்வதற்கு உரியவை. அவனுக்கும் அவளுக்கும் வேறுபாடு இல்லை. ஆதலின் அம்பிகையும் கையில் பிரமகபாலம் தரித்திருப்பாள்.

**ஆரணத்தோன் கம் தரி கைத்தலத்தாள்.**

"மறையை ஓதும் பிரமனுடைய தலையைத் தாங்கிய கையை உடையவள்" என்பது இதன் பொருள். கம்—தலை; இங்கே கபாலம்.

பிரமன் யாவருக்கும் பிறப்பைத் தருபவன். அவன் ஜீவர்களின் தலையில் எழுதுகிறான் என்று சொல்வது ஒரு வழக்கு. எல்லாருடைய தலையிலேயும் எழுதுபவனது தலையையே திருப்பிப் பிடித்திருக்கிறாள் அன்னை. இது, தன்னை நம்பும் அடியார்களுக்குப் பிறப்பினால் வரும் இடும்பையைத் தீர்ப்பவள் என்பதைப் புலப்படுத்தும் திருக்கோலம். பிறப்பை நினைப்பூட்டும் பிரமனை அடர்த்து அவன் கபாலத்தைக் கையில் வைத்திருப்பது, பிறப்பின் காரணத்தையே அழித்து மாற்றுபவள் அன்னை என்பதைக் குறிக்கும் கோலமாகும்.

"பலிகொள் கபாலி"

என்று திருப்புகழும்,

"சிவஞான போதகி செங்கைக் கபாலி"

என்று வராகி மாலையும் அம்மை தன் கையில் கபாலம் உடையவளாக இருப்பதைக் கூறுகின்றன.

தேவருக்குத் துன்பம் செய்த மகிடன் தலையைக் காலால் மிதித்தும், தருக்குற்ற பிரமன் தலையைக் கையால் எடுத்தும் தன் திறமையைக் காட்டும் பெருமாட்டியை நாம் தியானிக்க வேண்டும். தீங்கு புரிவோருக்குக் கொடுமை புரிந்து காளியாக நின்றாலும், அவள் சுந்தரி. அவளுடைய திருவடி, மலர் போன்ற மென்மையையுடையது; அதனை நாம் நம் உள்ளத்திலே வைத்துத் தியானிக்க வேண்டும். அபிராமிபட்டர் எடுத்தவுடன் சுந்தரி என்று சொல்லிவிட்டு, அன்னையின் பராக்கிரமங்களை நினைவூட்டி, பின்பு அவளுடைய தாள் மலரைச் சுட்டிக் காட்டி, "அவை என் கருத்திலே உள்ளன" என்று முடிக்கிறார். இத்தனை புகழையும் பிரதாபத்தையும் வாயாரப் பாடி அச்சத்தைப் போக்கிக் கொள்கிறார். பிறகு அவள் திருவடி மலர்களையே இடைவிடாமல் உள்ளத்தே பதித்து நலம் பெறுவதைச் சொல்கிறார்.

சுந்தரி, எந்தை துணைவி, என்
பாசத் தொடரைஎல்லாம்
வந்தரி சிந்துர வண்ணத்தி
னள், மகி டன்தலைமேல்
அந்தரி, நீலி, அழியாத
கன்னிகை, ஆரணத்தோன்
கம்தரி கைத்தலத் தாள்,மலர்த்
தாள்என் கருத்தனவே.

[அழகி, எம் தந்தையாகிய சிவபிரானுக்குரிய வாழ்க்கைத் துணைவி, என் பாசமாகிய விலங்கையெல்லாம் என்பால் கருணையினால் எழுந்தருளி வந்து அழிக்கும் சிந்துரம் போன்ற செவ்வண்ண மேனி உடையவள், மகிடாசுரன் தலையின்மேல் நிற்கும் அந்தரி, நீல நிறம் உடையவள், என்றும் அழிவற்ற கன்னிகை, வேதனாகிய பிரமனுடைய கபாலத்தைத் தாங்கிய திருக்கரத்தை உடையள் ஆகிய அபிராமியின் தாமரை மலரைப் போன்ற திருவடிகள் என் கருத்தில் உள்ளன.

தொடர்-விலங்கு. அரி-அரிக்கும்; அழிக்கும். ஆரணம்-வேதம். கம்-தலை; இங்கே கபாலம். தரி- தாங்கும்.]

இறைவியைத் தியானம் செய்கிறேன் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 8-ஆவது பாடல்.

# திருக்கோலக் காட்சி

அம்பிகையின் மலர்த்தாளைக் கருத்தில் வைத்துத் தொழுத ஆசிரியர் அப் பெருமாட்டியின் திருக்கோலம் முழுவதையும் தரிசனம் செய்ய ஆசைப்படுகிருர். அம்மையிடம் விண்ணப்பித்துக் கொள்கிருர். 'உன்னுடைய மேனி முழுவதும் ஒருங்கே தரிசிக்க நீ அருள் புரிய வேண்டும்' என்று வேண்டிக் கொள்ளும்போது, இன்ன இன்ன அங்கங்களால் பொலிவுற்றவள் அம்மை என்பதை நினைக்கிருர்.

அபிராமியை 'அம்மே' என்று அணுகும் குழந்தையாக நிற்கிருர், இப்போது இவ்வாசிரியர். குழந்தைக்குத் தாயின் தனத்திலேயே கண் இருக்கும். தன் பசியைத் தீர்த்து வளர்க்கும் இடமல்லவா? இந்தக் குழந்தையும் தன் அம்மையை அடையாளம் சுட்டிச் சொல்லும் பொழுது அவளுடைய தாய்மையிலே மனம் ஈடுபட்டு, அவளுடைய திருத்தன பாரங்களைப்பற்றி முதலில் சொல்கிறது. ஆளுலும் இந்தக் குழந்தை அறிவுள்ள குழந்தை. ஆதலின் அந்த அருள்மயமான அங்கத்தைப் பற்றி விரிவாகவே சொல்கிறது.

அம்பிகையின் தனபாரத்திலே கண்ணும் கருத்தும் உடையவன் சிவபெருமான். 'காமேச்வர ப்ரேமரத்ன மணி ப்ரதிபணஸ்தனி' என்று லலிதா சகசிரநாமம் கூறுகிறது. காமேசுவரனுடைய காதலாகிய மணிக்கு எதிரே வழங்கும் மணிகளாம் அம்மையின் நகில்கள். நம்முடைய தந்தையாகிய சிவபிரான், காதல் மேன்மேலும் மிகுதியாகி எம்பெருமாட்டியின் தனபாரத்தைத் தன் கருத்

திலே அன்புடன் நினைக்கிறான்; திருவிழியாலே பார்க்கிறான். இதை முதலில் ஆசிரியர்,

**கருத்தன, எந்தைதன் கண்ணன**

என்கிறார். இறைவனுடைய அருள் நோக்கம் மேவுகின்ற இந்த நிகழ்ச்சியைக் குமரகுருபரர் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில் பாடுகிறார்;

''தார்கொண்ட மணிமுடி ஒருத்தன் திருக்கண்மலர்
சாத்தக் கிளர்ந்துபொங்கித்
தவழுமிள வெயிலும்மழ நிலவுமள வளவலால்
தண்ணென்று வெச்சென்றுபொன்
வார்கொண் டணைந்தமுலை மலைவல்லி''

என்று அவர் வருணிக்கிறார்.

உலகமெங்கும் பெற்ற தாயாகிய அம்பிகையின் நகில்கள் பெரிய உருவினை உடையன; மேருமலை போலப் பொலிவும் திரட்சியும் உடையன.

**வண்ணக் கனக வெற்பிற் பெருத்தன.**

முருகப் பெருமானுக்குப் பாலைக் கறந்து அருத்திய நகில்கள் அவை. இதனை உலகம் அறியாது. ஆனால் உலகம் அறிய அப்பெருமாட்டி அழுத பிள்ளை ஒருவனுக்குப் பாலை அளித்தாள். அழுதுலகை வாழ்வித்த கவுணியர் குலாதித்தனுக்கு, அம்மை பால் அளித்த செய்தி உலகம் அறிந்தது.

**பால் அழும் பிள்ளைக்கு நல்கின.**

இத்தகைய திருத்தனபாரம் அருளே வடிவமானவை. இறைவியே அருள் வடிவமானவள். அவள் திருவுருவம் கருணைப் பரப்பானால் அருள் ஊற்றெழும் வாயில் அந்த நகில்கள்.

**கந்தபுராண** ஆசிரியர்,

"ஆதி நாயகன் கருணையாய் அமலமாய்ப் பரம
போத நீரதாய் இருந்ததன் கொங்கையிற்
பொழிபால்"

என்று பாராட்டுவார். அம்மையின் பால் இறைவனது கருணை வடிவமாய் இருப்பது; மலம் நீங்கிப் பிறர் மலத்தை நீக்குவது; மெய்ஞ்ஞான சொரூபமாக இருப்பது. அதனால் தான் அந்தப் பாலை உண்ட பிரான் திருஞானசம்பந்தர் ஆயினார்.

**பேரருள்கூர் திருத்தன பாரமும்.**

அம்மையின் தனபாரத்தின் பெருமையை இரண்டு வகையில் சொன்னார். அவை இறைவனுடைய அருள் நோக்கினாற் கனிபவை; குழந்தைகளாகிய தொண்டர்களுக்கு ஞானப்பாலை அருத்துபவை.

அவற்றை எண்ணிக் குழந்தைத் தன்மையை மேற்கொண்ட ஆசிரியர் அவற்றின் மேலுள்ள முத்துமாலையைத் தியானிக்கிறார்.

**திருத்தனபாரமும் ஆரமும்.**

'ரத்னக்ரைவேய சிந்தாகலோல முக்தாபலான்விதா' என்ற திருநாமம் முத்துமாலை அசைவதைச் சொல்கிறது. "அணிவது வெண்முத்து மாலை", "முத்துவடங் கொண்ட கொங்கை", "பென்னம் பெரிய முலையும் முத்தாரமும்", "முலைமேல் முத்து மாலையுமே" (37, 42, 53, 85) என்று பல இடங்களில் முத்து மாலையை இவ்வாசிரியர் பாராட்டுவார். இதனைச் சகசிரதாரை என்னும் முத்து மாலை என்று **தக்கயாகப்பரணி** உரையாசிரியர் சொல்வார் (106, உரை)

* * *

திருமார்பிலுள்ள நகில்களையும் முத்துமாலையையும் எண்ணிய ஆசிரியர் திருக்கரங்களை நினைவு கூர்கிறார். அந்தக்

கைகளில் உள்ள வில்லும் அம்பும் அகக்கண்ணில் தோன்று கின்றன. அவள் கையில் இருப்பவை கரும்பு வில்லும் மலரம்புகளும் அல்லவா?

செங்கைச் சிலையும் அம்பும்.

உடனே அவருடைய தியானம் எம்பிராட்டியின் முகமண்டலத்துக்குத் தாவுகிறது. அம்மை புன்முறுவல் பூத்து நிற்கிருள். அந்த முறுவலுக்கே நூறு பாட்டுச் சொல்லியிருக்கிருர் மூககவி. மயிலிறகின் அடிக்குருத்தை அழகிய பல்லுக்கு உவமை சொல்வது மரபு. அபிராமியின் புன்னகை பூக்கும் பற்கள் முருந்தைப்போல (மயிலிறகின் அடிக்குருத்தைப்போல) இருக்கின்றன.

முருத்தன மூரலும்.

தேவி தன் அங்க நலன்கள் தோன்றக் காட்சி தர வேண்டுமென்று ஆசைப்பட்ட ஆசிரியர் ஒவ்வோர் அங்கமாகச் சொல்லி வந்தார். நகிலைச் சொல்லி மாலையையும் வில்லையும் அம்பையும் சொல்லி முறுவலையும் சொன்னுர். இனி ஒவ்வொன்ருகச் சொல்லிக் கொண்டிருக்கப் பொறுமை இல்லை; நேரமும் இல்லை. "நீ உன்னுடைய திருவுருவம் முற்றும் தோன்ற எழுந்தருளி வந்து என் முன்னே நிற்கவேண்டும்" என்று சொல்லி முடிக்கிருர்.

நீயும் அம்மே, வந்து என்முன் நிற்கவே.

சில அங்கங்களைச் சொன்னவர் மற்றவற்றைச் சொல்லி முடியாது என்று எண்ணி, அங்கியையே சொல்லிவிடுகிருர்.

உள்ளத்திலே எண்ணி எண்ணிக் கோலம் காண்பது போதாதென்று கருதி, என் முன்னிலையிலே வந்து நின்று காட்சி அருளவேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்கிருர்.

**கருத்தன, எந்தைதன் கண்ணன,**
**வண்ணக் கனகவெற்பிற்**
**பெருத்தன, பால்அழும் பிள்ளைக்கு**
**நல்கின, பேரருள்கூர்**
**திருத்தன பாரமும் ஆரமும்**
**செங்கைச் சிலையும் அம்பும்**
**முருத்தன மூரலும் நீயும் அம்**
**மே, வந்தென் முன்நிற்கவே.**

[தாயே, எம் தந்தையாராகிய சிவபெருமானது திருவுள்ளத்தில் இருப்பனவும், திருவிழிகளில் உள்ளனவும், அழகு பெற்ற பொன்மலையாகிய மேருவைப்போலப் பருத்திருப்பனவும், அழுத திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்குப் பாலை வழங்கினவும் ஆகிய பெரிய திருவருள் மிகுந்த அழகிய திருத்தன பாரமும், அவற்றின்மேல் உள்ள முத்து மாலையும், சிவந்த திருக்கரத்திலுள்ள கரும்பு வில்லும் மலரம்புகளும், மயிலிறகின் அடிக் குருத்துப் போன்ற புன்னகையும், தேவியாகிய நின் பூரணத் திருக்கோலமும் என்முன் நின்று காட்சி அருளுக.

கருத்தன என்பது சிவபெருமான் நினைவில் உள்ளன என்பதையும், கண்ணன என்பது அவனுடைய பார்வையைப் பெறுவன என்பதையும் குறித்தன. எந்தைதன் கருத்தன, எந்தைதன் கண்ணன என்று கூட்டவேண்டும்; இடைநிலை விளக்கு. வெற்பின்-வெற்பைப்போல. ஊட்டாமல் கிண்ணத்தில் கறந்து அருத்தினமையின், நல்கின என்றார். கருத்தன, கண்ணன, பெருத்தன, நல்கின ஆகிய திருத்தனபாரம். ஆரம்-முத்து மாலை. சிலை-வில். எதுகை நோக்கி முருந்து என்பது முருத்து என வந்தது.]

நின்னுடைய திருக்கோலக் காட்சியைக் காட்டியருள வேண்டும் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் ஒன்பதாவது பாட்டு.

# முத்தியானந்தம்

அம்பிகையை வழிபடுவதற்கென்று பல வகை நியதிகள் உண்டு. அவளுடைய பூஜையின் விரிவை வேறு எந்த மூர்த்தியினிடத்திலும் பார்க்க வொண்ணாது, தந்திரங்கள் பலவும் எம்பிராட்டியின் பூஜாவிதானங்களைப் பரக்கப் பேசுகின்றன. முறைப்படி தீட்சையும் உபதேசமும் பெற்றவர்கள் அம்பிகையின் உபாசனையில் ஈடுபட்டு விதிப்படி பூஜை செய்வார்கள். இடம், காலம் முதலிய வரையறைகள் அத்தகைய வழிபாட்டுக்கு உண்டு.

ஆகையால் அம்பிகையை உபாசனை செய்ய அஞ்சுபவர்கள் பலர். தவறு நேர்ந்தால் பெருந் தீங்கு உண்டாகிவிடும் என்ற வியாஜத்தால் அன்னையின் பெருங் கருணையைப் பெற முடியாதபடி நிற்பவர்கள் பலர்.

உண்மை அது அன்று. குழந்தை செய்யும் குற்றங்களை மன்னிப்பதில் தாயை விடச் சிறந்தவர் ஆரும் இல்லை. புத்திரர்களில் தீயவர்கள் உண்டேயன்றி அன்னைமாரில் தீயவர் யாரும் இல்லை. கொடிய இயல்புகளுடைய பெண்களும் தம் சொந்தக் குழந்தைகளைப் பொறுத்தவரையில் நல்லவர்களாகவே இருப்பார்கள். அப்படி இருக்க, லோக ஜனனியாகிய எம்பிராட்டி வழிபடுவதற்கு அரியவள் என்று எண்ணுவது தவறு.

துர்க்கை, காளி முதலிய உருவங்களில் அன்னை அச்சம் தரும் கோலமுடையவளாக இருக்கிறாளே என்று தோன்றும். அவை தீய சக்திகளாகிய அசுரகணத்தை

அழிக்க எம்பிராட்டி மேற்கொண்ட கோலங்கள். குழந்தைகளாகிய அன்பர்களுக்கு எப்போதும் அவள் இனியவளாகவே இருப்பாள்.

நாம் தேவியினுடைய குழந்தைகள் என்ற நினைவும், அதன் விளைவாக அவளிடத்தில் பேரன்பும் உண்டானால் நிச்சயம் பிராட்டியின் அருள் நமக்கு கிடைக்கும். நாம் தூய மனமுள்ள குழந்தைபோல ஆக ஆக அன்னை நம்மை அணுகி வந்து அருளுவாள். அலுவலகம் போகும் பையன், பள்ளிக்கூடம் செல்லும் மகன், நடைபோடும் இளஞ்சேய், கைக்குழந்தை ஆகியவரிடத்துத் தாய்க்கு அன்பு இருப்பது இயல்பு. ஆனால் ஒவ்வொரு பருவத்திலும் ஒவ்வொரு வகையில் அன்னை தன் அன்பைக் காட்டுகிறாள் பெரிய மகனைத் தீண்டாமல் அவன் நலங்களைக் கவனிக்கிறாள். பள்ளிக்கூடம் செல்லும் மகனைக் குளிப்பாட்டிச் சட்டை போட்டுவிடுகிறாள். நடக்கத் தெரிந்த இளங் குழந்தையை விளையாட விட்டுவிடுகிறாள். கைக் குழந்தையை எப்போதும் அருகிலே வைத்திருக்கிறாள்; எங்காவது போனால் எடுத்துக் கொண்டு போகிறாள்.

உலகியலில் நாம் வளர வளர அன்னையின் அணைப்பிலிருந்து விலகிக் கொண்டே வருகிறோம். ஆனால் அருளியலில் நாம் வரவரச் சிறு குழந்தையாக வேண்டும். வர வர அன்னையை அணுகி அவள் இடுப்பில் ஏறும் குழந்தையாகிவிட வேண்டும். அப்போதுதான் ஒவ்வொரு கணமும் அப் பெருமாட்டி நம்மைக் கவனிப்பாள். நமக்கென்று ஒரு செயலும் இல்லாமல் இழந்து, "அம்மா! எல்லாம் உன் செயல்" என்று இளங் குழந்தையாகிவிட்டால், நமக்காக அம்மாவுக்குப் பசிக்கும்; நமக்காக அம்மா நடப்பாள்; நமக்காக அம்மா மருந்துஉண்பாள்; நமக்காக அம்மா படுத்துக்கொள்வாள்; நமக்காக அம்மா விளையாடுவாள்.

அன்னையைக் காட்டிலும் இரக்கம் உடையவர் யாரும் இல்லை. அவளைக் காட்டிலும் எளிய அன்பினரும் இல்லை. ஸ்ரீமாதாவாகிய அவளிடம் எந்த நிலையிலும் அன்பு செய்யலாம்.

* * *

மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று கரணங்களாலும் இறைவியை வழிபடவேண்டும். இந்த மூன்றிலும் சிறப்பானது மனம். அம்மையை மனத்தால் நினைப்பதற்கு இன்னதுதான் நேரம், இன்னதுதான் நிலை என்ற வரையறை இல்லை. நாம் எப்போதுமே மூச்சு விட்டுக்கொண்டிருக்கிறோம். பேசினாலும் பேசாவிட்டாலும், தூங்கினாலும் விழித்திருந்தாலும் மூச்சு விடுவது நிற்பதே இல்லை. டாக்டர் மயக்க மருந்து கொடுக்க, உணர்வு இழந்து உடம்பு கட்டையாகிக் கிடக்கும் போதும் மூச்சுவிட்டுக் கொண்டிருக்கிறோம். உயிர் உடம்பில் இருப்பதற்கு அடையாளம் இது.

அன்னையின் நினைப்பு மூச்சு விடுவதுபோல அமைய வேண்டும். நின்றாலும் உட்கார்ந்திருந்தாலும் படுத்திருந்தாலும் அவள் நினைவு நம் உள்ளத்தே இழையோட வேண்டும். நமக்கு விழிப்பு இருக்கும்போதெல்லாம் 'நாம் இன்னார்' என்ற நினைப்பு இருந்துகொண்டே இருக்கிறது. அதனோடு, நாம் அன்னையின் குழந்தை என்பதும் இணைந்துவிட வேண்டும். அப்படி ஒரு பழக்கம் வந்துவிட்டால் எல்லாக் காலத்தும் அம்மையை நினைத்துக் கொண்டே இருக்கலாம்.

இத்தகைய நிலையை அடைந்த அபிராமிபட்டர் அம்பிகையை நோக்கிப் பாடுகிறார்.

"எம்பெருமாட்டியே, எளியேன் எக்காலத்திலும் உன்னை நினைந்து வாழ்கின்றேன். நின்றாலும் இருந்தாலும் படுத்தாலும் நடந்தாலும் உன்னை நினைத்தபடியே இருக்கின்றேன்" என்கிறார்.

**நின்றும் இருந்தும் கிடந்தும்**
**நடந்தும் நினைப்பது உன்னை.**

பழைய சைவநூல் ஒன்று, "நின்றும் இருந்தும் கிடந்தும் நினைமின்கள், என்றும் சிவன்தாள் இணை" என்று கூறுகிறது. எந்தச் செயலைச் செய்தாலும் அம்மையை நினைந்தபடி இருக்கும் இயல்பு அடியார்களுக்கு வரும்.

முருகனுடைய அடியாராகிய அருணகிரியார் இந்த நிலையை வேறு ஒரு முறையில் சொல்லுகிறார், "நான் மகளிர் இன்பத்தை நுகரும்போதும் உன் வேலை மறவேன்" என்கிறார்.

"கண்டுண்ட சொல்லியர் மெல்லியர்
காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேல்மற
வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டுடு
டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி ஆடவெஞ்
சூர்க்கொன்ற ராவுத்தனே"

என்று பாடுகிறார். பக்தர்களின் நிலையை இது தெளிவாகப் புலப்படுத்துகிறது.

* * *

மனத்தால் எப்போதும் தியானம் செய்வதைச் சொன்னவர், அடுத்தபடி காயத்தால் செய்யும் வழிபாட்டைச் சொல்கிறார், இந்த உடம்பை அம்மையின் அடிமலரிற் கிடத்த வேண்டும். கையால் பூஜை செய்து

காலால் வலம் வந்து கண்ணால் தரிசித்துக் காயத்தினால் ஆகும் வழிபாடுகளைச் செய்யலாம். ஆனால் இவற்றிற் கெல்லாம் இறுதியில் இருப்பது எம்பெருமாட்டியின் சரணாரவிந்தங்களில் நம் தலையைத் தாழ்த்தி வணங்குவதுதான்.

கையால் கும்பிடுவதும் தலையால் வணங்குவதும் வழிபாட்டு வகைகளே. ஆனால் சாஷ்டாங்கமாக, தண்டாகாரமாக, அடியில் வீழ்வதுதான் சரணாகதி, உயிரற்ற தடி நிறுத்தினால் கீழே விழுந்துவிடும். அது போலக் கர்த்திருத்துவ மனோபாவத்தை அடியோடு ஒழித்து, உன் சரணல்லால் சரணில்லை என்று அடைக்கலம் புகுவதையே அந்த நிலை காட்டுகிறது. பொதுநூல் கூறவந்த திருவள்ளுவர், தலையைப் படைத்த பயன் இறைவன் தாளில் விழுந்து வணங்குவதுதான் என்பதை எதிர்மறை முகத்தால் கூறியிருக்கிறார்.

''கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை''

என்பது திருக்குறள்.

ஆகையால் அன்னையின் திருவடித் தாமரையை வணங்குவதே காயத்தால் பெற்ற பயன். இதை ஆசிரியர் சொல்கிறார்.

**என்றும் வணங்குவது உன் மலர்த்தாள்.**

மூன்று கரணங்களில் மனத்தையும் உடம்பையும் சொன்னார். ஆனால் வாக்காகிய கரணத்தினால் செய்யும் வழிபாட்டை வெளிப்படையாகச் சொல்லவில்லை. ஆயினும் அதனையும் செய்பவர் இவ்வாசிரியர் என்பதை நாம் உணர வழி உண்டு. இந்தப் பாடல்களைப் பாடியிருப்பதே வாக்கினால் செய்த தொண்டு அல்லவா?

இவ்வாறு திரிகரணங்களையும் எப்போதும் அம்பிகையின்பால் ஈடுபடுத்திய ஆசிரியர் பாட்டின் பிற்பகுதியைத் தேவியின் பெருமைகளைச் சொல்லி விளித்து நிறைவேற்றுகிறார்.

**நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் நினைப்பது உன்னை;**
**என்றும் வணங்குவது உன் மலர்த்தாள்.**

* * *

அம்பிகையின் பெருமையைப் பெரியவர்கள் நமக்கு உணர்த்துகிறார்கள். அவர்கள் தம்முடைய ஆசிரியர்களின் வாயிலாக அவள் பெருமையை உணர்ந்தவர்கள். அந்த ஆசிரியர்களோ தங்கள் குருநாதர்களிடம் தெரிந்து கொண்டவர்கள். இப்படி ஆராய்ந்து கொண்டே போனால் முடிவில் வேதத்தினிடம் வருவோம். அநாதி காலமாக நித்தியமான உண்மைகளை உணர்த்துவது வேதம். அதிலிருந்தே எல்லா நூல்களும் பிறந்தன. அந்த வேதம் தன்னுடைய பரம தாத்பர்யமாகத் தேவியைச் சொல்கிறது.

வேதத்தின் சாரமாக, உள்ளுறை பொருளாக, இருப்பவள் பராசக்தி. இதை முதலில் சொல்கிறார்.

**எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே!**

மறையை, எழுதா மறை என்றார். மறை என்பதற்கு மறைக்கப்படும் பொருள், இரகசியம், மந்திரம், வேதம் என்று பல பொருள் உண்டு. வேதத்துக்கு வடமொழியில் சுருதி என்றும், தமிழில் கேள்வி என்றும் பெயர் உண்டு. எழுதிப் படித்துத் தெரிந்துகொள்வது அன்று அது. சுவர அமைப்புக்கள் பிறழாமல் ஆசிரியன் ஓதுவிக்கக் காதினால் கேட்டு மாணாக்கன் பலகாலும் ஓதிப் பயில்வது. காது வழியே கேட்டுப் பயிற்சி பெற்று வழங்குவதனால் தான் அதற்குச் சுருதி, கேள்வி என்ற பெயர்கள்

உண்டாயின. எழுதித் தெரிந்துகொள்ள முடியாமையின் அதற்கு எழுதாக் கிளவி என்ற பெயர் உண்டாயிற்று.

எழுதா மறையில் பல வகைப் பொருள்கள் இருக்கின்றன. தங்கம் அகப்படும் கனியில் பிற உலோகங்களும் மண்ணும் நீரும் இருக்கும். ஆனால் எல்லாவற்றிலும் முக்கியமான பொருள் தங்கம்; அதுதான் அரிய பொருள். வேதமெனும் சுரங்கத்தில் பல பொருள்கள் கிடைத்தாலும் எல்லாவற்றினும் மேலான பொருளாக விளங்குபவள் தேவி. வேதப் பெரும் பரப்பில் புகுந்தால் அவளை எளிதிலே கண்டுபிடிக்க முடியாது. அவள் அதன் சாரமாக, அதனுள் அமைந்த அரிய பொருளாக, விளங்குகிறாள். அதனால்தான், 'எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே' என்றார்.

அம்பிகைக்கு "வேதவேத்யா" (லலிதாசகசிரநாமம், 335) என்று ஒரு திருநாமம் உண்டு. வேதங்களால் அறியத் தக்கவள் என்பது அதன் பொருள். வேதங்களை முற்றும் அறிந்தோம் என்பவர்கள் அம்பிகையை உணராவிட்டால் அவர்களுடைய அறிவு பயன் பெற்றது ஆகாது.

வேதங்கள் அம்பிகையின் திருக்கோயிலில் உள்ள நாலுதிசை வாயில்களின் படிகளாக உள்ளன என்று நூல்கள் கூறுகின்றன. லலிதா ஸ்தவரத்னம் என்ற நூலில், அம்பிகை எழுந்தருளியிருக்கும் சிந்தாமணிக் கிருகத்தில் உள்ள நான்கு திருவாயில்களிலும் நான்கு வேதங்களும் உள்ளன என்ற செய்தி வருகிறது. கிழக்கு வாயிற்படியாக ருக் வேதமும், தெற்கு வாயிற்படியாக யஜுர்வேதமும், மேற்குப் படியாக அதர்வண மறையும், வடக்கே சாமவேதமும் இருக்கின்றனவாம். இந்த அமைப்பு, வேதமென்னும் வாயிலின் வழியே சென்று

அம்பிகையைத் தரிசிக்க வேண்டும் என்ற கருத்தைப் புலப் படுத்துவதே யாகும்.

"மறையாய் மறைப்பொருளாய்ப் பொருள் முடிவுதானய் ......இடம்பிரியா எம்பிராட்டி"

என்பது திருவிளையாடற் புராணம்.

வேதம் யாவரும் ஓதுவதற்கு உரியதன்று. ஓதுப வர்கள் யாவருமே அதன் பொருளை உணர்ந்தவர் என்றும் சொல்ல முடியாது. அப்படி உணர்ந்தாலும் அதில் ஒன்றிய அரும் பொருளாகிய அம்பிகையை உணர்வது மிகவும் அருமை. இத்தகைய அருமைப் பாட்டை உடைய அம்பிகையை எல்லோரும் எப்படி உணர முடியும்? எப்படி அணுக முடியும்?

இப்படி ஓர் ஐயம் எழுவது இயல்பே. ஆனல் அம்பிகை வேதத்தில் உறையும் அரும்பொருளாக இருப் பினும் குழந்தைகளுக்கு எளியவள். மகாராணியைக் குடிமக்கள் எளிதில் காண முடியாது. ஆனல் அவள் வெளிப்பட்டுக் காட்சியளிக்கலாம்.

தேவியும் அத்தகைய கருணை உடையவள். தாயே கருணைக்கு இருப்பிடம்.

'தாயிற் சிறந்த தயாவான தத்துவனே"

என்று தயைக்குத் தாயை உவமை சொல்வது வழக்கம். எக்காலத்தும் எவ்வுயிருக்கும் தாயாக இருக்கும் அம்பிகையோ தயையே வடிவாக இருப்பவள். அந்தத் தயையினல் அவள் அன்பு செய்வார்க்கு எளிய பொரு ளாகவும் விளங்குகிறள். அவளை,

அருளே

என்று அழைக்கிறர் அபிராமிபட்டர். "தயாமூர்த்தி" என்று லலிதா சகசிரநாமம் (58) அவளைத் துதிக்கிறது.

"அருளது சத்தி யாகும் அரன்றனக்கு" என்பது **சிவஞான சித்தியார்.**

எம்பெருமாட்டியின் பேரருளுக்கு எடுத்துக் காட்டாகப் பலவற்றைச் சொல்லலாம். குணம் குறி கடந்த பிராட்டி உமாதேவியாக எழுந்தருளி இமயவரை அரசனுடைய குமாரியாக உலவினள். அது அவளுடைய கருணைத் திருவிளையாடல். பராசக்தி எட்டாக் கொம்பில் இனிக்கும் பழமாக இருப்பவள்; கனிச் சாறு கிழிந்து மலையிலே ஆருக ஓடியதுபோல அந்தப் பெருமாட்டியே இமய அரசன் மடமகளாக வந்து துள்ளி விளையாடினள்; பக்தர்களுக்கு மணக்கோலம் காட்டி மகிழ்வு தந்தாள்; அப்பன் அருகில் அம்மையாக வீற்றிருந்து அருள் பாலிக்கிருள்.

**உமையே, இமயத்து அன்றும் பிறந்தவளே!**

உமா என்ற திருநாமமே உமை என்று தமிழில் வந்தது. அந்த நாமத்துக்குப் பல வகைப் பொருள் உண்டு. லலிதா சகசிரநாமத்தில் 633-ஆம் திருநாமமாக உள்ள அதற்குப் பல சிறப்புகளைக் கூறுகிருர், அந்நூலின் பாஷ்யகாரராகிய பாஸ்கர ராயர்.

ஓம் என்ற பிரணவம் அகார உகார மகாரங்களால் அமைந்தது. உமா என்பதிலும் அந்த மூன்றும் இருக்கின்றன; உகார மகார அகாரம் என்ற முறையில் உள்ளன. இதைத் தேவீப்ரணவம் என்று சொல்வது மரபு. லிங்க புராணமும் மகாவாசிஷ்டமும் இந்த உண்மையை உணர்த்துகின்றன. ஆகவே ஓங்காரத்திற்கு எத்தனை வகையான பொருள்கள் உண்டோ அவ்வளவும் இத் திருநாமத்துக்கும் உண்டு.

உ என்பது சிவபெருமானையும், மா என்பது திருமகளையும் குறிப்பன. சிவபெருமானைத் திருவுடைய

வனாக, செல்வாய செல்வமுடையவனாகச் செய்பவள் அம்பிகை என்பது, அத்திருநாமத்தால் கிடைக்கும் வேறு ஒரு பொருள்.

அகண்டாகாரமான பரமசிவனை ஆன்மாக்களுக்கு அருள் செய்ய எளிய வடிவுடையவனாக, எல்லைக்குள் அடங்குபவனாகச் செய்பவள் என்பது ஒரு பொருள். காயாம்பூ நிறத்தவள், மஞ்சள் வண்ணமுடையவள், புகழுடையவள், ஒளித்திரு மேனியள் என்ற பொருள்களும் அப்பெயரால் கொள்வதற்கு உரியவை. உத்தமமான சித்தவிருத்தியின் உருவாக விளங்குபவள், பிந்துரூபமான இந்து கலையின் வடிவமுடையவள் என்ற பொருள்களைக் கொள்ளவும் இடம் உண்டு.

உ என்பது அழைக்க உதவுவது; மா என்பது தடுக்க உதவும் சொல். தேவி பார்வதியாகத் திருவவதாரம் செய்து தவம் புரியச் செல்லும்போது, அவளுடைய இளமையை எண்ணிக் கவலையுற்ற இமராஜன் மனைவி யாகிய மேனை, அம்மையை அழைத்துத் தவஞ் செய்ய வேண்டாமென்று தடுத்தாள். அப்படித் தடுக்கப் பெற்ற மையால் உமா என்ற திருப்பெயர் அம்மைக்கு வந்தது என்று புராணங்கள் கூறுகின்றன.

விநாயக பீடத்திலும் சிந்து வனத்திலும் தெய்வத் தன்மை மணக்க எழுந்தருளி இருக்கும் அம்பிகைக்கு உமா என்ற திருநாமம் வழங்குகிறது. ஆறு ஆண்டுள்ள கன்னிக்கு உமா என்று பெயர்.

இப்படிப் பல பல பொருள்களையுடைய உமா என்னும் திருநாமத்தை உடையவள் அம்பிகை. தேவீப்ரணவ மாகக் கொள்வதும் தவக்கோலத்துடன் நின்ற பார்வதி யைக் குறிப்பதும் ஆகிய இரண்டும் சிறந்தன.

அம்பிகை கருணையினால் உலகத்தவருக்கு அருள அவதாரம் செய்ததையும் உமா என்ற திருநாமம் காட்டு கிறது. அவள் பல திருவவதாரங்களை எடுத்திருக்கிருள். கண்ணனாக அவதரித்தவளும் அவளே என்று தேவி பாகவதம் கூறும், எந்த எந்தக் காலத்தில் எப்படி எப்படி அவதாரம் செய்ய வேண்டுமோ அப்படி அப்படி அவதரிப்பவள் தேவி. பார்வதியாக எழுந்தருளியது அந்த அவதாரங்கள் பலவற்றில் ஒன்று; பலராலும் போற்றப் பெறும் திருக்கோலம் அது.

இமயத்து அன்றும் பிறந்தவளே!

இமயத்திலே தோற்றியதையே பிறந்தவளே என்பதில் குறிப்பித்தார். 'தோற்றமுடைய பொருள்களுக்கு அழி வுண்டு. ஆகவே இவளுக்கும் அழிவுண்டோ என்று அறியாத வர்கள் ஐயுற இடங்கொடுத்து விட்டோமே!' என்று எண்ணினர்; உடனே,

அழியா முத்தி ஆனந்தமே!

என்கிருர்.

முக்தி என்பது விடுதலை என்ற பொருளுடையது. பாசபந்தங்களினின்றும், மாயையினின்றும், பிறப்பு இறப்பு களினின்றும் விடுதலை பெறுவதே முக்தி, அது ஆனந்த மயமானது. அதைப் பேரானந்தம், பிரம்மானந்தம், சிவானந்தம், ஆத்மானந்தம், ஆனந்தம் என்று அடை கொடுத்தும் அடையின்றியும் சொல்வார்கள்.

இன்பம், துன்பம் என்ற இரண்டையும் நாம் நுகர் கிறோம். இன்பம் என்பது ஒளியானல் துன்பம் என்பது நிழலாகும். முத்தியின்பம் என்பது இந்த இரண்டில் ஒன்ருன இன்பம் அன்று. சுகதுக்கங்களுக்கு அப்பாற் பட்ட ஆனந்தம் அது. இந்திரியங்களின் வாயிலாக நாம் நுகருவதையே இன்பம் என்றும் துன்பம் என்றும்

சொல்கிறோம். மனம் உணர்வோடு இருக்கும்போது இன்ப துன்ப உணர்ச்சி உண்டாகும். முக்தி ஆனந்தம் மனம் அழிந்த நிலையில் உண்டாவது. அது ஆத்மாவின் நுகர்ச்சி. அது நிழலில்லாச் சுடர் போன்றது; எல்லை அற்றது; அழியாதது; கூடாதது; குறையாதது; பங்கு போடப் படாதது.

ஆனந்தம் வேறு, இறைவன் வேறு அன்று. இறைவனே ஆனந்தம். ஆனந்தமே இறைவன். பரமாத்மா ஆனந்தமே வடிவமாக இருக்கிறான் என்று உபநிடதங்கள் கூறுகின்றன.

பரதேவதையாகிய அம்பிகை பரப்பிரம்மமே ஆதலின் அவள் அழியா முத்தியானந்தமாக இருக்கிறாள். அவளோடு இரண்டற ஒன்றுவதே ஆனந்தப் பிராப்தியாகும்.

இறைவி முத்தியுருவாக விளங்குபவள் என்பதைப் பின்னே,

''சத்தியும் சக்தி தழைக்கும் சிவமும்
தவமுயல்வார்
முத்தியும்......ஆகி''(29)

என்று இவ்வாசிரியர் புலப்படுத்துவார்.

"முக்திரூபிணீ'' என்பது அம்மையின் திருநாமங்களில் ஒன்று (லலிதா, 737).

உலகம் தோற்றும்போதே அநாதி காலத்தில் வேதத்தினால் தன்னை உணர வைத்த அம்பிகை பின்பு பல திரு அவதாரங்களைச் செய்து உயிர்களுக்குக் கருணை பாலித்துப் பார்வதியாக வந்து, தன்னை உபாசனை செய்கிறவர்களைப் பந்தங்களினின்றும் விடுபடச் செய்து, முத்தியானந்தமாக நின்று ஒன்றுகிறவள் என்ற கருத்தை இப்பாடலில் உள்ள

வரிகள் உணர்த்துகின்றன. அவளை முக்கரணத்தாலும் வழி பட்டு வாழ்வது அடியார்களின் கடமை.

நின்றும் இருந்தும் கிடந்தும்
நடந்தும் நினைப்பதுஉன்னை;
என்றும் வணங்குவது உன்மலர்த்
தாள்; எழு தாமறையின்
ஒன்றும் அரும்பொரு ளே,அரு
ளே, உமை யே,இமயத்து
அன்றும் பிறந்தவ ளே,அழி
யாமுத்தி ஆனந்தமே!

[எழுதாமல் கேட்கப் படுகின்ற வேதத்தில் பொருந்தும் அரிய பொருளாக உள்ளவளே, அருளே வடிவாக உள்ளாய், அன்று இமாசலத்தில் பார்வதியாகத் திருவவதாரம் செய்தாய், அழியாத மோட்ச ஆனந்தமாக உள்ளவளே, அடியேன் நின்றபடியும் இருந்தபடியும் படுத்தபடியும் நடந்தபடியும் தியானம் செய்வது உன்னையே. என்றைக்கும் தலைதாழ்த்து வணங்குவது உன் திருவடித் தாமரையையே.]

இருத்தல்—உட்கார்தல், உன்னையே என்ற ஏகாரம் தொக்கது. அன்றும்: உம்மை, அசைநிலை. முன்னும் பின்னும் பல அவதாரங்கள் எடுத்ததுபோல அன்றும் அவதரித்தாய் என்று எச்ச உம்மையாகக் கொள்வதும் ஒன்று. அன்று: பண்டறி சுட்டு.]

அபிராமி அந்தாதியில் 10—ஆவது பாடல். இது.

# சரணாரவிந்தம்

அழியாத முத்தியானந்தமாகி நிலவுகிறவள் தேவி என்று சொன்னவர் தொடர்ந்து, "ஆனந்தமாய் என் அறிவாய்" என்று அடுத்த பாட்டைத் தொடங்குகிறார். ஆனந்தம் எங்கே இருந்தாலும் அங்கே அம்பிகையின் தொடர்பு இருக்கும். கனியில் சாறும், மலரில் மணமும், தேனில் இனிமையும், பாலில் நெய்யும், பாட்டில் பண்ணும், உடம்பில் உயிரும் இன்பத்தைத் தருவன. அவற்றிலெல்லாம் அம்மையின் அருள் விலாசம் இருக்கும். திங்களில் தண்மையும் கதிரவனில் ஒளியும் தென்றலில் மென்மையும் பிரபஞ்சப் பொருள்களில் அழகுமாக இருந்து இன்பம் தருகிறவள் அவள்.

ஆதலின் அடையில்லாமலே, ஆனந்தமே என்று சொல்கிறார். "ஆனந்த கலிகா" (ஆனந்த மாத்திரமாயிருப்பவள்) என்பது அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று (729). அவள் ஆனந்தமே வடிவமாக இருப்பவள். எல்லா இன்பங்களுக்கும் மேலான பரமானந்த ஸ்வரூபியாக இருப்பவளும் அவளே. அதனால்தான் "பரமானந்தா" (லலிதா சகசிரநாமம், 252) என்ற திருநாமம் அன்னைக்கு அமைந்தது.

ஆனந்தம் அடைய விரும்புவார் அம்மையின் அருளைப் பெற வேண்டும். இன்பதுன்ப அநுபவங்கள் நிறைந்தது உலக வாழ்க்கை. இந்த வாழ்க்கை ஆனந்த மயமாக வேண்டுமானால் இறைவியின் திருவருளைத் துணை கொள்ள வேண்டும். கசப்பான மருந்துகளுக்கு இனிப்பான தேனை அநுபானமாகக் கொண்டு உண்ணுவதுபோல, பழம் பிறவியிற் செய்த வினைகளின் பயனாக இப்போது நுகரும்

துன்பங்களும் இறைவியின் அருளைத் துணையாகக் கொண்டால் வருத்தத்தை உண்டாக்காமல் உரம் இழந்து நிற்கும்.

"நரகம் பெறினும்
என்னேன் திருவருளாலே இருக்கப்பெறின் இறைவா"

என்று மாணிக்கவாசகர் பாடுவார்.

ஆனந்தமாக நின்ற தேவி மனிதர்களைச் சைதன்ய முடைய பொருளாக ஆக்குகிருள். அவர்களுடைய மனத்தில் அறிவாக நின்று தெளியச் செய்கிருள். ஞானமே உருவாகிய எம்பெருமாட்டி அறிவுக்கு அறிவாய் நின்று ஆன்மாக்களை உய்யக் கொள்கிருள். பிற பொருளை அறிவதற்குக் கருவியாகிய அறிவாக நிற்கிருள்; தன்னை அறிவதற்குரிய வாலறிவாக நிற்பவளும் அவளே.

**ஆனந்தமாய் என் அறிவாய்.**

அடுத்தபடி அம்மையை,

**நிறைந்த அமுதமுமாய்**

என்கிருர்.

அம்ருதம் என்ற வடசொல் அமுதம் என்று வந்தது. அச்சொல், மரணத்தைப் போக்குவது, மரணம் இல்லாதது என்ற பொருள்களைத் தரும். பொதுவாக அமுதம் என்ருல் தேவர்கள் உண்ட தேவாமுதத்தையே நாம் நினைக்கிருேம். அம்ருதம் என்ற சொல்லின் பொருளாகிய மரணத்தைப் போக்குவது என்பது தேவாம்ருதத்துக்குப் பொருந்துமா என்பதை ஆராய வேண்டும். தேவர்கள் சாவாமல் இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடன்தான் அமுதத்தைக் கடைந்தனர்; உண்டனர். அதற்கு முன்பெல்லாம் மனிதர்களைப்போல் இன்ன காலம் என்று இல்லாமல்

அமரர்கள் இறந்து கொண்டிருந்தார்கள், அமுதம் உண்ட பிறகு தமக்குரிய ஆயுள் முழுவதும் வாழ்ந்தார்கள். அந்த ஆயுட்காலம் முடிந்தால் அவர்களும் இறந்தார்கள்.

''நூறு கோடி பிரமர்கள் நுங்கினார்'' என்பது தேவாரம். இந்திர பதவியில் ஒரே இந்திரன்தான் இருக்கிறான் என்பது இல்லை. எத்தனையோ இந்திரர்கள் வந்து வந்து போனார்கள். பிரமர்களும் பலர் வந்து போனார்கள். அவர்களுக்கும் மரணம் உண்டு. சிவபெருமான் ஒருவனே மரணம் இல்லாமல் கால காலனாக இருக்கிறான்.

அமுதம் கடைந்தபோது ஆலகால நஞ்சு வந்தது. அதை உலவவிட்டிருந்தால் அமுதை உண்பதற்கு முன்பே தேவர்கள் அழிந்திருப்பார்கள். தேவர்களின் ஓலத்தைக் கேட்டு இரங்கிய சிவபெருமான் அந்த நஞ்சை உண்டு அவர்களைக் காப்பாற்றினான்.

நஞ்சை யுண்ட திருவிளையாடலைச் சிவபெருமான் செய்தாலும் அம்மையே அதனை உண்டாள் என்றும் சொல்வது உண்டு. சிவபெருமானுக்கும் சக்திக்கும் வேறுபாடு இல்லாமையால் அவ்வாறு சொல்கிறார்கள். சிலப்பதிகாரத்தில் பாலைநிலத்தில் உள்ள வேடுவர்கள் கொற்றவையை வழிபடுகிறார்கள் என்ற செய்தி வருகிறது. அவர்கள் தேவியைப் பாடுகிறார்கள். வேட்டுவ வரி என்ற பகுதியில் அப்பாடல்கள் உள்ளன. அங்கே அம்மை நஞ்சுண்ட செய்தியை அழகாக அமைக்கிறார் இளங்கோவடிகள். தேவர்கள் சாவாமையைத் தரும் என்று எண்ணி அமுதம் உண்டார்கள். அப்படி உண்டும் அவர்கள் இறந்து போகிறார்கள். ஆனால் அவர்கள் அஞ்சி நடுங்கிய நஞ்சைத் தான் உண்டு அழிவின்றி விளங்குவதோடு, இறந்தும் பிறந்தும் வரும் அமரர்களுக்குத் திருவருள் பாலிக்கிறாளாம் அம்பிகை.

"விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்"

என்பது அங்குள்ள பாடற் பகுதி. "நஞ்சுண்டு கறுத்த கண்டி" என்று பின்னும் பாடுவார்.

நஞ்சையே தன் கண்டத்தில் அமைத்துச் சாவாமல் இருக்கும் அம்பிகைதான் சாவாப் பரம்பொருள்; மூவாத கன்னிகை. அவள்தான் உண்மையான அமுதம். அவளை உட்கொண்டவர்கள் மரணமிலாப் பெருவாழ்வைப் பெறுவார்கள். ஆதலின் அபிராமி பட்டர்,

நிறைந்த அமுதமுமாய்

என்றார். மற்றவை யாவும் குறைவுடைய அமுதம்; சுவை மிகுதிபற்றி அமுதம் என்ற பெயரைப் பெற்றவை. நாம் உண்ணும் உணவில் கறியமுது, சாற்றமுது, இலையமுது ஆகியவை உண்டு. உணவையே அமுதம் என்கிறோம், சிறிது நேரத்திற்கு அவை உயிரைக் காப்பதனாலும், சுவை மிகுதியினாலும் அமுதம் என்று பெயர் பெற்றன. அப்படிச் சொல்வது உபசார வழக்கு. அந்த முறையில் வைத்துத்தான் தேவாமிர்தமும் அமிர்தம் என்ற பெயர் பெற்றது. சாற்றமுதும், சோற்றமுதும் மனிதர்களை உயிர் வாழச் செய்வது போலத் தேவாமிர்தமும் தேவர்களை உயிர் வாழச் செய்கிறது. சாறும் சோறும் மரணத்தை மாற்ற முடியாதது போலத் தேவாமிர்தமும் மரணம் இல்லா வாழ்வைத் தர முடியாது.

தேவராயினும் மனிதராயினும் அம்பிகையாகிய அமுதத்தை உட்கொண்டால் மாயாத நிலையை அடைவர், "மனிதரும் தேவரும் மாயா முனிவரும் வந்து சென்னி, குனிதரும் சேவடிக் கோமளமே" (4) என்று முன்பு சொன்ன பாட்டில் இறைவியைப் பணிபவர்களில் மாயா

முனிவர்களும் இருத்தலைச் சொன்னார். அவள் அருளைப் பெற்றவர்கள் அவர்கள்.

ஆனந்தமாய் என்றவர் அடுத்து அறிவாய் என்ருர்; அறிவு சித்துப்பொருள். பிறகு நித்தியமாகிய அமுதத்தைச் சொன்னார்; அது சத்துப்பொருள். ஆகவே இந்த மூன்றினாலும், அம்பிகை ஆனந்தமாய்ச் சித்தாய்ச் சத்தாய் நிற்பவள், சச்சிதானந்த ஸ்வரூபி என்பதும் புலனாகும். "ஸச்சிதானந்த ரூபிணி" (700) என்பது தேவியின் திருநாமங்களில் ஒன்று.

அம்பிகை தத்துவங்கள் எல்லாமாகி விளங்குகின்றவள். கடைசியில் தோன்றும் தத்துவங்கள் பஞ்சபூதங்களாகிய ஐந்து. அந்த ஐந்தில் கடைசித் தத்துவம் பிருதிவி. பஞ்ச பூதங்களைக் கீழிருந்து எண்ணினால் இறுதியானது வான். அதனை அந்தமாகக் கொண்ட ஐம்பெரும் பூதங்களும் அம்பிகையின் வடிவே. ஞானக் கண்கொண்டு பார்க்கிறவர்களுக்கு இந்த உண்மை புலனாகும்; அல்லாதவர்களுக்கு ஐம்பூதமாகத் தோன்றும்.

"மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தில் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதற் பூதம்"

என்பது திருமூலர் வாக்கு. ஆதலின் ஐம்பெரும் பூதமாகக் காட்சி அளிக்கிறவள் பரதேவதையாகிய அன்னையே என்று கொள்ளவேண்டும். இதை அடுத்தபடி நினைக்கிருர் அபிராமிபட்டர்.

**வான் அந்தமான வடிவுடையாள்.**

பஞ்சபூதேசி (949) என்பது அம்மையின் திருநாமங்களுள் ஒன்று' "உயிரொடு பூதமைந்தும் ஒரு முதலாகி நின்ற உமை" என்பது **திருப்புகழ்.**

இப்படி உள்ள பெருமாட்டியை நமக்கு வேதம் சொல்லிக் கொடுக்கிறது. "எழுதா மறையின் ஒன்றும் அரும்பொருளே" என்று சென்ற பாட்டில் வந்ததைப் பார்த்தோம். வேதங்களில் ஞானபாகமாக இருப்பவை அவற்றின் சிரசாகிய உபநிடதங்கள். அங்கே எம் பெருமாட்டியின் திருவடி நிலை கொண்டிருக்கிறது. நான்கு வேதங்களின் முடிவாக அந்தச் சரணாரவிந்தம் விளங்குகிறது.

**மறை நான்கினுக்கும் தான் அந்தமான சரணாரவிந்தம்.**

அம்பிகையின் திருவடி மறையின் முடியிலே இருப்பது என்று சொன்ன அபிராமிபட்டர், வேறு ஒரு செய்தியைச் சொல்லிப் பாட்டை முடிக்கிறார். சிவபெருமான் தம் திருமுடியின்கண்ணே அந்தத் தாமரையைச் சூடுகிறாராம். முடியில் செருகும் மாலையைக் கண்ணி என்பர். எம்பிரானுடைய முடியில் எம்பிராட்டியின் சரணாரவிந்தம் கண்ணியைப்போல் விளங்குகிறதாம்.

எம்பிரான் எத்தகையவர்? அவர் மயானத்தில் ஆடுகிறவர். எல்லாம் படுசூரணமாகி எங்கும் சாம்பல் நிரம்பி வெண்ணிறம் பெற்ற காடாகிய சுடலையில் ஆடுகிறவர் அவர். அந்த வெண்ணிறக் கானத்தைத் தாம் நடனம் ஆடும் அரங்காகக் கொண்டவர் அவர். எல்லாம் நீறாகி அந்த வெள்ளிய சூழ்நிலையில் ஆடும் நடனத்தைப் பாண்டரங்க நடனம் என்பர், உலகம் எல்லாம் அழியினும் தாம் அழியாமல் நிற்பவர் என்பதை அந்த ஆடல் காட்டுகிறது.

அத்தகைய பெருமான் இறைவியை வணங்குகிறார். ஊடற்காலத்தில் மனைவியைக் காதலன் வணங்குவதாகச் சொல்வது மரபு. அந்த வகையில் இங்கே அம்பிகையைத் தனியிடத்தில் சிவபெருமான் வணங்குவதை எண்ணிச் சொல்கிறார்.

**சரணாரவிந்தம் தவளநிறக்**
**கானம் தம் ஆடரங்காம் எம்பிரான் முடிக்கண்ணியதே.**

இப்படி இந்தப் பக்தரே வேறு இடங்களிலும் சொல்லியிருக்கிறார்.

"பனி மாமலர்ப் பாதம் வைக்க
மாலினும் தேவர் வணங்கநின் றோன்கொன்றை
வார்சடையின்
மேலினும்......நன்றே" (60)

என்றும்,

"தைவந்து நின்னடித் தாமரை சூடிய
சங்கரற்கு" (98)

என்றும் பாடுவது காண்க.

"கர்ப்பூர வல்லியின் பாதபத்மம்
மதுமத் தொடும்தம் முடிவைத் தவாமதுரேசர்"
(மீனாட்சியம்மை இரட்டைமணிமாலை)

என்று பிறரும் இவ்வாறு சொல்லியிருக்கின்றனர்.

சச்சிதானந்த ஸ்வரூபியும் பஞ்சபூத வடிவினளுமாக இருக்கும் பெருமாட்டியின் திருவடி, வேதங்களின் முடியாக நிலவிச் சிவபெருமானுடைய திருமுடியில் கண்ணியாக விளங்குகிறது என்று இந்தப் பாட்டில் அம்பிகையின் பெருமையை எடுத்துரைக்கிறார் ஆசிரியர்.

**ஆனந்த மாய்என் அறிவாய்**
**நிறைந்த அமுதமுமாய்**
**வான்அந்தம் ஆன வடிவுடை**
**யாள்; மறை நான்கினுக்கும்**
**தான்அந்தம் ஆன சரணார**
**விந்தம், தவளநிறக்**
**கானம்தம் ஆடரங் காம்எம்**
**பிரான்முடிக் கண்ணியதே.**

[ஆனந்த உருவமே தானுகி, என் அறிவாகி, நிரம்பிய அமுதம் போன்றவளாகி, ஆகாசம் ஈருன ஐம்பெரும் பூதங்களும் தன் வடிவாகப் பெற்ற தேவியினுடைய, நான்கு வேதங்களுக்கும் முடிவாக நிற்கும் திருவடித் தாமரையானது, வெண்ணிறத்தையுடைய மயானத்தைத் தம்முடைய ஆடும் இடமாக உடைய எம்பெருமானுகிய சிவபிரானது திருமுடி மாலையாக உள்ளது.

சரணுரவிந்தம் கண்ணியது என்று கூட்டுக. வான் அந்தமான—வானம் இறுதியாக உள்ள. சரண அரவிந்தம்—திருவடித் தாமரை. தவளநிறக் கான் — திருவெண்காடு என்றும் சொல்லலாம். அரவிந்தம் என்று மலராகச் சொன்னமையின் முடிக் கண்ணியது என்ருர்.]

இது அபிராமி அந்தாதியில் பதிஞேராவது பாட்டு.

# முன் செய்த புண்ணியம்

அம்பிகையின் திருவருளால் அநுபூதி பெற்ற அபிராமி பட்டர் தம் மனோவாக்குக் காயங்களால் அன்னையை நினைப்பதும் வாழ்த்துவதும் பணிவதுமாகிய செயல்களை இடைவிடாது செய்து வருகிறவர். இப்போது மனத்தில் எதை எண்ணினாலும் அது தேவியின் தொடர் புடையதாகவே அமைகிறது. அவளுடைய புகழ் எல்லை யில்லாதது; கடல்போலப் பரந்தது; நம் அறிவினால் அளக்க முடியாதது. ஆனால் அந்தப் புகழ்க் கடலின் அலை. களினூடே நம் உள்ளமெனும் ஓடம் மிதக்கலாம். மெல்லிய அலை மோத, மனம் அந்த அலையின் அசைவுக்கு ஏற்ப அசைய, அதுவே தாலாட்டாக நாம் நம்மை மறந்து தூங்கலாம். இந்த நிலை வரவேண்டுமானால் மனம் தன் போக்குப்படி போகக்கூடாது. அது அம்மையின் புகழலை யிலே அசையவேண்டும்; அவள் புகழ்க்கடலில் உலவ வேண்டும்.

இத்தகைய அநுபவம் இவ்வாசிரியருக்குக் கிடைத்தது. ஆனால் அது எளிதில் கிடைத்ததா? எப்போதும் அன்னையின் பிரபாவத்தில் உள்ளம் மிதப்பது என்பது சில நாட்களில் வருவது அன்று. எத்தனையோ காலம் முயன்று முயன்று அது வரவேண்டும். பல படிகள் கடந்து அந்த உயர் நிலையை அடையவேண்டும்.

இந்த நிலையை அடைந்தவர், இதற்கு முன் என்ன என்ன படிகளைத் தாண்டி வரவேண்டியிருந்தது என்பதை நினைப்பூட்டிக்கொள்கிறார்.

ஒரு செல்வருடைய ஆதரவைப் பெறவேண்டி ஏழை ஒருவன் புறப்படுகிருன். அவர் இருக்கும் இடம் நெடுந் தூரத்தில் உள்ளது. மெல்ல மெல்ல விசாரித்துக் கொண்டு வருகிருன். ஆற்றைக் கடந்து, மலையைக் கடந்து, பல ஊர்களைக் கடந்து, செல்வர் வாழும் ஊருக்கு வருகிருன். அந்த ஊரில் பல வீதிகள் உண்டு. அவற்றைக் கடந்து செல்வர் திருமாளிகை உள்ள வீதியை அடைகிருன். கடைசியில் அவருடைய இல்லத்தையே கண்டுபிடித்து உள்ளே நுழைகிருன். சற்றே திண்ணையில் உட்கார்ந்து இளைப்பாறுகிருன். அப்போது அவன் அந்த மாளிகையை அடைவதற்கு எத்தனை இடங்களைக் கடந்து வரவேண்டி யிருந்தது என்பதை நினைத்துப் பார்க்கிருன். சமீபத்தில் கடந்தானே, அந்தத் தெருக்கள் முதலில் நினைவுக்கு வரு கின்றன. அப்பால் அவன் கடந்து வந்த ஊர்கள் நினைவுக்கு வருகின்றன. அப்புறம் மலைகள் ஆறு ஆகியவை அடுக்கடுக் காக வருகின்றன. கடைசியில் தான் புறப்பட்ட இடம் அவன் அகக்கண்முன் வருகிறது. அந்த இடத்துக்கும் இப் போது வந்த இடத்துக்கும் உள்ள தூரத்தை எண்ணிப் பார்க்கிருன். அவனுக்கு மலைப்புத் தட்டுகிறது. 'நாமா இத்தனை தூரமும் கடந்து வந்தோம், நம் சக்தி அவ்வளவு பெரியதா?' என்று தோன்றுகிறது.

இதே நிலையில் இருக்கிருர் இந்தப் பேரன்பர். எங் கிருந்து தொடங்கிஞரோ அது முதலில் நினைவுக்கு வர வில்லை. எதை அடைந்தாரோ, அதற்கு முந்திய நிலைதான் வருகிறது; பின்னும் எண்ணத்தை நீள விடுகையில் அதற் கும் முந்திய முயற்சியை எண்ணிப் பார்க்கிருர். வந்த போது அமைந்த முறைக்கு நேர்மாருக இந்த முறை இருக்கிறது. ஓர் ஊருக்கு வந்தவன் திரும்பிப் போகையில், வரும்போது கடைசியில் கண்ட ஊரை முதலில் பார்ப்பான். வரும் வழியில் கண்ட காட்சிகள் தோன்றும் முறை

இப்போது நேர்மாறாக, கடைசியிலிருந்து முதல் வரையில் எண்ணுவதாக இருக்கும்.

அபிராமியின் புகழை எப்போதும் எண்ணி வாழும் நிலைக்கு வந்த அபிராமி பட்டருக்குத் தாம் வந்த வழி இப்போது தலைகீழாக நினைவுக்கு வருகிறது. எல்லாவற்றையும் நினைந்த பிறகு வியப்பு மீதூர்கிறது.

**கண்ணியது உன் புகழ்.**

அபிராமியின் புகழையே அவர் எப்போதும் எண்ணிய வண்ணம் இருக்கிறார். உலகியற் பொருள்களையும் மனிதர்களின் புகழையும் நம்முடைய பெருமையையும் எண்ணி எண்ணிக் காலங்கழிக்கும் நமக்கும் இந்த நிலைக்கும் நெடுந்தூரம். யாராவது திடீரென்று அடித்தால், 'ஐயோ!' என்று அலறுவோமே ஒழிய, 'அம்பிகே' என்று சொல்ல வராது.

தண்ணீர் நிரம்பிய ரப்பர்க் குழாயை ஊசியால் குத்தினால் தண்ணீர் அந்தத் துளை வழியே வேகமாக வரும். ஒன்றும் இல்லாத குழாயைக் குத்தினால் வெறும் காற்றுத்தான் வரும். நம் உள்ளத்தில் அழுத்தமாக அன்னையின் நினைவு இல்லை. இருந்தால் எந்தக் கணத்திலும் அதுதான் வெளியாகும்.

''வழுக்கி வீழினும் திருப்பெயர் அல்லால்
மற்று நான்அறி யேன்மறு மாற்றம்''

என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடுகிறார். அவர் உள்ளம் முழுவதும் இறைவனுடைய நினைவே நிரம்பியிருந்தது.

அன்னையின் புகழை எப்போதும் எண்ணியிருக்க வேண்டுமானால், அதற்குமுன் பல பயிற்சிகளைச் செய்திருக்கவேண்டும். பல படிகளைக் கடந்த பிறகே இந்த நிலை கிடைத்திருக்கிறது. ''இவ்வாறு நின் புகழையே எண்ணுவது எளிதில் வந்துவிடுகிற காரியமா? இதற்கு

முன் என் வாயால் எத்தனை முறை உன் திருநாமங்களைச் சொல்லியிருப்பேன்!'' என்கிருர் பட்டர்.

**கற்பது உன் நாமம்.**

நாமத்தை ஒருமுறை இருமுறை சொல்வது கற்பது ஆகாது. நாவினுல் சொல்வதோடு அதன் பொருளை மனத்திஞற் சிந்தித்து ஈடுபடவேண்டும். சொல்வது, ஓதுவது, பயில்வது, கற்பது என்று பல படிகள் உண்டு. நாமத்தை நாவினுல் ஒலிப்பது சொல்வதாகும். அதனைப் பலகால் சொல்வது ஓதுவதாகும்; பாராயணம் என்று சொல்வது தான் ஓதுவது. பிறகு அதன் பொருளை உணர்ந்து பலகால் பழகுவது பயில்வது ஆகும். வாயினுல் சொல்லி, அறிவினுல் பொருளை அறிந்து, உணர்வினுல் உணர்வதே கற்பது ஆகும்.

''வைத்தபொரு கல்வி மனப்பழக்கம்''

என்பது ஔவையின் உபதேசம். வாயினுல் சொல்லி மனத்தினுல் உணர்ந்து நின்ருல்தான் அதற்கு மேற்பட்ட படிக்குப் போக முடியும். வாய்ச்சொல் நழுவி உள்ளம் அன்னையின் புகழையும் உருவத்தையும் எண்ணி இன்புறும் நிலைதான் முதலில் சொல்லியது. அதற்கு முன் நிகழ்ந்தது; வாயும் மனமும் இணைந்த செயலாகிய கற்பது. இங்கே வாக்கு மெல்ல மனத்தைப் பற்றிக் கொண்டு திருநாம பாராயணத்தில் ஈடுபடுகிறது. தியானம் என்ற படிக்கு முன்படி பாராயணம். புகழ் விரிவை உணர்வதற்கு முதற்படி திருநாமப் பயிற்சி. முதலில் ஒருவருடைய பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டு பிறகு அவருடைய பெருமையைத் தெளிவது இயல்பு. அந்த முறையில் அன்னையின் நாமத்தைக் கற்றுக் கைவந்த பிறகு, அவள் புகழை எப்போதும் கண்ணும் நிலை வந்தது. காரிய காரண

முறையில் வைத்து நினைத்துப் பார்ப்பதனால் முதலில் புகழைக் கண்ணிய நிலையும், அதற்கு முந்திய நாமம் கற்கும் நிலையும் தொடர்ந்து வந்தன. மனச்செயலாகிய விளைவும் அதற்குக் காரணமாகும் வாக்குச் செயலாகிய கற்பதும் சொன்னார்.

**கண்ணியது உன் புகழ், கற்பது உன் நாமம்.**

இன்னும் முன்பு செல்கிறார். எளிதிலே எம்பெருமாட்டியின் நாமத்தைக் கற்க முடிந்ததா? அதற்கு முன் எத்தனையோ கோயில்களுக்குச் சென்று அம்பிகையின் திருவுருவத்தைத் தொழுது திருவடியில் விழுந்து வணங்கினார். சும்மா கோவிலுக்குச் சென்று வேடிக்கை பார்ப்பதுபோலப் பார்த்தால் பயன் உண்டாகுமா? மனத்தில் அன்னையினிடம் அன்பு இருக்க வேண்டும்; உள்ளம் நெகிழ்ந்து கசியவேண்டும். உண்மையான பக்திக்கு அடையாளம் கசிவு. இறைவியின் பாதாம்புயத்தில் விழுந்து வணங்கி அப்பெருமாட்டியின் திருமுன் நிற்கும்போது உள்ளம் கசிந்தால் கண்ணும் கசிந்து புனல் வாரும். அவளை நினைந்து கசிவது பக்தியின் மூன்றாவது படி; அவளைப் பாடிக் கசிவது இரண்டாவது படி; அவளைத் தரிசித்துக் கசிவது முதல் படி. கண்ணாற் காணும்போது உள்ளத்தே அன்பு பொங்கி வந்தால்தான் அந்தக் கசிவு ஏற்படும்.

ஒரு பெண்மணி பலர் கூடியுள்ள கூட்டத்தின்முன் தோன்றுகிறாள், எல்லோரும் அவளைப் பார்ப்பார்கள்; அவள் அழகைப் பார்ப்பார்கள். அந்தக் கூட்டத்தில் அவள் குழந்தை இருந்தால் எல்லோரும் பார்ப்பதுபோல அது பார்க்காது. தாயின்பால் உள்ள அன்பு அதன் உள்ளத்தில் பொங்கி வரும். "அம்மா!" என்று கூவிக்கொண்டு போய்த் தாயின் காலைக் கட்டிக் கொள்ளும். அதுபோல அபிராமியின் இரண்டு பாதார

விந்தங்களையும் கண்டு பக்தி உணர்ச்சி பெருகக் கசிந்து வணங்கினார் இந்தப் பக்தர்.

**கசிந்து பக்தி**
**பண்ணியது உன் இரு பாதாம்புயத்தில்.**

இது காயத்தின் செயல். இங்கும் வாக்கும் மனமும் தொழிற்பட்டாலும் உடம்புக்கு வேலை அதிகம். கோயில் உள்ள இடத்தை நாடிச் செல்வதும் உள்ளே நுழைவதும் அன்னையின் திருக்காட்சியைக் காணுவதும் வணங்கி எழுவதுமாக உடம்பால் செய்யும் பக்திச் செயல்கள் பல படியாக நிற்கின்றன. இப்படியெல்லாம் விழுந்து சேவித்த பிறகே அன்னையின் நாமத்தைக் கற்கும் நிலை வந்தது. அதன் விளைவே அவள் புகழைக் கண்ணும் நிலை.

எம்பெருமாட்டியின் புகழையே எண்ணிப் பிற எண்ணமின்றி உள்ளத்தே ஆனந்தம் பொங்க நிற்கும் நிலை கனியை ஒத்தது. கனிக்கு முந்தியது காய். தேவியின் நாமங்களைப் பாராயணம் செய்து கற்பது காய் நிலை. காய்க்கு முந்தியது பூ. அவளுடைய திருக்கோயிலை நாடி உடம்பால் தொண்டு செய்து அவள் அடிவீழ்வது பூவின் நிலை.

**கண்ணியது உன் புகழ்; கற்பது உன் நாமம்;**
**கசிந்து பத்தி பண்ணியது உன் இரு பாதாம்புயத்தில்.**

இவ்வளவுதானா? இன்னும் இதற்குமுன் ஒன்று உண்டு. பூவுக்கு முன்நிலையில் இருப்பது அரும்பு. இறைவியின் கோயிலுக்குச் சென்று அவளைப் பக்தியுடன் கசிந்து வணங்குவது எளிய செயல் அன்று. அதற்குமுன் செய்த செயல் என்ன?

தனி மனிதன் தன் உள்ளத்தை நல்வழியிற் செல்லும் படி செய்வது, பல முறை முயற்சி செய்தபின் விளையும் விளைவு. பல பெரியோர்களுடன் சேர்ந்து நல்ல பழக்கங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும். அன்பர்களின் கூட்டத்திலே கலந்து கொண்டால் நம்மை அறியாமலே அவர்களுடைய பழக்க வழக்கங்கள் நம்மிடத்திலும் உண்டாகும். அறிவினால் ஆராயாமலே அந்தப் பழக்கங்கள் மெல்ல மெல்ல நமக்கும் வரும். தனியாக இருப்பவன் அத்தகைய நல்ல பழக்கத்தை மேற்கொள்ள நினைத்தால் சோம்பல் முன் வந்து தடுக்கும்; அறிவு அதைச் செய்யாமல் இருப்பதற்குரிய சமாதானங்களைத் தேடும். ஆனால் சத்சங்கத்தில் சேர்ந்துவிட்டால் நல்ல பழக்கம் தானே அவனைச் சாரும், எந்தப் பழக்கமும்—தீயதானாலும் நல்லதானாலும்—சங்கத்தினால் எளிதிலே படிந்துவிடும்.

பக்தி பண்ணுவதும் அம்பிகையை வணங்குவதும் நாமாக முயன்று பழகிக்கொள்ள முயன்றால் அமைவது அருமை. தொண்டர்களோடு கூடி நின்றால் அவை நம்மிடம் சார்ந்து படிந்து விடும். நிலத்தின் இயல்பினால் நீருக்கு நிறமும் சுவையும் வருவதுபோல், சார்ந்த இனத்தின் இயல்பினால் நமக்கு அவர்களின் பழக்கங்கள் உண்டாகும்.

இறைவியைத் தொழும் பழக்கம் வருவதற்குமுன், தொழுது வாழ்த்தித் தியானிப்பவர்கள் கூட்டத்தில் கலந்து பழகவேண்டும். அந்தச் சத்சங்கச் சிறப்பினால் மெல்ல மெல்லப் பக்தி உணர்ச்சி உண்டாகும். தென்னை மரத்தில் இளநீர்க் காய்க்குள் நீர் நிரம்புவதுபோல, நம்மை அறியாமல் உள்ளம் பண்படும்; பக்தியுணர்வு படியும். இந்த நிலை அரும்பு போன்றது.

அரும்பு மலர்ந்து பூவாகி பூ முதிர்ந்து காயாகி, அது கனிந்து கனியாகிறது. சத்சங்கத்தில் ஈடுப்படப்பட அன்னை

யின் பக்தி உணர்வு உண்டாகி, அவளுடைய பாதாம்பு யத்தைத் தொழும் நிலை வரும்; அதனால் அவள் புகழைக் கண்ணும் நிலை வரும்.

கனிப் பருவத்தில் நிற்பவர், இப்போது வந்த வழி யைப் பார்க்கிறார். காயும் பூவும் அரும்பும் ஒன்றன்பின் ஒன்றாக நினைவில் வருகின்றன. அல்லும் பகலும் அபிராமியை விரும்பிப் பக்தி பண்ணிய தொண்டர்களின் கூட்டத்தை நண்ணியதிலிருந்து தொடங்கியது இந்தப் பக்தித் பயணம்.

**பகல் இரவா நண்ணியது உன்னை நயந்தோர் அவையத்து.**

ஆரம்ப முயற்சி கடினமாகவும் விரிவாகவும் இருக் கும். வர வர அந்தக் கடுமை குறையும். வர வர விரிவும் குறையும். கோபுரம் அடியிலே விரிந்து வர வரக் குறுகிக் கும்பத்தில் முடிவது போல, முன் முயற்சிகளில் இட விரிவும் முயற்சி விரிவும் இருக்க, பிறகு அவை சுருங்கி வரும்.

முதலில் தொண்டர் கூட்டம் எந்த எந்த இடங்களில் உண்டோ அந்த இடங்களை நாடிச் சென்றார்; பகலென்றும் இரவென்றும் பாராமல் போனார்; எங்கே பஜனை நடக் கிறது, எங்கே பாராயணம் செய்கிறார்கள் என்று அன்பர் களின் கூட்டத்தை நாடினார்; எப்போது நடக்கிறது என்று நேரத்தைத் தெரிந்துகொண்டு சென்றார். இந்த முயற்சியை விரிவாகச் செய்தார். பிறகு பக்தி உணர்வு தலைப்பட்டதும் கூட்டத்தை நாடுவதை விட்டுக் கோயிலை நாடினார். முயற்சி விரிவு இப்போது அத்தனை இல்லை. அம்பிகையின் திருவுருவைத் தரிசித்துப் பாதாம்புயத் தைப் பணிந்தார். இப்போது பல பல இடங்களுக்குச் செல்வது குறைந்தது. அப்பால் அவள் திருநாமத்தை ஓதிக் கற்றார். இட விரிவு குறைந்தது மட்டும் அன்று

உடம்பிலுள்ள அங்கங்களுக்கெல்லாம் முன்பு வேலை இருந்தது. இப்போது வாக்கும் மனமும் தொழிற்பட்டன. கடைசியில் வாக்கும் நின்றது; மனம் மாத்திரம் அவள் புகழை எண்ணத் தொடங்கிவிட்டது. செயல் மிகுதியாக இருக்கும்போது அநுபவம் குறைவாக இருக்கிறது; அநுபவம் மிகுதியாகும்போது செயல் குறைகிறது. செயல் மிகுதியினால்தான் அநுபவம் உண்டாகிறது என்பதை மறக்கக் கூடாது; அதுதான் அஸ்திவாரம். வேலையை விட்டு நீங்கின பிறகு 'பென்ஷன்' வருகிறது: வேலை செய்யாமலே மாதந்தோறும் பணம் கிடைக்கிறது. ஆனால் பல ஆண்டுகள் வேலை செய்ததன் பயனாகவே இப்போது வேலை செய்யாமல் இருக்கும் நிலையும் 'பென்ஷ'னும் கிடைக்கின்றன. நிறையப் 'பென்ஷன்' பெறுகிறவன் வேலை செய்த காலத்தில் ஓடியாடி உழைத்ததை நினைப்பது இயல்பு. அபிராமிபட்டர் அப்படித்தான் இங்கே நினைக்கிறார்.

முன்பு செயல் மிகுந்து இருந்ததையும் வர வர அது குறைந்து வந்ததையும் பாட்டிலுள்ள சொல்லமைதியே காட்டுகிறது. தொண்டர் கூட்டத்தைத் தேடி நாடிச் சென்று பழகும்போது அவர் செய்ததைப் பல சொற்களால் சொல்கிறார்.

**பகல் இரவா நண்ணியது உன்னை**
**நயந்தோர் அவையத்து.**

இதை நீட்டி முழக்கி ஆறு சொற்களால் சொல்கிறார், அடுத்தபடி செய்ததையும் அப்படியே சொல்கிறார்.

**கசிந்து பத்தி பண்ணியது உன் இரு பாதாம்புயத்தில்.**

அப்பால் முயற்சி குறைகிறது; இடம் குறைகிறது; கருவிகள் குறைகின்றன; அதைக் குறிக்கும் சொற்களும் குறைகின்றன.

கற்பது உன் நாமம்.

உட்கார்ந்தபடியே அபிராமிபட்டர் லலிதா சகசிர நாமத்தைப் பாராயணம் செய்யும் காட்சி நமக்குப் புலனுகிறது. அவர் வாய் சொல்கிறது; கண் கசிகிறது. அடுத்த நிலையும் சுருக்கந்தானே?

கண்ணியது உன் புகழ்

என்று சுருக்கமாகவே அதைச் சொல்லிவிடுகிருர்.

முடிவிலிருந்து முதலைப் பார்க்கிருர். நாம் முதலிலிருந்து முடிவைப் பார்த்தால் சத்சங்கமும், பாத சேவையும், நாம பாராயணமும், தியானமும் வரிசையாக வரும். அவர் உள்ளே இருந்து தலைவாசலைப் பார்க்கிருர். இதோ கூடம், இதோ இடைகழி, அதோ வாசல் என்று திருமடைப் பள்ளியிலிருந்து காட்டுகிருர். அவர் அங்கே உண்டு ஏப்பம் விடுகிருர்.

இதுவரையில் அவரால் பார்க்க முடிந்தது. காரியமாகிய விளைவுக்குரிய காரணம் இன்னதென்று நினைத்துச் சத்சங்கத்தில் வந்து நின்ருர். அதற்குக் காரணம் என்ன? அதற்குமேல் அவரால் நினைக்க முடியவில்லை. தொண்டர்களோடு சேர்ந்து பழகியதற்குக் காரணம் பூர்வ ஜன்ம ஸம்ஸ்காரம் என்று ஊகித்தார். இதுவரையில் செயலும் விளைவும் அடுக்கடுக்காகத் தெரிந்ததுபோல அந்தக் காரணம் இன்னதென்று தெளிவாகத் தெரியவில்லை. முன்னைப் பிறவியில் செய்த புண்ணியப் பயனுகவே இந்தப் பிறவியில் சத்சங்கம் கிடைத்தது அதிலிருந்து ஒன்றன்பின் ஒன்ருகப் பல நிகழ்ந்தன.

முன்னைப் பிறவியில் என்ன புண்ணியம் செய்தார்? அதை எண்ணிப் பார்க்கும் ஆற்றல் இல்லை, அஸ்திவாரத்

தைப் போல அது மறைவில் நிற்கிறது. அந்தப் புண்ணியம் இன்னதென்று தெரியாவிட்டாலும் அது காரணமாகத் தான் இந்தப் பிறவியில் அடுக்கடுக்காக எல்லாம் கை கூடி வந்திருக்கின்றன என்பது மட்டும் தெரிகிறது. அந்தப் புண்ணியம் ஏதாக இருக்கலாம்?

யாரைக் கேட்கிறது? அம்பிகையையே கேட்கிறார்.

**நான் முன் செய்த புண்ணியம் ஏது? என் அம்மே!**

"தாயே, நான் ஏதோ புண்ணியம் செய்துதான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் இப்படி எனக்குச் சித்திக்க நியாயம் இல்லை. அந்தப் புண்ணியம் யாது?" என்கிறார்.

"புண்ணியம் செய்தனமே மனமே"

என்று பின்பு ஒரு பாடலில் பெருமிதத்தோடு சொல்லிக் கொள்வார்.

"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே"

என்று ஞானசம்பந்தரும் அப்படிச் சொல்லியிருக்கிறார்.

ஸ்ரீமாதாவும் லோகஜனனியும் ஆகிய அபிராமியை நோக்கிக் கேட்கிறார் அபிராமிபட்டர்.

**நான் முன் செய்த**
**புண்ணியம் ஏது? என் அம்மே,**
**புவி ஏழையும் பூத்தவளே!**

முற்பிறவியில் புண்ணியம் செய்தார்க்கு இந்தப் பிறவியிலே தொண்டர் கூட்டத்தில் கலந்து கொள்ளும் பேறு கிட்டுமென்றும், அதனால் இறைவியின் பாதாரவிந்தத்தைப் பக்தியுடன் பணியும் பழக்கம் உண்டாகுமென்றும், அதன் பயனாக அவளுடைய திருநாமத்தை

உணர்ந்து ஓதும் பயிற்சி அமையும் என்றும், அதன் பின்பு அவள் புகழையே எண்ணி அநுபவிக்கும் நிலை உண்டாகும் என்றும் இந்தப் பாடலால் தெரிந்து கொள்கிறோம்.

**கண்ணியது உன்புகழ்; கற்பதுஉன் நாமம்;**
**கசிந்துபத்தி**
**பண்ணியது உன்இரு பாதாம் புயத்தில்;**
**பகல்இரவா**
**நண்ணியது உன்னை நயத்தோர் அவையத்து;**
**நான்முன்செய்த**
**புண்ணியம் ஏது? என்அம் மே,புவி ஏழையும்**
**பூத்தவளே!**

[என் தாயே, ஏழுலகத்தையும் படைத்த பெருமாட்டியே, அடியேன் எப்போதும் தியானம் செய்தது உன்னுடைய பெரும் புகழை; பலகாலும் பயின்று உணர்வுடன் ஓதுவது உன் திருநாமத்தை: உள்ளம் உருகிப் பக்தி பண்ணியது உன் இரண்டு திருவடித் தாமரைகளில்; பகலும் இரவுமாகச் சென்று சேர்ந்தது, உன்னை விரும்பிய அன்பர்களின் கூட்டத்தை; இவ்வளவுக்கும் காரணமாக அடியேன் முற்பிறவியிற் செய்த புண்ணியச் செயல் யாது?

கண்ணியது—நினைத்தது. கசிந்து—உருகி. அவையம் —சபை; சங்கம்; இங்கே கூட்டம். பூத்தவள்—தோற்றுவித்தவள்.]

இது அபிராமி அந்தாதியில் உள்ள பன்னிரண்டாம் பாடல்.

# மாபெருந் தெய்வம்

உலகம் ஏழையும் பூத்தவளாகிய அபிராமியின் பேரருள் வெள்ளத்தில் ஆழ்ந்த அபிராமிபட்டர் அம்பிகையின் நிலைகளைச் சற்றே எண்ணிப்பார்க்கிறார். அவளைப் புவி ஏழையும் பூத்தவள் என்று சென்ற பாட்டில் பாடி முடித்தார். அவள் உலகத்தை உண்டாக்கும் அளவோடு நிற்பவளா? படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களையுமே அவள் இயற்றுகிறாள்.

பிரம்மாவினிடம் படைத்தல் தொழிலைச் செய்வதற்குரிய ஆற்றலாகப் பொருந்தியிருக்கிறாள். பிரமதேவனுடைய உருவம் வேறாக இருந்தாலும் அந்த மூர்த்தியின் உள் இருந்து இயக்கும் சக்தியாக அம்பிகை இருக்கிறாள். பிரமனிடமிருந்து அந்தச் சக்தி பிரிந்து விட்டால் அவன் படைக்க முடியாது. அவனுடைய உள்ளத்தில் உணர்வேற்றி நாவில் கலையேற்றிக் கையில் உரமேற்றி அவனைப் படைப்புத் தொழில் செய்பவனாக ஆக்கி, உள் இருந்து இயக்குபவள் மகாசக்தியாகிய அம்பிகையே. ஆதலின் அவளை மீட்டும்,

பூத்தவளே புவனம் பதினான்கையும்

என்று துதிக்கத் தொடங்குகிறார். முன்பு, "புவி ஏழையும் பூத்தவள்" என்று முடித்தவர் இப்போது புவனம் பதினான்கையும் என்றார். உலகில் ஏழு தீவுகள் உண்டு; அவற்றை உலகேழு, தீவேழு, பொழிலேழு என்று சொல்லுவது வழக்கம். அவற்றையெல்லாம் அம்பிகை படைத்தாள் என்றவர், தாம் ஏதோ குறைத்துச் சொல்லிவிட்டதாக

எண்ணினர் போலும்! தொடர்ந்து, 'இந்த உலகம் மட்டுமா? சகல புவனங்களும் உன்னுடைய படைப்பு அல்லவா?' என்று நினைத்தார். மேல் ஏழு உலகம், கீழ் ஏழு உலகம் என்று பதினன்கு உலகங்களைச் சொல்வதுண்டு; அவை யாவும் தேவியின் படைப்புக்களே. "ஈரேழ் புவனமும் பூத்த உந்திக் கொங்கிவர் பூங்குழலாள்" (75) என்று பின்னே ஒரு பாட்டிலும் இந்தக் கருத்தைச் சொல்வார். லலிதாம்பிகையின் திருநாமங்களாகிய ஜநநி, ப்ரஹ்மரூபா, ஸ்ருஷ்டி கர்த்ரி என்பவை அம்பிகை படைப்புத் தொழிலைச் செய்பவளென்பதையும், பிரமனுடைய திருவுருவாக விளங்குபவள் என்பதையும் புலப்படுத்துகின்றன.

பிரமதேவனுக்குப் படைப்புத் தொழில் ஒன்றுதான் உண்டு. அம்பிகையோ அதனோடு தொடர்புடைய மற்றத் தொழில்களையும் புரிபவள். படைத்தலை அடுத்து வருவது காத்தல். அந்தத் தொழிலையும் அம்மை இயற்றுகிருள். உலகத்தை அருள் நிரம்பிப் படைப்பது போலவே, அதனைப் பாதுகாக்கும் கடமையையும் பேரருளுடன் மேற்கொண்டிருக்கிருள்.

## பூத்த வண்ணம் காத்தவளே!

பூத்தபடியே காத்தவ்ள் என்றார். உலகத்தை உண்டாக்குவதற்குக் காரணமான பேரருளும் பேராற்றலும் அதனைக் காப்பாற்றுவதற்கும் காரணமாக அமைகின்றன. தேவியே திருமாலை அதிஷ்டித்து நின்று காப்புத் தொழிலை நிகழ்த்துகிருள். அதனால் அப்பெருமாட்டிக்கு, விஷ்ணு ரூபிணி, கோப்த்ரி. கோவிந்த ரூபிணி என்ற திருநாமங்கள் அமைந்தன.

இனி, அடுத்த செயலாகிய அழித்தலையும் தேவியே செய்கிருள். ருத்திரனுடைய சக்தியாக நின்று அகில

உலகத்தையும் சங்காரம் செய்கிறாள். ருத்ரரூபா என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று.

பின் கரந்தவளே!

கரந்தவள் என்பது மறைத்தவள் என்னும் பொருள் உடையது. ஒரேயடியாக இனித் தோன்றாதவாறு எல்லா வற்றையும் அவள் அழித்துவிடுவதில்லை. பிரபஞ்சங்களை ஒவ்வொன்றாகப் புறப்பட விட்டுக் காப்பாற்றிப் பின்பு அவற்றைத் தனக்குள் அடக்கிக் கொள்கிறாள். பெண் கோழி தன் சிறகுக்குள் குஞ்சுகளையெல்லாம் அடக்கிக் கொண்டு மறைப்பது போல் இருக்கிறது இந்தச் செயல்.

சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம் என்னும் தொழில்கள் ஒரு முறைமட்டும் நிகழ்கின்றன அல்ல. அவை தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கின்றன. சங்காரத்தைத் தொடர்ந்து மீண்டும் படைப்பு நிகழ்கிறது. ஆதலின் எல்லாவற்றையும் தனக்குள் அடக்கி மறைப்பதையே சங்காரம் என்றும், மீட்டும் தோற்றச் செய்வதையே படைப்பு என்றும் கூறுவர். ஒவ்வொரு தத்துவமாக, தாமரை மலர்களில் இதழ்கள் விரிவது போல விரிவதனால் அகில புவனங்களும் தோன்றி இயங்கத் தொடங்குகின்றன. மீட்டும் மாலைநேரத்தில் தாமரை தன் இதழ்களைக் குவித்துக் கொண்டு கூம்புவது போலத் தத்துவங்கள் ஒன்றனுள் ஒன்று அடங்கி இறுதியில் பரதேவதையினிடம் மறைந்து ஒடுங்குகின்றன. அப்படி மறைக்கும் செயலைச் செய்பவளாதலின், 'கரந்தவளே' என்றார்.

பூத்தவளே புவனம் பதினான்கையும், பூத்தவண்ணம்
காத்தவளே, பின் கரந்தவளே!

புவனம் பதினான்கையும் என்பதை ஒவ்வொரு செய லோடும் கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். மூன்று

தொழில்களையும் புரியும் மும்மூர்த்திகளாகவும் தேவி விளங்குகிறாள். அதனால் அவளுக்கு, த்ரிமூர்த்தி என்னும் ஒரு திருநாமம் உண்டாயிற்று.

இவ்வாறு மூன்று தொழிலையும் செய்யும் அம்பிகை சில சமயங்களில் சிவபிரானைவிடப் பெரியவளாக இருப்பாள். சக்தி தத்துவத்துக்குப்பின் சதாசிவ தத்துவம் தோன்றும்; ஆதலின் சதாசிவத்துக்குச் சக்தி மூத்தவளாகிறாள். இதை நினைந்து,

**கறைக்கண்டனுக்கு**

**மூத்தவளே!**

என்கிறார். ஸ்ரீகண்டனாகிய சதாசிவனுக்கு அவள் மூத்தவளாம். தத்துவங்களின் தோற்ற முறையை எண்ணி இப்படி ஒரு விசித்திரமான உறவு முறையைச் சொல்வது பக்தர்களுக்கு இயல்பு. இதே முறையைக் கொண்டு அம்பிகையைச் சிவனுக்கு அன்னையென்றும் கூறுவதுண்டு. "தவளே இவள் எங்கள் சங்கரனார்மனை மங்கலமாம், அவளே அவர்தமக் கன்னையு மாயினள்" (44) என்று இவ்வாசிரியர் பின்னால் பாடுகிறார்.

அம்பிகை திருமாலின் சகோதரி என்று புராணங்கள் கூறும். திருமால் என்றும் தளராத திருக்கோலம் உடையவர். அவர் மூவா முகுந்தர். அத்தகையவருக்கு இளையவள் என்றால் அவளுக்கும் மூப்பு இல்லை என்று தெளிவாகிறதல்லவா? கிழத்தன்மையைப் போக்கும் அருளுடையவள் அவள். அதனால் ஜராத்வாந்தர விப்ரபா என்ற திருநாமம் அவளுக்கு வழங்குகிறது. தன்னை அண்டுபவர்களுக்கே நரை திரை மூப்பு வராமல் பாதுகாப்பவளாயின், அவளுக்கு அவை ஏது?

**மூவா முகுந்தற்கு இளையவளே!**

எம்பெருமாட்டி சில சமயங்களில் தவக்கோலம் கொண்டிருப்பாள். பார்வதியாக அவதரித்தபோது

பரமேசுவரனைத் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டுத் தவம் புரிந்தாள். அம்பிகை தவம் புரிந்தால் அது மாபெருந் தவமாகவே இருக்கும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

**மாத்தவளே!**

முத்தொழிலையும் புரிபவளும் நீலகண்டனுக்கு மூத்தவளும் முகுந்தனுக்கு இளையவளும் மகா தபஸ்வினியுமாகிய அம்பிகையின் பெருமையைக் கூறி, "இத்தகைய பெருமாட்டி இருக்கும்போது வேறு ஒரு தெய்வத்தைப் போய் வணங்குவதாவது!" என்கிறார்.

தேவர்களுக்கெல்லாம் முதல் தேவர்களாக இருப்பவர்கள் பிரம்ம விஷ்ணு ருத்திரர்கள், அவர்கள் செய்யும் தொழிலை அம்பிகை தன் ஆணையினாலே நடத்தும்படி செய்கிறாள். கறைக்கண்டனாகிய பரம சிவனுக்கே முன்னவளாக இருக்கிறாள். ஆதலால் வேறு தெய்வம் எதைப் பார்த்தாலும் அம்பிகைக்கு அடங்கி நிற்பது புலனாகிறது. அப்படி இருக்க, எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வமாக உள்ள பரதேவதையாகிய அம்பிகையை வணங்கினால் எல்லாரையும் வணங்கிய தன் பயனை அடையலாம். கீழ்ப்படிகளை ஒவ்வொன்றாக ஏறி மேல் படியை அடைந்தவனுக்குக் கீழ்ப்படிகளில் கால் வைக்கும் அவசியம் இராது. அதுபோல எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வத்தைப் பற்றிக்கொண்ட பின்னர் வேறு ஒரு தெய்வத்தை வணங்க வேண்டியது அவசியம் அல்லவே! அதனால்,

**உன்னை அன்றி மற்றோர் தெய்வம் வந்திப்பதே**

என்று கேட்கிறார் இந்த அன்பர்.

"கொள்ளேன் மனத்தில்நின் கோலம்அல் லாதன்பர்
கூட்டந்தன்னை
விள்ளேன் பரசமயம் விரும்பேன்" (53);

என்று பின்னே கூறுவார்,

பிற தெய்வங்கள் இயற்றும் தொழில்களுக்கெல்லாம் மூலகாரணமாக நிற்பவள் பராசக்தியாதலின் அவள்பால் பக்தி செய்கிறவர்களுக்கு வேறு இடங்களை அடைந்து பெறுவது ஒன்றும் இல்லை.

பூத்தவ ளே,புவ னம்பதி னான்கையும்
 பூத்தவண்ணம்
காத்தவ ளே,பின் கரந்தவ ளே,கறைக்
 கண்டனுக்கு
மூத்தவ ளே,என்றும் மூவா முகுந்தற்கு
 இளையவளே,
மாத்தவ ளே,உன்னை அன்றிமற் றோர்தெய்வம்
 வந்திப்பதே?

[உலகம் பதினான்கையும் திருவருளால் ஈன்ற பெருமாட்டியே, அருள் கொண்டு ஈன்றது போலவே அவற்றைப் பாதுகாத்த தாயே, பின்பு அப்புவனங்களை மறைத்து வைக்கும் அம்மையே, விடக் கறுப்பைத் திருக்கழுத்திலே உடைய சிவபிரானுக்கு முன்பு தோன்றிய தத்துவமாக உள்ளவளே, மூப்பை அடையாத திருமாலுக்குத் தங்கையே, பெரிய தவத்தை உடையவளே, அடியேன் உன்னையே தெய்வமாக வழிபடுவதை அல்லாமல் வேறு ஒரு தெய்வத்தை வழிபடுவது முறை ஆகுமா?

பூத்தவள்—மலரச் செய்தவள்; படைத்தவள் என்றபடி. பூத்தவண்ணம் என்ற உவமை, அருள் பெருகிப் பூத்தது போலவே அருள் பெருகிக் காத்தவள் என்பதைப் புலப்படுத்தியது. கரத்தல்—மறைத்தல்; இங்கே சங்காரம். கறை—கறுப்பு; இங்கே நஞ்சால் அமைந்த கறுப்பு. தவள்—தவத்தையுடைவள்; தவத்தினள் எனச் சாரியை பெற்று வரவேண்டியது செய்யுளை நோக்கிப் பெறாது வந்தது. பின்பும், "தவளே" (44) என்று பாடுவார். வந்திப்பதே: ஏகாரம், வினா. வந்தித்தல்—வணங்குதல்.]

அம்மையே மாபெருந் தெய்வம் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதியில் பதின்மூன்றும் பாடல்.

# அன்னையின் தண்ணளி

நம்முடைய நிலையை மறந்து கீழ்நிலையில் உள்ளவர்களுக்கு உதவி புரிபவர்களைப் பெருங்கருணையாளர் என்று உலகம் பாராட்டும். பெரிய பணக்காரர் ஒருவர் ஏழை ஒருவன் வீட்டுக் கல்யாணம் விசாரிக்க வருகிறார். அப்போது அவருக்கு எல்லாருமே உபசாரம் செய்யத் தலைப்படுவார்கள். அது வரையிலும் மாப்பிள்ளையையும் சம்பந்திகளையும் கவனித்துக் கொண்டு வந்த பெண்ணின் தகப்பனார் வந்த செல்வரைக் கவனித்துக் கைகட்டி நிற்பார். சம்பந்திகள்கூட அவருக்கு மரியாதை செய்வார்கள். வந்த செல்வர் தாம்பூலம் வாங்கிக்கொண்டு போய் விடுவார். பிறகு வீட்டில் உள்ளவர்கள் யாவரும் அந்தப் பெரிய மனிதர் வந்து விட்டுப் போனதைப் பெருமையாகச் சொல்லிக் கொள்வார்கள். கல்யாணம் ஆகிப் பல நாட்களான பிறகும், அந்தக் கல்யாணத்தைப் பற்றிய பேச்சு வரும்போதெல்லாம், "அந்தக் கல்யாணத்துக்கு அவர்கூட வந்திருந்தார்" என்று செல்வர் வந்த நிகழ்ச்சியைச் சொல்வார்கள். பணக்காரர் ஏழை வீட்டுக்கு வராதவர் என்பது எல்லோரும் உறுதி செய்துவிட்ட உண்மை. அதை மாற்றி அவர் வந்துவிட்டார். இது பெருவியப்பு அல்லவா? மேலே போனவன் கீழே இறங்கி வந்த பெருங்கருணையல்லவா?

இந்தச் சிறிய நிகழ்ச்சிக்கே உலகம் இந்தப் பாடு பட்டால் மிகப் பெரியவர்கள் ஏழைகளுக்கு எளியராக வந்து ஏதேனும் செய்தால் அதைக் கதையாக்கி வரலாறாக்கி லட்சியமாக்கிப் போற்றுவதில் ஆச்சரியம் இல்லை.

அம்பிகையின் எளிமையை, அளவற்ற சௌலப்யத்தை, அபிராமிபட்டர் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு வகை யில் எண்ணிப் பார்த்து இன்புறுகிறவர். இப்போது ஒரு வகையில் அந்த எளிமையின் பெருமையைப் பாராட்டு கிறுர்.

இயல்பாகவே எளிய நிலேயில் உள்ளவர், எல்லாரோடும் கலந்து பழகுவதில் வியப்பு இல்லே. மிக உயர்ந்த நிலேயில் உள்ளவர் தாழ்ந்த நிலேயில் உள்ளவர்களுக்கு உபகாரம் செய்து கலந்து பழகுவதுதான் சிறப்பு. ஆகவே, எளியராக ஒருவர் பழகுகிறுர் என்ருல் அந்த எளிமையின் சிறப்பை அவருடைய உயர்வை எண்ணிப் பார்த்தால்தான் உணர முடியும். ஆட்டுக் குட்டி கீழே உள்ள புல்லேக் கொறிக்கும் போது அது தன் கழுத்தை வளேப்பது சிறப்பாக நம் கண்ணுக்குப் புலனுவதில்லே ஆனுல் ஒட்டைச் சிவிங்கி தன் நீண்ட கழுத்தை வளேத்துப் புல்லே மேயும் போது அந்தக் கழுத்தின் வளேவு நன்ருகத் தெரிகிறது. ஒரு தென்ன மர உயரத்தில் இருக்கிற தலே வளேந்து தரையை முட்டு கிறதே, அது எவ்வளவு வியக்கத் தகுந்த காட்சி!

ஆகவே எளிமையின் பெருமை, அது யாரிடம் நிகழ் கிறதோ அவர்களுடைய உயர்விஞல் மிகுகிறது. ஏழையின் வீட்டுத் துக்க நிகழ்ச்சியை விசாரிக்க உறவினர் வருவது வியப்பன்று. ஊர் அதிகாரி வந்தால் அது சிறிது வியப்பு. தாசில்தார் வந்தால் சிறிது அதிகமான வியப்பு. கலெக்டர் வந்தால் வியப்பு மிகும். கவர்னரே வந்தார் என்ருல் அது பெருவியப்பு. துக்கம் கேட்க வந்தவர்கள் கூட அதை மறந்து கவர்னரைப் பார்த்துக் கொண்டே நிற்பார்கள்.

எம்பெருமாட்டியின் தண்ணளியை, உள்ளத்தையும் உயிரையும் குளிர்விக்கும் குளிர்ந்த கருணையை, சிறப்

பாகப் புலப்படும்படி அபிராமிபட்டர் எடுத்துக்காட்டு கிறார். அவளுடைய அருமைப் பாட்டைச் சொல்லிப் பின்பு எளிமையைச் சொல்கிறார். அப்போது அந்த எளிமையின் சிறப்பு நன்றாகத் தெரிகிறது.

அவளுடைய உயர்வு எத்தகையது?

எம்பிராட்டியின் அரண்மனையை நோக்கிப் போக லாம், வாருங்கள். எந்தச் சக்கரவர்த்திக்கும் இல்லாத பெரிய அரண்மனையில் வாழ்கிறவள் அவள். இராஜ ராஜேசுவரி அல்லவா? அந்த அரண்மனையில் எளிதிலே நுழைந்துவிட முடியாது. கட்டுக் காவல் காரணம் அல்ல; அத்தனை கூட்டம். அவளுடைய ஆணைக்கு அடங்கி, அவளுடைய கட்டளையை எதிர்பார்த்து, தேவாதி தேவர் கள் நிற்கிறார்கள். நெடுந்தூரத்தில் வரும்போதே நிலத்தில் திருமேனி படிய வணங்கி எழுகிறார்கள். இடுப்பிலே வேட்டியைக் கட்டிக் கைகளைக் கட்டியபடியே நிற்கிறார் கள்.

யார் யார் இப்படி நிற்கிறார்கள்? அதோ இந்திரன்; இதோ வருணன்; இவன்தான் அக்கினி; இவன் வாயு; இந்தக் குரூபிதான் குபேரன். அட! சூரியன்கூடத் தூண் ஓரத்தில் ஒதுங்கி நிற்கிறானே! யார் வந்திருக்கிறார்கள் என்று பார்த்துச் சொல்வதைவிட யார் வரவில்லையென்று சொல்வது எளிது. முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்திருக்கிறார்கள். அவ்வளவு பேரும் ஒருவர் பின் ஒருவ ராக அம்பிகையை வணங்கிக் கொண்டே இருக்கிறார்கள்.

வந்திப்பவர் உன்னை வானவர்.

தேவர்கள் மாத்திரமா? அதோ அசுரர்கள்கூட வணங்குகிறார்களே! தேவர்களின் பகைவர்கள் அல்லவா அவர்கள்?

இருந்தால் என்ன? அம்பிகைக்கு எல்லாரும் குழந்தைகள். சில சமயங்களில் அசுரர்கள் கொட்டத்தை அவள் அடக்கியிருக்கிருள். பொல்லாத குழந்தையைத் தாய் அடித்து ஒறுப்பது இல்லையா? அவளுக்கு அவர்கள் பகைவர்கள் அல்ல.

தேவர்கள் அம்பிகையின் துணையினுல்தான் அமரலோக வாழ்வில் நிலைபெற்றிருக்கிருர்கள். சண்டன், முண்டன், பண்டன், மகிஷாசுரன் என்று எத்தனை பேர்கள் தோன்றி இந்திரனுக்கு அவலத்தை உண்டாக்கிஞர்கள்! அவர்களை அழித்துத் தேவர்களைக் காப்பாற்றினவள் அன்னை. ஆதலின் அவளுடைய துணையை என்றும் நாடி அவளை விட்டு விலகாமல் வந்தித்து வாழ்த்தி வாழ்கிருர்கள் சுரர்கள்.

அசுரர்களில் எஞ்சியவர்கள் அவளுடைய வீரத்தை உணர்ந்து படிந்து வந்திருக்கிருர்கள். தானவர்களும் அம்பிகையை உணர்ந்து இங்கே வந்திருப்பது வியப்பாகத் தோன்றும். அவள் திருவருளாற்றல் மேட்டிலும் நீரை ஏற்றும்; கல்லையும் நெகிழ்வித்துக் கனியாக்கும்.

இந்த அற்புதத்தை அன்னையின் சந்நிதானத்தில் காண்கிருேம். வானவர் வணங்கவும் தானவர் வந்திக்கவும் அப்பெருமாட்டி சிங்காதனத்தில் அமர்ந்து திருவோலக்கம் கொண்டிருக்கிருள்.

வந்திப்பவர் உன்னை, வானவர் தானவர் ஆனவர்கள்.

அரண்மனை வாயில், கூடம், உள்மண்டபம் எங்கும் இவர்களுடைய கூட்டம். இந்த அரண்மனையின் உள்ளே புகுந்து பார்க்கலாம். அம்பிகை திருவோலக்கத்தில் பலரும் காண வீற்றிருக்கும் ஆஸ்தானத்தில்தான் ஒரே கூட்டம், உள்ளே அந்தப் பெருமாட்டி தங்கும் இடங்கள் பல

உண்டு. இது பெரிய அதிகாரிகள் அந்தரங்கமாக அம்மையைச் சந்தித்து முறையிட்டுக்கொள்ளும் இடம். அம்பிகை இங்கே சில சமயங்களில். வந்து தங்கி தன்னைத் தேடி வந்திருக்கும் பெரியவர்களைப் பார்த்து அருள் செய்வாளாம். இப்போதுகூட யாரோ இருவர் அம்பிகையைத் தனியே பார்த்து அவளுடைய கட்டளையையும் அருளையும் பெறக் காத்திருக்கிறார்களாம், உள்ளே போய் அவர்கள் இன்னாரென்று பார்த்து வரலாமா?

அட! இவர் இங்கே எங்கே வந்தார்? நான்கு திசையிலும் முகங்களும் எட்டுத் திசையிலும் விட்டெரிக்கும் கண்களுமுடைய படைப்புக் கடவுள் அல்லவா இவர்? இவர் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறார்; கண்ணை மூடிக்கொண்டு யோகம் செய்பவரைப்போல் அமர்ந்திருக்கிறார். ஆம், இவர் அன்னையைத் தம் உள்ளத்திலே தியானம் செய்கிறார். நேரே வந்து விண்ணப்பித்துக் கொள்ளும் தேவர்களைவிட இவர் உயர்ந்தவர்; தியானத்தினால் அம்பிகையை எளிதில் காணலாம் என்ற தந்திரம் தெரிந்தவர்.

**சிந்திப்பவர் நற்றிசைமுகர்.**

அதோ இன்னும் உள்ளே யாரோ அமர்ந்திருக்கிறாரே ! நாராயண மூர்த்தியைப் போல அல்லவா இருக்கிறார்? சரி, சரி, சந்தேகமே இல்லை, சாட்சாத் வைகுண்ட வாசர்தாம். நீலமேக சியாமள மேனியும் சங்கு சக்கரமும் இவரை நன்றாக அடையாளம் காட்டுகின்றனவே! இவர்கூட யோகத்தில் இருக்கிறார். இவர் இருப்பதைப் பார்த்துத் தான் வழி தெரிந்து நான்முகப்பிரானும் உட்கார்ந்து விட்டார் போலும்!

திருமால் ஏன் இப்படி இருக்கிறார்? உலகத்தையெல்லாம் பாதுகாக்கும் பெரிய பொறுப்பு இவரிடம் இருக்

கிறது. அதை ஒழுங்காகச் செய்தால்தான் பேரும் புகழும் வரும். எம்பெருமாட்டியின் ஆணையின் வழியே அந்தத் தொழிலை இவர் நடத்தி வருகிறார். இவருக்கு மகாமாதாவின் திருவருட்பலம் மிக அவசியமாக வேண்டும். அதனால்தான் வேறு எதையும் எண்ணாமல் சலனமின்றி அவள் திருவடியையே தியானம் செய்து கொண்டு இங்கே அமர்ந்திருக்கிறார். தனியான இடமாக இருக்கிறதென்று வந்து தியானத்தில் அமர்ந்திருக்க வேண்டும். பின்னாலே வந்து பிரமதேவர், அப்பா செய்கிற மாதிரி நாமும் செய்யலாம் என்று அமர்ந்து விட்டார் போலும்! அன்னையின் பெருமையை என்னவென்று சொல்வது!

**சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர்.**

இவ்வளவு பெரியவர்கள் தியானிக்கும் பெருமாட்டி அபிராமி. இன்னும் சற்றே உள்ளே போகலாம். இதுதான் எம்பிராட்டியின் அந்தரங்க மண்டபம். இங்கே அவள் தனியே இருந்து இன்புறுவாள். அந்தத் தனிமையிலும் ஒருவர் குறுக்கிடுவார். வேறு யாரும் போக இயலாத இந்த அந்தரங்கச் சூழலிலே புகுபவர் அவர் ஒருவர்தாம். அவர் பரமானந்தமே வடிவமான காமேசுவரர். அவர் இந்த அறையில் வந்து அம்பிகைக்காகக் காத்திருப்பவர். இதோ இவருடைய தேசு பொருந்திய வடிவு தெரிகிறதே! இது என்ன? இவர்கூடக் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறாரே! எல்லாருடைய தியானத்துக்கும் பொருளாக இருக்கும் இவர் எதற்காகக் கண்ணை மூடிக்கொண்டு யோகத்தில் இருக்கிறார்?

உண்மையில் இவர்தாம் யோகம் செய்து பழகியவர். மற்றவர்களுக்கு அத்தனை பழக்கம் இல்லை. "பத்தனைப் பாடமாட்டேன் பரமனே பரம யோகி" என்று தேவாரம் இவரைத்தானே யோகியென்று சொல்கிறது? இவர் யாரைத் தியானிக்கிறார்?

உலகத்து உயிர்களெல்லாம் வாழவேண்டும், உய்தி பெறவேண்டும் என்ற கருணையுடையவர் இந்தப் பரமானந்தர். எல்லாம் அழிந்தாலும் அழியாப் பரமானந்தர் இவராகையினால், மற்றவர்களைப் போலத் தமக்கு அழிவு நேருமே என்று அஞ்சுபவர் அல்லர்; அந்த அச்சத்தைப் போக்கிக்கொள்ள யோகம் புரியவில்லை. உலகத்து உயிர்கள் உய்யவேண்டுமானால் அருள் மலரவேண்டும். அந்த அருளே வடிவாக இருப்பவள் அன்னை. அவள் உடனிருந்து அருள் புரியாவிட்டால் தனியிருந்து ஏதும் செய்ய முடியாத பெரியவர் இவர். ஆகையால் தம் உள்ளத்திலே எப்போதும் இவர் தம் காதலியாகிய காமேசுவரியையே எண்ணி யோகம் செய்கிறார்.

"எறி தரங்கம்
உடுக்கும் புவனம் கடந்து நின்ற ஒருவன் திருவுள்ளத்தில்
அழகு ஒழுக எழுதிப் பார்த்திருக்கும் உயிர் ஓவியமே!"

என்று குமரகுருபர முனிவர் பாடுகிறார். காமேசுவரர் அம்பிகையின் உருவத்தைத் தம் உள்ளத் தடத்திலே எழுதி வைத்துத் தியானிக்கிறாராம். தம்முடைய திருக்கரங்களிலே அணைப்பதற்கு முன் தம் சிந்தைக்குள்ளே அவளை அணைத்துச் சிறையிடும் பெருங்காதல் உடையவர் அவர்.

சிந்தையுள்ளே பதிப்பவர் அழியாப் பரமானந்தர்.

இவ்வாறெல்லாம் வானவரும் தானவரும் முடி தாழ்த்துக் கூட்டம் கூட்டமாக வந்து வந்திக்கவும், பிரம தேவரும் நாராயணமூர்த்தியும் தியானம் செய்யவும், சிவ பெருமான் திருவுள்ளத்திலே அன்பினால் சிறையிடவும் நிற்கும் பெருமாட்டி அபிராமி. அவளுடைய பெருமைக்கு அளவுண்டா? பலரைத் தம் ஆணையின் வழியே அடக்கி யாளும் பேராற்றலும் பெரும் பதவியும் உடையவர்கள்,

அவளுக்கு அடிமையாகி, அவள் அருளை எதிர்பார்த்து வாழ்கிறவர்கள்.

> வந்திப்பவர் உன்னை வானவர் தானவர்
> ஆனவர்கள்;
> சிந்திப்பவர் நற்றிசைமுகர் நாரணர்;
> சிந்தையுள்ளே
> பந்திப்பவர், அழியாப் பரமானந்தர்.

இவ்வளவு உயர்ந்த நிலையில் உள்ள அன்னை எவ்வளவு எளியவளாக இருக்கிறாள்! தேவலோகத்தில் தேவர்கள் தலைவரிசையையே சாலையாக வைத்து அவள் நடைபோடு கிறாள். பிரமாவினது சத்திய லோகத்தில் அவள் புகுந்து விட்டால் பிரமதேவர் தம் தியான மூர்த்தி வந்துவிட்டாள் என்று குழைந்து வணங்குகிறார். நாராயணரோ அவள் அருளுக்கு ஏங்கி நிற்கிறார். சிவபெருமான் அவளுடைய அந்தரங்கத்தை நாடித் தவம் கிடக்கிறார். இத்தகையவள் நிலவுலகத்தில் எவ்வளவு எளியவளாகி விட்டாள்!

சிங்காதனத்தில் அரசியாக இருப்பவள் அந்தப்புரத்தில் குழந்தைகளைத் தழுவிக் களிக்கும் தாயாக இருப்பது இயல்புதான். அது அவள் அருளைக் காட்டும் அற்புதச் செயல்.

உலகில் அப்பிராட்டிக்குக் கோயிலெடுத்துக் கும்பிடு கிறார்கள்; திருவிழா நடத்துகிறார்கள்; சக்கரத்தில் ஆவாகனம் செய்து உபாசனை செய்கிறார்கள்; மந்திர தந்திர யந்திரங்களால் வழிபாடு செய்கிறார்கள். அழுக்கு மயமான உடம்பு மெழுகாக உருக அன்பர்கள் அவளைத் தரிசித்து இன்புறுகிறார்கள். அவர்களிடத்தில் அவள் தன் தண்ணளி யைப் பாலிக்கிறாள். தேவலோகத்திலும் சத்திய லோகத்திலும் வைகுண்டத்திலும் கைலாசத்திலும் அவள் மிடுக்காக இருக்கிறாள். புழுதி படிந்த இந்த மண்ணுலகத்தில்

தன்னை உபாசிக்கிறவர்களிடத்தில் அவள் எளியவளாக நின்று அருள் செய்கிருள். மேலே சொன்ன இடங்கள் யாவும் அவள் ஏவலுக்கு அடங்கி வாழ்பவர்கள் இருக்கும் உலகங்கள். இதுவோ அவள் அருளுக்கு ஏங்கும் குழந்தைகள் வாழும் இடம். அயலார் முன்னும், உறவினர் முன்னும் தன்னை அலங்கரித்துக்கொண்டு நாகரிகமாகவும் செல்வச் சிறப்புடனும் உலாவும் அரசியானாலும் தன் குழந்தைகளின் முன் அவர்கள் அண்டி அணைத்துக் கொஞ்சும் அன்னையாக இருப்பாள். இராஜராஜேசுவரியும் இந்தப் பாரில் தன்னைச் சந்தித்துத் தரிசனம் செய்யும் அடியவர்களுக்கு எளியவளாக இருந்து தண்ணளி செய்கிருள். அவளுடைய பெருங்கருணை தானே இது?

வானவர் தானவர் முதலியோர்முன் அவள் வீற்றிருக்கும் நிலையையும், இங்கே அவள் பரிந்து கருணை பாலிக்கும் நிலையையும் ஒப்பிட்டு நோக்கும்போது இந்தக் கருணையின் உயர்வு தெளிவாகப் புலனுகிறது.

**பாரில் உன்னைச்**
**சந்திப்பவர்க்கு எளிதாம் எம்பிராட்டி நின் தண்ணளியே!**

அம்பிகையைப் பார்த்து அறிவுவந்த குழந்தையாகிய அபிராமிபட்டர் பேசுகிருர்; வியக்கிருர். இப்போது ஒப்பு நோக்கிப் பார்க்கும் ஆற்றல் வந்திருக்கிறது, அந்தக் குழந்தைக்கு. 'அவ்வளவு பெரியவர்கள் அப்படியெல்லாம் செய்து உனக்குத் தாசாநுதாசர்களாக இருக்க, இந்த உலகத்தில் உன்னைத் தரிசிப்பவர்களுக்கு எளிதில் தண்ணளி செய்கிருயே! என்ன கருணை!' என்று பாராட்டி உருகுகிருர்.

**வந்திப் பவர்உன்னை வானவர் தானவர்**
**ஆனவர்கள்;**
**சிந்திப் பவர்நற் றிசைமுகர் நாரணர்;**
**சிந்தையுள்ளே**

பந்திப் பவர்அழி யாப்பர மானந்தர்;
பாரில்உன்னைச்
சந்திப் பவர்க்குஎளி தாம்எம் பிராட்டிநின்
தண்ணளியே!

[எம்பெருமாட்டியே, உன்னை வணங்குபவர்கள் தேவர்களும் அசுரர்களும் ஆகிய ஆற்றலுடைய பெரியவர்கள்; உன்னைத் தியானிப்பவர்கள் நல்லவர்களாகிய திசைமுகராகிய பிரமாவும் நாராயணமூர்த்தியும்; தம்முடைய திருவுள்ளத்துக்குள் அன்பினாலே கட்டி இன்புறுகிறவர் அழியாத பரமானந்த சொரூபியாகிய சிவபெருமான்; இவ்வளவு சிறப்புடைய உன் குளிர்ந்த அருளானது, உலகத்தில் உன்னைத் தரிசிப்பவர்களுக்கு எளிதாக இருக்கிறது. இது என்ன வியப்பு!

வந்திப்பவர்—வணங்குபவர். தானவர்—அசுரர். திசைமுகர்—பிரமதேவர். பந்திப்பவர்—கட்டுபவர். சந்திப்பவர்-தரிசிப்பவர்; ''மயில்வாகனனைச் சந்திக்கிலேன்'' என்பது கந்தர் அலங்காரம். தண்ணளி—அருளினால் பெருகும் கொடை. தண்ணளி எளிதாம். நீ இவ்வளவு அரியையாக இருந்தும் உலகில் நின்னைத் தரிசிப்பவருக்கு நின் தண்ணளி எளிதாக இருந்தது என்றபடி.

உன்னை வந்திப்பவர், உன்னைச் சிந்திப்பவர், உன்னைப் பந்திப்பவர் என்று கூட்டுக; இடைநிலைத் தீவகம்.

உன்னைச் சிந்தையுள்ளே பந்திப்பதனால் அழியாப் பரமானந்தராக இருக்கிறார் என்ற குறிப்பும் தோன்றியது.]

இது அபிராமி அந்தாதியில் 14-ஆம் பாடல்.

# மூன்று செல்வம்

**தே**வ தானவர்களும் மும்மூர்த்திகளும் வழிபடும் பெருமாட்டியாகிய அம்பிகையின் பெருங் கருணைத் திறத்தை வியந்த அபிராமிபட்டர், அவளுடைய கருணைத் திறத்தால் மக்கள் அடையும் பேற்றை இப்போது நினைத்துப் பார்க்கிறார்.

இந்த உலகத்தில் சுகத்தையும் துக்கத்தையும் கலந்து அநுபவிக்கும் உயிர்கள் நன்மையையும் தீங்கையும் செய்கின்றன. முன் வினைகளின் பயனாகவே அந்த இன்ப துன்பங்களை அடைகின்றன. அது விதியின் பயன். ஆனால் இப்போது புதிய செயல்களைச் செய்கின்றன. இவற்றின் பயனை இனி வரும் பிறவிகளில் அடையும்.

இங்கே புண்ணியச் செயல்கள் புரிந்தவர்கள் அவற்றின் பயனாக இன்பத்தை நுகர வானுலகை அடைவார்கள். தேவருலகத்தில் பெறும். இன்ப வாழ்வு இவ்வுலகத்தில் செய்த புண்ணியத்தின் பயனாக வருவது. ஆனால் அந்த வாழ்வும் புண்ணியப்பயன் தீர்ந்தவுடன் நின்றுவிடுவதே. புண்ணியத்தால் சொர்க்க இன்பத்தை அநுபவித்த நல்லுயிர் பிறகு முக்தியையோ, இவ்வுலக வாழ்வையோ அடையும். தேவலோக இன்பமே முடிவான இன்பம் அன்று. இவ்வுலக வாழ்வைப் போலவே தேவலோக வாழ்வும் நிலையாதது. இங்கே இன்பமும் துன்பமும் கலந்து வரும். அங்கே இன்பம் மாத்திரம் உண்டு. இங்கே பொல்லாப் புழுமலி நோய்ப் புன்குரம்பையாகிய இந்த உடலில் வாழ்கிறது உயிர்; அங்கே ஒளியையுடைய திருமேனியோடு இருக்கும். இப்படிப் பல வகையில் தேவர் பிறப்பு மனிதப் பிறப்பைவிட உயர்ந்ததே யானாலும், அதைவிட உயர்ந்தது

ஒன்று உண்டு அதுதான் வீட்டின்பம். அது தேவர்களுக்கும் அரியது.

"யானென தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும்"

என்பது திருக்குறள். இம்மை, மறுமை, வீடு என்று இந்த மூன்று நிலைகளையும் சொல்வார்கள்.

இங்கே மனிதப் பிறவியை அடைவது மிகவும் அரிய செயல். எண்பத்து நான்கு ல்ட்ச வகையான ஜீவராசிகள் இந்த உலகத்தில் இருக்கின்றன. அவற்றில் ஒன்று மனிதப் பிறவி. பல பல பிறப்புக்களை எடுத்து வரவர உயர்ந்து மனிதப் பிறப்பை எடுக்க வேண்டும். பல காலம் செய்த புண்ணியப் பயனாகவே வந்தது இந்தப் பிறவி.

"பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்"

என்பர் அருணகிரி நாதர். இறைவன் திருவருளைப் பெறுவதற்கு இந்த மனிதப் பிறவி ஒன்றுதான் தகுதி உடையது. மண்ணிலே முளைத்து வானிலே பழுத்த பழமானாலும் அதன் விதை மண்ணிலே விழுந்துதான் முளைக்க வேண்டும். ஆதலின் இந்தப் பிறவி ஒரு வகையில் தேவர் பிறவியை விடச் சிறந்ததென்று சொல்ல வேண்டும். மனிதப் பிறவியில் புண்ணியம் செய்வதனால் சொர்க்க பதவி கிடைக்கிறது. மறுபடியும் மண்ணில் பிறந்து இறைவனை வழிபட்டு மோட்சம் அடைய வேண்டும்.

இத்தகைய சிறப்பு வாய்ந்த இந்தப் பிறவியில் இன்ப துன்பங்களை நாம் அநுபவிக்கிறோம். எம்பெருமாட்டியின் திருவருள் துணையிருந்தால் இந்த வாழ்வில் நலங்கள் மிகும்; துன்பமின்றி இன்பமே பெறலாம். முற்பிறவியில் செய்த தவத்தின் பயனாக நமக்கு எல்லாம் கிடைக்கின்றன. ஆனால் அந்தத் தவத்தை இன்னது வேண்டும் என்று கருதிச் செய்தால் அதற்குச் சிறப்பு இல்லை. "தாயே, உன்னுடைய அருள் வேண்டும்" என்று வேண்

டிச் செய்வதுதான் உண்மையான தவம். செல்வம் பெற்ற வன் அந்தச் செல்வத்தைக் கொண்டு வேண்டிய பொருள் களை வாங்கிக் கொள்ளலாம். உணவுப் பொருள், உறங்கு வதற்குரிய கருவிகள், உறைவதற்குரிய வீடு முதலியன எல்லாம் செல்வத்தால் கிடைப்பவை. ஒரு செல்வனை அடைந்து, "எனக்கு உணவு தா" என்றும், "எனக்கு ஆடை அளி" என்றும், எனக்கு வீடு வழங்கு" என்றும் தனித் தனியே கேட்பதைவிட, "எனக்குப் பெரும்பொருள் அருள்க" என்று கேட்பவன்தான் அறிவாளி. அது கிடைத் தால் இந்தப் பொருள்கள் யாவற்றையும் பெறுவதோடு, இவற்றிற்கு மேலும் வேண்டியதைப் பெறலாம், அது போலவே எம்பெருமாட்டியிடம், 'அது வேண்டும், இது வேண்டும், என்று கேட்பதைவிட நமக்கு வேண்டுவன எல்லாவற்றையும் வழங்கும் திருவருளையே வேண்டிப் பெறுவதுதான் சிறந்தது. அது கிடைத்தால் எல்லாம் கிடைக்கும். இந்தக் கருத்தைச் சொல்ல வருகிறார் இந்தத் தேவியின் பக்தர்.

முதலில், எம்பெருமாட்டியின் திருவருள் பெற எத்தனையோ காலம் தவம் செய்யவேண்டும் என்று சொல்லுகிறார்.

**தண்ணளிக்கு என்று முன்னே பல கோடி**
**தவங்கள் செயவார்.**

'உன்னுடைய குளிர்ந்த அருளைப் பெற வேண்டுமென்ற வேட்கையுடையவர்களாகி அதன்பொருட்டு முற்பிறவி களில் பலகோடி வகைகளில் அமைந்த தவங்களைச் செய்யும் அன்பர்கள்' என்பது இதன் பொருள்.

அம்பிகை ஆருயிர்களிடம் எப்போதும் கருணை உடையவளாகவே இருக்கிறாள். அவள் எல்லோருக்கும் தன்னுடைய அருளை வழங்கி வருகிறாள். ஆனால் அந்த அருளின் விளைவு வெவ்வேறாக அமைகிறது. தன் குழந்தை முன்னுக்கு வரவேண்டுமென்ற அன்பினால் தாய் அவன்

தவறு செய்தால் கண்டிக்கிருள். அறிவாளியாக இருந்தால் பாராட்டுகிருள். "அணைப்பதும் ஒரு கை; அடிப்பதும் ஒரு கை, என்ற பழமொழி இதனைச் சுட்டுகிறது.

அம்பிகையின் கருணையை இரு வகையாகச் சொல் வார்கள். மறக்கருணை என்றும் அறக்கருணை என்றும் கூறுவன அவை. பக்குவம் இல்லாத உயிர்களுக்குப் பல வகையில் துன்பத்தைக் கொடுத்துச் சோதனையும் வேதனையும் உண்டாக்கி, அவற்றைத் தூய்மைப்படுத்தும் அருட்செயல்கள் மறக்கருணையினுல் உண்டாகின்றவை. நெல்லில் உள்ள உமியைப் போக்க வேண்டுமாஞல் உரலில் இட்டு உலக்கையால் குத்தவேண்டும். நெல்லாகவே சமைக்க முடியாது. அப்படியே, பக்குவப்படாமல் பாவம் செய்த உயிர்களை அம்பிகை பிறவியாகிய உரலில் இட்டு இன்ப துன்ப அநுபவமாகிய உலக்கையால் குத்தி அரிசியாக்கி ஞானக்கினியினிலே அன்புலையில் பக்குவமாக்கி உண்ணுகிருள்; தன்ஞேடு ஒன்றுபடுத்திக் கொள்கிருள்.

இந்த உண்மையை அறிந்த பெரியவர்கள் துன்பம் வந்தால் அதற்கு ஏங்கமாட்டார்கள்; 'நம் பாவத்தைப் போக்க வந்த சோதனை' என்று எண்ணி மகிழ்ச்சியுடன் ஏற்பார்கள்; அதை வரவேற்பார்கள்.

ஹரதத்த சிவாசாரியார் என்ற பெரியவர் கஞ்சனூர் என்னும் ஊரில் வாழ்ந்து வந்தார். அவர் பல அரிய நூல்களை இயற்றியிருக்கிறுர். வழக்கம்போல் ஒரு நாள் அந்த ஊரிலுள்ள அக்கினிபுரீசுவரர் திருக்கோயிலுக்குத் தரிசனம் செய்யப் போஞர். அப்போது கோயிலில் சேவகம் செய்யும் ருத்திரகணிகை ஒருத்தியைத் தர்ம கர்த்தர் கம்பத்தில் கட்டி அடித்துக்கொண்டிருந்தார். அதைக் கண்ட சிவாசாரியார், "எதற்காக அப்படிச் செய்கிருர்கள்?" என்று கேட்டார். "ஒருவரிடமும் சொல்லாமல் நான்கு நாட்கள் வெளியூருக்குப் போய் விட்டாள். சிவனுடைய

கைங்கரியத்தை விட்டுவிட்டு நான்கு நாள் போன இடத்தில் இருந்துவிட்டாள். இதனால் தண்டனை அளிக்கிறார்கள்'' என்று அங்கிருந்தவர்கள் சொன்னார்கள். அதைக் கேட்ட வுடனே அந்தப் பெரியவர் குலுங்கிக் குலுங்கி அழுதார். அவர் அவ்வாறு வருந்துவதற்கு இன்னது காரணம் என்று யாருக்கும் தெரியவில்லை. சிறிது நேரம் வருந்திய அவர் அமைதி பெற்றபிறகு ஒருவர் அவரை மெல்ல அணுகி, "தாங்கள் இவ்வாறு வருத்தம் அடையக் காரணம் இல்லையே! இந்தப் பெண்ணைத் தண்டித்தது தவறு என்பது தங்கள் கருத்தா?'' என்று கேட்டார். அந்தப் பெரியவர், "அதற்காக நான் வருந்தவில்லை. அவள் பெற்ற பாக்கியம் நமக்குக் கிடைக்கவில்லையே என்பதை எண்ணி நான் வருந்தினேன்'' என்றார். அந்தக் காரணம் அவருக்கு விளங்கவில்லை "அவள் பெற்றது பாக்கியமா? தண்டனை அல்லவா?'' என்றார், கேள்வி கேட்டவர். "ஆம்; அது தண்டனை அன்று; பாக்கியம். இறைவனுக்குக் கைங்கரியம் செய்யவில்லையென்பதை நினைப்பூட்டி அடித்து மீண்டும் பணி செய்ய வைக்கிறார்கள் இவளை. என்னை இப்படி யாரேனும் அடித்துப் பணிசெய்ய வைத்திருந்தால் நான் எவ்வளவோ காலத்துக்கு முன்பே உய்வை அடைந் திருப்பேனே! இதனை எண்ணும்போது எனக்கு வருத்தம் உண்டாயிற்று'' என்று அவர் சொன்னபோதுதான் அவரு டைய உள்ளக்கிடக்கை புலனாயிற்று. இறைவனுக்குப் பணி செய்யாதவர்களை ஒறுப்பது அவர்களைத் திருத்தும் செயல் என்ற எண்ணம் அந்தப் பெரியவரிடம் இருந்தது.

ஆகவே, எம்பெருமாட்டி நாம் முன்பு செய்த தீமைக்காக இப்போது ஒறுத்துத் தூய்மை செய்கிறாள் என்பதை நினைத்தால், நாம் பெறும் துன்பங்களும் வரவேற்கத் தக்கவையே என்ற உணர்வு உண்டாகும். அது அம்பிகையின் மறக்கருணை.

அப்படியின்றி, வேண்டியனத வேண்டியபடியே அடையச் செய்து இந்த வாழ்வில் நன்றாக வாழவைக்கும் அவள் கருணை அறக்கருணை. அதைத்தான் இங்கே தண்ணளி என்றார். மறக்கருணை கசப்பு மருந்தைப் போன்றது. இரண்டும் மருந்தானாலும் முன்னையது உண்ணும்போது துன்பமாக இருந்து பயனால் நலம் செய்வது. பின்னையது உண்ணும்போதும் இனிதாக இருந்து, பயனை விளைவிக்கும் போதும் இனிமையாகவே இருப்பது. அம்பிகையின் தண்ணளியாகிய அறக் கருணை இனிப்பு மருந்து போன்றது; தேனே மருந்தானால் எப்படியோ, அப்படி இருப்பது.

முற்பிறவிகளில் பல கோடி தவம் செய்தவர்கள் அவள் தண்ணளியைப் பெறுவார்கள். வேறு எதை எதையோ நாடித் தவம் புரிபவர்கள் இருக்கிறார்கள். தம்முடைய ஆசை நிறைவேற வேண்டுமென்று தவம் செய்தவர்கள் அசுரர்களும் அரக்கர்களும். இராவணன், சூரன், இரணியன் ஆகியோர் மிகவும் கடுமையான தவத்தை இயற்றினவர்கள். அந்தத் தவத்தால் அவர்கள் பெரிய வலிமையைப் பெற்றார்கள்; இன்னது வேண்டுமென்று ஆசைப்பட்டுப் பெற்றார்கள்; அருள் வேண்டுமென்று கேட்கவில்லை. அவர்களால் உலகுக்குத் தீங்கு விளைந்தது. இறைவன் அவர்களை ஒறுக்கும்படி நேர்ந்தது. அத்தகைய தவம் நன்மையை உண்டாக்காது. அது அசுரத்தவம்.

நல்லவர்கள் இறைவியின் திருவருளுக்காக ஏங்கித் தவம் புரிவார்கள். பல காலம் பலகோடி தவம் செய்தவர்கள், அவள் செய்யும் தண்ணளியைப் பெறுவார்கள். அவளுடைய தண்ணிய அருளுக்காக முற்பிறவிகளில் பல கோடி தவஞ் செய்தவர்கள் அந்த அருளைப் பெற்றதனால் பெறும் பேற்றை இங்கே சொல்கிறார் அபிராமிபட்டர்.

ஒரு கனிமரம் இருக்கிறது. அதில் பல கனிகள் குலுங்குகின்றன. அதில் அடர்ந்த தழையும் மணம் பரவும் மலர்களும் உள்ளன. மரத்தின் பயன் கனிதான். என்றாலும் மரத்தின் நிழலும், மலரின் மணமும் இனிமையையே தருகின்றன.

சிலர் மரத்தில் உள்ள கனிகளை மட்டும் பெறுகிறார்கள். அது நல்ல பயன்தான். சிலர் நிழலையும் மலர் மணத்தையும் நுகர்கிறார்கள். அது பெரும் பயன் ஆகாது; பயனென்றே சொல்வதற்கு இல்லை. ஆனால் தழை, மலர், கனி என்னும் மூன்றினாலும் உண்டாகும் பயனைப் பெறுகிறவர்கள் சிறந்தவர்கள்.

மரத்தின் நிழலைப் போல இருப்பது இந்த வாழ்வில் உள்ள இன்பம்; மலரின் மணத்தைப் போல இருப்பது சொர்க்க இன்பம்; கனியைப் போல இருப்பது முத்தி இன்பம். இந்த மூன்று வாழ்வையும் இம்மை, மறுமை, முத்தி என்றும் இகம், பரம், மோட்சம் என்றும், சொல்வார்கள்.

அம்பிகையின் தண்ணளிக்காகத் தவம் செய்தவர்கள் இந்த மூன்றையும் சிறப்பாகப் பெறுவார்கள். முதலில் இந்த உலகில் நல்ல வண்ணம் வாழ்வார்கள்; அவர்கள் வாழ்வு இன்ப வாழ்வாகவே [1]அமையும்.

இந்த உலக வாழ்வில் சிறந்தது அரசபோகம் என்பது பழைய காலத்து எண்ணம்; 'ராஜபோகம்' என்று சொல்வார்கள். இம்மை வாழ்வின் இன்பங்கள் எல்லாவற்றையும் நுகர்பவன் அரசன். அரச பதவியைவிட இந்த வாழ்வில் சிறந்தது இல்லை. இது பழங் காலத்தினர் எண்ணம். ஆதலின் இந்த உலகில் முழுமையான இன்ப வாழ்வில் வாழ்வார்கள் என்பதையே, அரசபதவி பெற்று இன்புறுவார்கள் என்று கூறுகிறார் ஆசிரியர்.

**தண் அளிக்கு என்று முன்னே பல கோடி**
**தவங்கள் செய்வார்**
**மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்?**

இறைவியின் திருவருளுக்காக முன்னைப் பிறவிகளில் தவம் செய்தவர்கள், இந்த நிலவுலகத்தைக் காக்கும் அரசர் செல்வத்தைப் பெறுவார்களாம். அது மட்டுமா? இன்னும் உயர்ந்த வாழ்வையும் பெறுவார்கள் என்ற குறிப்பை உள்ளடக்கி, ''மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்?'' என்ருர். 'அந்தச் செல்வம் ஒன்றுதானு பெறுவார்? அது மிகவும் சாமானியமானது. அதற்கும் மேற்பட்டதை அவர்கள் அடைவார்கள்' என்று மேலே சொல்கிருர்.

இந்த உலகத்தில் செல்வராக வாழ்வதுவே நல்ல வாழ்வுதான். செல்வர்களிற் செல்வனுக இருப்பவன் அரசன். அரச வாழ்வு எல்லாவற்றிலும் சிறந்த இன்பம் பெறும் வாழ்வு. அதுபோலவே சொர்க்கத்தில் தேவராக வாழ்வது சிறந்தது; இன்பமானது; சுதந்தரமானது. ஆனல் அந்த வாழ்விலும் சிறந்தது இந்திரனது வாழ்வு. இந்திரபோகம் என்றும், இந்திரத் திருவம் என்றும் மிக மிகச் சிறப்பான போகத்துக்கும் செல்வத்துக்கும் தலையளவாக அதனைச் சொல்வார்கள். அந்த இந்திரபோகமும் எம்பிராட்டியின் தண்ணளியால் கிடைக்குமாம். மண்ணரசனுக வாழ்ந்து பின்பு விண்ணரசனுகவும் வாழலாம்.

**மதி வானவர்தம் விண் அளிக்கும் செல்வமும் (பெறுவார்).**

அறிவிற் சிறந்தவர்கள் வானவர்கள். மற்றப் பிராணிகளைக் காட்டிலும் மனிதன் அறிவிற் சிறந்தவன். அவனை விட மதியினிற் சிறந்தவர்கள் தேவர்கள். அவர்களுக்குப் புலவர் என்று ஒரு பெயர் உண்டு; புலம் என்பது அறிவு. அதை உடையவர்களாதலின் புலவர் என்ற பெயர்

வந்தது. அவர்கள் வாழும் இடம் விண்ணுலகம். அதைக் காத்து ஆட்சி புரிபவன் இந்திரன். அவன் விண் அளிக்கும் செல்வத்தையும் உரிமையையும் உடையவன். அந்த இந்திர பதவியும் இறைவியின் அருள் பெற்றவர்களுக்குக் கிடைக்கும்.

மதி வானவர் என்பதற்கு யாவரும் மதிக்கும் தேவர் என்றும் பொருள் கொள்ளலாம்.

இந்த இரண்டுதாமா? இந்த இரண்டையும் ஒருவாறு பெற்றுவிடலாம். ஆனால் பெறுவதற்கரியதாக இருப்பது இந்த இரண்டிற்கும் அப்பாற்பட்ட முத்தி என்பது. அதை முத்திச் செல்வம் என்றும் சொல்வதுண்டு.

அழியா முத்தி வீடும் அன்றோ?

என்றைக்கும் அழியாதது முத்தி; அதனைத் தமிழில் வீடு என்பார்கள். முத்தி வீட்டை அழியாதது என்றதனால் மற்றவை அழிவன என்பது குறிப்பாகப் புலனாகும். மண்ணை அளிக்கும் மன்னர் பலகோடி வந்து போயினர். அப்படியே விண்ணை அளிக்கும் இந்திரர் பலர் பதவி இழந்து மாறினர். உலக வாழ்வு சதமன்று; ஆனாலும் வாழும் வரையில் நன்றாக வாழ வேண்டும். அப்படியே சொர்க்க பதவியும் சதமன்று; ஆயினும் புண்ணியப்பயனை அங்கே சென்று வாழ்ந்து கழிக்க வேண்டும். முடிந்த முடிபாக என்றும் மாறாத நிரதிசய இன்ப வாழ்வாகிய முத்தியைப் பெறவேண்டும். இதுவே மனித வாழ்வின் லட்சியம். இவை யாவும் அம்பிகையின் தண்ணளியைப் பெற்றவர்களுக்குக் கிடைக்கும்.

''அறந்தழுவும் நெறிநின்றோர்க் கிகம்போகம் வீடளிக்கும் அம்மை''

என்று மீனாட்சியம்மையைத் திருவிளையாடற் புராணம் (4:20) பாராட்டுகிறது.

அம்பிகையின் தண்ணளியைப் பெறுபவர்கள் இந்த உலகத்திலே நல்வாழ்வு பெறுவர் என்பதை முதலிற் கூறினர். அது நமக்குக் கைமேல் பலனாக வருவது. பிறகு மற்றவற்றைக் கூறினர்.

தண் அளிக்கென்று முன்னே பல கோடி
தவங்கள் செய்வார்
மண் அளிக்கும் செல்வமோ பெறுவார்? மதி
வானவர்தம்
விண் அளிக்கும் செல்வமும் அழியா முத்தி
வீடும்அன்றோ?

திருவருளால் எங்கும் நல்வாழ்வு பெறலாம் என்பதை வற்புறுத்துவது நம்முடைய சமயம்.

''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்;
எண்ணின் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை''

என்று சம்பந்தரும்,

''இம்மை யே தரும் சோறும் கூறையும்
ஏத்த லாம்இடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோகம் ஆள்வதற்
கியாது மையுற வில்லையே''

என்று சுந்தரரும் அருளியிருக்கிறார்கள்.

* * *

அம்பிகையின் தண்ணளியினால் வரும் நலங்களைச் சொன்னவர், இந்தக் கருத்தை அபிராமியம்மையை விளித்தே சொன்னர். ''உன்னுடைய தண்ணளியால் வருவன இவை அன்றோ?'' என்று வினவுவாரைப் போலச் சொன்னர். அம்பிகையை அவர் அன்போடு விளிக்கிறார்.

அம்பிகை பச்சை நிறமுடையவளாகவும் சில சமயங்களில் இருக்கிறாள், அவளுடைய இனிய சொல் கிளிமொழியைப் போல இருக்கிறது. ஆதலின் 'பைங்கிளியே!' என்று விளிக்கிறார். 'ஓங்காரமென்னும் கூட்டில் உலாவும் கிளி' என்று பிறரும் சொல்லியிருக்கிறார்கள். இந்தக் கிளிக்குப் பேச்சு, பாட்டு என்று வேறு வேறாகக் குரல் இல்லை. பேசினாலே அது பாட்டுப் போல இனிமையாக இருக்கும். கலைமகளின் கீதத்தைக் கேட்டு, "நன்றாக இருக்கிறது" என்று சொன்ன அம்பிகையின் வாய்மொழி தன் வீணையின் இன்னொலியினும் இனிமை பொழிவதைக் கண்டு நாணி அந்த வாணி தன் வீணையை உறையிலிடுவாள் அன்றோ? அம்மையின் குரல் பண்ணைப் போல் இருக்கும். அவள் சொல் 'பண் அளிக்கும் சொல்.'

அவளுடைய திருமேனி ஞானமணம் வீசுவது. அவள் பரிமளம் வீசும் திருமேனியுடையவள். "திவ்ய கந்தாட்யா" (**லலிதா சகசிர நாமம்**, 631) என்பது அவளுடைய திருநாமங்களில் ஒன்று. பண்ணளிக்கும் சொல்லையும் பரிமளத் திருமேனியையும் உடைய பெருமாட்டியைச் சியாமளா என்னும் திருநாமத்தால் அழைப்பதும் உண்டு. காளிதாஸ மகாகவி **சியாமளா தண்டகம்** என்று ஒரு துதி நூல் பாடியிருக்கிறார். சியாமளா என்பது தமிழில் யாமளை என்று வரும்.

**பண் அளிக்கும் சொல் பரிமள யாமளைப்**
**பைங்கிளியே!**

எம்பிராட்டியினுடைய திருவாய்மொழியையும் திருமேனி மணத்தையும் வண்ணத்தையும் தியானம் செய்கிறார் ஆசிரியர். பண்களையெல்லாம் உண்டாக்கும் மொழி என்றும் அவற்றைப் பாதுகாக்கும் மொழி என்றும் சொல்லலாம். அம்பிகையின் திருவுருவத் தியானத்தில் ஈடுபட்டவர்களுக்கு இந்தச் சொல்லாகிய ஒலியும், இந்தப் பரிமளமாகிய மணமும், இந்தத் திருமேனிச் சோதியும் புலனாகும்.

அவற்றைத் தியானித்துத் தம்மை மறந்து ஈடுபட்டுக் கிடப்பதே ஒரு தவமாகும்.

தண்அளிக் கென்றுமுன் னேபல கோடி
    தவங்கள்செய்வார்
மண்அளிக் கும்செல்வ மோபெறு வார்?மதி
    வானவர்தம்
விண்அளிக் கும்செல் வமும்அழி யா முத்தி
    வீடும் அன்றோ?
பண்அளிக் கும்சொற் பரிமள யாமளைப்
    பைங்கிளியே!

*பண்களைப் போல இனிமையைத் தரும் திருவாய் மொழியையும் திவ்ய மணத்தையும் கொண்ட சியாமளா தேவியாகிய பச்சைக்கிளி போன்ற தாயே, நின்னுடைய குளிர்ந்த கருணையைப் பெறும்பொருட்டு முன் பிறவிகளில் பல கோடி தவங்களைச் செய்தவர்கள் இந்த உலகத்தைக் காத்து ஆளும் செல்வமாகிய அரசுரிமையை மட்டுமா பெறுவார்கள்? அறிவையுடைய தேவர்களுக்குரிய தேவ லோகத்தை ஆளும் செல்வமாகிய இந்திர பதவியையும், பின்பு என்றும் அழியாத முத்தியாகிய வீட்டுலக வாழ்வை யுமல்லவா பெறுவார்கள்?*

[பல கோடி என்றது எண்ணற்றது என்ற பொருளை உடையது. செல்வமோ என்றது, செல்வம் மட்டுமா என்னும் பொருள் உடையது வீடும் பெறுவார் அன்றோ என்று கூட்டியுரைக்க. பண் அளிக்கும்—பண்ணைப்போன்ற; பண்—ராகம்; அளிக்கும் : உவமவாசகம். சொல்லையுடைய கிளி, பரிமள யாமளைக் கிளி என்று கூட்டுக.]

அம்பிகையை உபாசிப்பவர்கள் இம்மை மறுமை வீடு களைப் பெறுவார்கள் என்பது கருத்து.

இது அபிராமி அந்தாதி 15ஆவது பாடல்.

# அதிசயமான கருணை

அம்பிகையை எண்ணித் தவம் புரிவார் பெறும் பயன்களைச் சொன்ன அபிராமிபட்டர் மீண்டும் அம்பிகையின் பெருமையை நினைக்கிறார். இனிய மொழியாலும், பச்சை நிறத்தாலும் தேவி கிளியைப் போல விளங்குகிறாள். வேத மாகிய மழலைச் சொல்லைப் பேசும் கிளி என்று குமரகுருபரர் பாடுகிறார்.

''எழுதாச்சொல் மழலை ததும்பு பசுங்குதலைச்
சோலைக் கிளியே!''

இவற்றையெல்லாம் எண்ணிய அபிராமிபட்டர்,

**கிளியே!**

என்றார்.

எம்பெருமாட்டியைத் தியானம் செய்பவர்களுக்கு அவள் ஒளி வடிவமாகக் காட்சி தருவாள். பொதுவாக நாம் கண்ணை மூடிக்கொண்டால் இருட்டுத்தான் தோன்றும். பல காலம் தியானம் செய்து பழகினவர்களுக்கு ஒளி தோன்றும். தேவியின் பந்துக்களாகிய அன்பர்கள் அவளுடைய தேஜோமய உருவத்தைத் தியானிக்கிறார்கள். அதனால் அவர்கள் கண்ணை மூடியவுடன் ஒளிப்பிழம்பைக் காணுகிறார்கள்.

நாமும் ஏதாவது விளக்கையோ சூரியசந்திரரையோ பார்த்துவிட்டு உடனே கண்ணை மூடிக்கொண்டால் உள்ளே சிறிது நேரம் ஒளி தோன்றும். ஆனால் அது நெடுநேரம் நில்லாது. உண்மையான அன்பும் தியானப் பயிற்சியும் உடையவர்களுக்கு உள்முகக் காட்சியில் ஒளி மாறாமல் நிற்கும். அம்பிகை தன் சோதி வடிவத்தை அன்பர்கள்

உளத்தே நிறுத்தி அங்கே மேன்மேலும் ஒளி விடும்படி செய்கிறாள்.

''அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும்
தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே''

என்று குமரகுருபரர் பாடுவார். அடியார்களுடைய உள்ளத்தில் ஒளிமயமாய்க் கிடந்து ஒளிர்கிறாள் தேவி.

**கிளைஞர் மனத்தே கிடந்து கிளர்ந்து ஒளிரும் ஒளியே!**

என்று ஆசிரியர் பாடுகிறார்.

தேவர்களே ஒளிமயமான திருவுருவடையவர்கள். அம்பிகையைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? அப்பெருமாட்டிக்கு உள்ள காந்தி, காந்திமதி, தேஜோவதி, பரஞ்சோதி, ஸ்வப்ரகாசா என்ற திருநாமங்கள் அவள் ஒளிவடிவாகி நிற்பவள் என்பதைப் புலப்படுத்தும்.

அடியார் உள்ளங்களில் அடங்கி ஒளியாகிக் கிடக்கும் அம்மை உலகத்திலுள்ள ஒளிகளுக்கெல்லாம் ஆதாரமாக இருக்கிறாள். ஒளி தருகின்ற பொருள்கள் மூன்று. அவற்றை முச்சுடர் என்பார்கள். சந்திரன், சூரியன், அக்கினி என்பன அவை. அன்னை அந்த மூன்றினுள்ளும் இருந்து அவற்றுக்கு ஒளி தந்து, அவை பரப்பும் ஒளிக்கு இடமாக, ஆதாரமாக விளங்குகிறாள். பானுமண்டல மத்யஸ்தா என்றும், சந்த்ர மண்டல மத்யகா என்றும், வன்ஹிமண்டல வாஸிநி என்றும் லலிதா சகசிரநாமம் அம்பிகையைத் துதிக்கிறது. முச்சுடரின் நடுவிலும் இருந்து அவற்றை ஒளியுடையன ஆக்குகிறவள் அம்பிகையே ஆதலின்,

**ஒளிரும் ஒளிக்கு இடமே!**

என்றார் ஆசிரியர். கிளியென்றவுடன் உருவம் நினைவுக்கு வரும். ஒளியென்றவுடன் காட்சிப் பொருளாகத் தோன்றினாலும் குறிப்பிட்ட உருவம் நினைவுக்கு வராது. அம்பிகை

காட்சிப் பொருளுக்கும் மேலே மிக மிக நுட்பமான ஆகாசமாக விளங்குகிருள். தனக்கு என்று ஓர் உருவமும் நிறமும் எல்லையும் இல்லாமல் நிற்கும் வெளியாக நிற்கிருள். ஆகாசத்தில் பல வகை உண்டு. அத்தனையுமாக இலங்கு கிறவள் மகாமாதா. தஹராகாச ரூபிணி, பராகாசா என்ற திருநாமங்களைக் கொண்டு இதனை உணரலாம். ஆகவே,

**எண்ணில் ஒன்றும் இல்லா வெளியே!**

என்று அடுத்தபடி துதிக்கிருர்.

பஞ்ச பூதங்களில் ஒன்று பூதாகாசம். பூதங்கள் தோன்றும்போது முதலில் ஆகாசம் தோன்றும். பின்பு வாயு தோன்றும்; அப்பால் அக்கினியும், பிறகு நீரும், பிறகு மண்ணும் தோன்றும். இந்த ஐந்து பூதங்களுமாக விரிந்து நிற்கிறவள் அபிராமியே. ஞானம் இல்லாதவர் களுக்குப் 'பூதமைந்தும் விலங்கிய விகாரப் பாடாக' இந்தப் பிரபஞ்சம் தோன்றிலும் மெய்ஞ்ஞானம் பெற்றவர் களுக்கு யாவும் பரம்பொருளாகத் தோன்றும்.

"பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதம்"

என்பது **திருமந்திரம்**. ஆகாசம் முதலிய பூதங்களாகப் படர்ந்து நிற்பவள் அம்பிகை என்பதை உணர்ந்தவர்கள் மெய்ப்பொருள் கண்டவர்கள்.

**வெளிமுதல் பூதங்கள் ஆகி விரிந்த அம்மே!**

தோற்றும் முறையில் முன்னே வருவது ஆகாசம்; அது விரியும் முறை. ஒடுங்கும்போது ஆகாசம் கடைசியில் நிற்கும்.

"வான் அந்த மான வடிவுடையாள்" (11) என்று முன்னே இவ்வாசிரியர் பாடியதைப் பார்த்தோம். பஞ்ச பூதேசி என்று லலிதா சகசிரநாமம் போற்றும்.

கிளி முதல் பூதங்கள் வரைக்கும் சொல்லி அத்தனையு மாகி விளங்கும் அன்னையின் பெருமையை எண்ணிப் பார்த்தார் இப்பெரியார். தம்முடைய சிறுமையையும் நினைத்தார். "என்னுடைய அறிவு சிற்றறிவு. நீயோ உருவாகியும் உருவின்றியும் விரிந்து பரந்தவள். இவ்வளவு பெரிய நீ என்னுடைய சிற்றறிவுக்கும் அகப்பட்டு அதற்குள் நின்று என்னை ஆட்கொண்டாயே! இது என்ன அதிசயம்!" என்று வியந்து பாராட்டுகிறார்.

**அளியேன் அறிவு அளவிற்கு அளவானது**
**அதிசயமே!**

'என்னிடம் நீ கருணை கொண்டு, அளவுக்கு அடங்காத உன்னை என் அறிவளவுக்கு அகப்படும்படி செய்து கொண்டாய்; நான் இரங்குவதற்குரியவன், அளியேன்' என்று எண்ணி அம்பிகையின் கருணைத் திறத்தை வியக்கிறார்.

"அன்னமாய் விசும்பு பறந்தயன் தேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னைஆள் விரும்பி என்மனம் புகுந்த
எளிமையை என்றும்நான் மறக்கேன்"

என்று கருவூர்ச்சித்தர் பாடுகிறார். அவரைப் போலவே இவரும் அம்பிகையின் பெருமையையும் எளிமையையும் வியந்து பாடுகிறார்.

பெரியவர்களுக்குத் தம்முடைய குறைகளே மிகுதியாகத் தோன்றும். அத்தனை குறைகள் இருந்தாலும் இறைவன் அவற்றை எண்ணாமல் தன்னுடைய இணையற்ற கருணையினால் ஆண்டுகொண்டான் என்று உருகுவார்கள்.

அபிராமிபட்டர் அத்தகைய பெரியவர்களின் வரிசையைச் சேர்ந்தவரே.

கிளியே, கிளைஞர் மனத்தே
கிடந்து கிளர்ந்துஒளிரும்
ஒளியே, ஒளிரும் ஒளிக்குஇட
மே, எண்ணில் ஒன்றும்இல்லா
வெளியே, வெளிமுதல் பூதங்கள்
ஆகி விரிந்த அம்மே,
அளியேன் அறிவளவிற்குஅள வானது
அதிசயமே!

*கிளியைப் போன்ற திருமேனியை உடைய தேவி, உன் உறவினராகிய அன்பர்களின் மனத்தே நிலைபெற்று ஒரு காலைக்கு ஒரு கால் விளங்கித்தோன்றும் ஒளியே, விளங்குகின்ற ஒளிக்கெல்லாம் ஆதாரப் பொருளே, எண்ணிப் பார்க்கும்போது எந்தத் தத்துவமும் ஆகாமல் எல்லாம் கடந்து நின்ற பரவெளியே, ஆகாசம் முதலிய ஐம்பெரும் பூதங்களுமாக விரிந்த தாயே, இத்துணைப் பெரியவளாகிய நீ இரங்கத்தக்க அடியேனது சிற்றறிவின் எல்லைக்கு உட்பட்டது வியப்புத் தருவதாகும்.*

[கிளைஞர்—அன்பர். கிளர்தல்—மேன்மேலும் சிறந்து விளங்குதல். எண்ணில்—ஆராய்ந்தால்.]

அம்பிகையின் எளிவந்த கருணையை எண்ணி வியந்தவாறு இது.

இது அபிராமி அந்தாதியில் 16ஆவது பாடல்.

# அதிசயமான வடிவு

வெளியாகவும் தத்துவக் கூட்டமாகவும் விரிந்த பிராட்டி திருவுருவம் கொண்டு எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் பேரழகுடன் விளங்குகிருள். அவளுடைய எழில் நிரம்பிய திருமேனியில் அழகலை புரளுகிறது. அந்தச் சௌந்தரிய லஹரியிலே சொக்கிப் போகிறவர் பரமசிவனுர்.

எம்பெருமாட்டியின் உருவப் பேரெழிலை எத்தனையோ கவிகள் வருணித்திருக்கிருர்கள். ஆனுலும் அதற்கு முடிவு கட்டினவர் யாரும் இல்லை. அப்பெருமாட்டியின் திருமேனி எழிலுக்கு உவமையே இல்லை. "அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி" என்று பாடுவார் அபிராமிபட்டர்.

அவளுடைய வடிவு காணக் காண வியப்பைத் தருவது. உலகில் தூய அழகுடைய பொருள்களிலெல்லாம் அவளுடைய அருளின் தொடர்பு இருக்கும். வாயினுல் புகழ்ந்து அறுதியிட்டுக் காட்டும் வடிவன்று, அவள் அழகுத்திருவுருவம். அதனைக் கண்டு கருத்திலே மொண்டு வியப்புணர்ச்சியிலே ஒன்றி நிற்பதையன்றி வேறு செயல் இல்லை.

புதிய அழகைக் கண்டால் அதிசயமாகப் பார்ப்பது மனித இயல்பு. ஆனுல் எல்லா அழகையும் அடக்கி மீதூர்ந்து நிற்கும் அன்னையின் வடிவழகு அதிசயங்களில் எல்லாம் மிக்க அதிசயம். இந்த அதிசய எழிலை ஒரு வகையில் வருணித்துப் பார்க்கலாம் என்று தொடங்கினுர் அபிராமிபட்டர். முதலில் பொதுவாக, "ஆ ஆ!

என்ன அதிசயமான வடிவு!'' என்று சொல்லிக்கொண்டு ஆரம்பித்தார்.

**அதிசயமான வடிவு உடையாள்.**

இப்படிச் சொல்லிவிட்டால் போதுமா? அவர் தம் உள்ளத்தடத்திலே வைத்துத் தியானிக்கும் பெருமாட்டியின் பேரழகிலே சொக்கி நின்று தம்மை மறப்பவர். இப்போது மற்றவர்களுக்கு அந்த அழகைக் கொஞ்சம் சொல்லிப் பார்க்கலாம் என்று புகுந்தார். "அதிசயமான உருவம் படைத்தவள்'' என்று பீடிகை போட்டுவிட்டார். இனி அதை விரித்துரைக்க வேண்டும். அங்க வருணனை செய்யலாமா என்று யோசித்தார். முதலில் எதைச் சொல்வது? முகத்தைத்தான் சொல்ல வேண்டுமென்று எண்ணினர். எப்படிச் சொல்வது?

உலகத்தில் அழகிய முகத்துக்கு உவமை சொல்வ தானல் எல்லோருமே தாமரையைச் சொல்லுகிருர்கள். அந்த வாய்பாடு அவருக்கு நினைவு வந்தது. "சே! இந்தப் பழைய உவமையையா சொல்வது?'' என்ற எண்ணம் உடன் வந்தது. "அப்படியானல் வேறு எதைச் சொல்வது?'' எண்ணிப் பார்த்தார். ஒன்றுமே தோன்றவில்லை. உலகத்தி லுள்ள தாமரைகள் எல்லாம் சேர்ந்து நின்ருலும் அம்பிகையின் முகத் தாமரைக்கு ஒத்து வருமா? அம்பிகை யின் திருவுருவ வருணனை செய்யப் புகுந்ததே தவறு போலும் என்று எண்ணினர் பட்டர்.

தாமரை எங்கே? அம்பிகையின் திருமுக எழில் எங்கே? எத்தனை காலம் தவம் செய்தாலும் இந்த எழில் தாமரைக்கு வருமா?—இப்படி ஓடிய எண்ணத்தினூடே ஒரு புதிய கருத்துத் தோன்றியது ஆசிரியருக்கு. 'உலகத்திலுள்ள தாமரைகள் யாவும் எம்பெருமாட்டியின் திருமுகமலரின் பேரழகைக் கண்டு துதிக்கின்றன' என்று ஒரு கற்பனை

தோன்றியது. தோல்வியுற்றவர்கள் வெற்றி அடைந்தவர்களைத் துதிப்பது வழக்கம். அவ்வாறே எந்தத் தாமரையும் அம்பிகையின் திருமுகத்துக்கு ஒப்பாகாமல் தோல்வியுற்றது. இப்போது எல்லாத் தாமரைகளும் தம்மை வெற்றி கொண்ட திருமுகத்தைத் துதிக்கின்றன. இந்தப் பக்தரின் காதுக்கு அந்தத் துதி கேட்கிறது போலும்! இப்போது உற்சாகமாக அம்பிகையின் ஆனனத்தைப் பாராட்டுகிறார்.

**அரவிந்தம் எல்லாம் துதி சய ஆனனம்.**

ஆம்! இந்த அழகிய முகத் தாமரையைத் தாங்கியிருக்கும் பெருமாட்டியும் கொடி போலவே ஒளிர்கிறாள். மென்கொடிபோன்ற அவள் திருமேனியின் மேலே விட்டு விளங்கும் மலர் அவள் திருமுகம். அந்தச் சுந்தரவல்லியிற் பூத்த ஆனனமாகிய மலரை எல்லாத் தாமரைகளும் துதிக்கின்றன.

**அரவிந்தம் எல்லாம் துதிசய ஆனன சுந்தரவல்லி.**

முகத்துக்கு உவமை தேடி அலைந்து கடைசியில் ஒருவாறு உவமைப் பொருளை வென்று நிற்கும் பேரெழிலைச் சொன்ன ஆசிரியருக்கு, இனி அங்கங்களை வருணிப்பது இப்போது சாத்தியம் அன்று என்ற எண்ணம் வந்து விட்டது.

ஆயினும் அதிசயமான வடிவுடையாள் என்று தொடங்கி ஆனனத்தின் ஜயத்தை மட்டும் சொல்லி நின்றுவிட்டால் அது நன்றாக இருக்குமா? அந்த உண்மையை நிறுவவேண்டுமே! வருணனையினால் அதை நிரூபிக்கும் ஆற்றல் யாருக்கும் இல்லை.

ஒரு பொருளின் பெருமையை அதனால் உண்டாகும் விளைவினால் தெரிந்து கொள்ளலாம். அம்பிகையின் அழகின் சிறப்பையும் அந்த வகையில் சொல்லிப் பார்க்கலாம் என்று ஒரு நினைவு எழுந்தது.

அழகுக்கு அரசன் மன்மதன். அவன் மனைவி இரதியோ அழகரசி. இரதிபதியாகிய காமன் உலகத்தையெல்லாம் தன்னுடைய கணையினால் மயக்கினான். முப்பத்து முக்கோடி தேவர்களும் அவனுடைய மோகன மலரம்பினால் காமம் அடைந்தனர். தன்னுடைய வீரத்தைத் திருமாலினிடம் காட்டினான்; பிரமனிடம் காட்டினான்; இந்திரனிடம் காட்டினான். யாவரும் அவன் உண்டாக்கிய மயக்கத்தில் ஆழ்ந்தனர்.

இந்த வெற்றிகளைக் கொண்ட காமன் மகாதேவரிடத்திலும் தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கினான். அவனுக்கே நம்பிக்கையில்லை. ஆயினும் தேவர்களெல்லாம் அவனைத் தூண்டினர். யோக தட்சிணாமூர்த்தியாக எழுந்தருளியிருந்த சிவபிரான்மேல் அவன் தன் மலரம்பை எய்தான். சிவபெருமான் விழித்துப் பார்த்தார்; ஞானக் கண்ணாகிய நெற்றிக் கண்ணை விழித்தார். ஞானத்தின் முன் காமம் நிற்குமா? காமன் எரிந்தான். எல்லோரையும் தன் அம்பின் வசப்படுத்தி மயக்கிய காமனோடு அவன் வில்லும் அம்பும் அழிந்தன. அவனுக்கு அதுகாறும் எங்கும் தோல்வியே உண்டாகவில்லை. ஜயம் ஜயம் என்று இரதிபதியாகிய காமன் முழங்கினான். அத்தகையவன் சிவபெருமான் பார்த்த நெற்றிக் கண் பார்வைக்கு முன் தோல்வியுற்றான்; அவனுக்கு அபசயம் உண்டாயிற்று. சிவபெருமானை மயக்கும் ஆற்றல் அவனிடம் இல்லை. அவன் தோல்வியுற்றுத் திரும்பினானா? இல்லை; எரிந்து சாம்பலானான். பின்பு இரதி தேவி வேண்டக் கருணை கூர்ந்து அப்பெருமான் அவனை உயிர்ப்பித்தார்; அவள் கண்ணுக்கு மட்டும் தோற்றும் உருவுடையவனாகச் செய்தார்.

இரதிபதி பெற்ற வெற்றிகள் யாவும் தோல்வியுறச் செய்த ஞானப் பார்வையை உடையவர் சிவபெருமான்.

**துணை இரதிபதி**

**சயமானது அபசயமாக முன் பார்த்தவர்.**

இத்தகைய ஞான சொரூபியான சிவபெருமானை மயக்கிய பேரழகுடையவள் எம்பெருமாட்டி.

"பாகன் அகம் குழைவித்த பவித்ர பயோதரி"

என்று ஒட்டக்கூத்தர் பாடுவார். இந்த ஞானமூர்த்தியின் உள்ளத்தை உருக்கினுள் அம்பிகை. மன்மதனை எரித்த ஞானக் கண்ணுடையவருடைய உள்ளத்தை மாத்திரமா கொண்டாள் பிராட்டி? அவருடைய பாதிப் பாகத்தையே வவ்விக் கொண்டாள்.

அவளுடைய அதிசய வடிவை எண்ணி, **'திவ்ய விக்ரஹா'** (621) என்றும், இறைவர் வாமபாகத்தை வவ்வியதை எண்ணி, **'ஸ்ரீகண்டார்த்த சரீரிணி'** (392) என்றும் **லலிதா சகசிரநாமம்** பேசுகிறது.

அம்பிகை இறைவருடைய வாமபாகத்தை வவ்வியது எப்படி? அவருடைய புத்தியை முதலில் வெற்றி கொண் டாள்; அதன் பிறகு அவர் திருமேனியில் இடப் பாகத்தில் குடியேறினுள். வெற்றி கொண்ட நாட்டில் குடியேறுவது மன்னர் வழக்கம். பலரை வென்று வெற்றி கொண்ட ஒரு பெரு வீரனை வெற்றி கொண்ட மன்னராகத் திகழ்ந்தார் இறைவர். அந்த மன்னரை வெற்றி கொண்ட மகாராணியாக, சக்கரவர்த்தினியாக விளங்குகிருள் இராஜ ராஜேசுவரியாகிய அம்பிகை.

யாவரையும் ஜயித்தவன் காமன்; அவனை ஜயித்தவர் சிவபெருமான்; அவரை ஜயித்தவள் அம்பிகை. இந்த வெற்றி அம்பினுல் உண்டாகவில்லை; அன்பினுல் உண்டா யிற்று. படை வகுப்பினுல் உண்டாகவில்லை; பெரு வனப் பினுல் உண்டாயிற்று. வன்மையால் அமையவில்லை; மென் மையால் அமைந்தது.

காமத்தை வென்ற ஞானியாகிய சிவபிரான் அருள் உருவாகிய அம்பிகையின் தூய அழகுக்கு வசமாகி ஒரு பாதியிலே வைத்துக் கொண்டார். அவருடைய மதியை வென்று வாமபாகத்திலும் குடியேறிய பேரழகி அன்னை.

அம்பிகையின் அதிசயமான வடிவழகுக்கு இதைவிட வேறு என்ன பெருமை வேண்டும்?

**அதிசய மான வடிவுடை யாள், அர விந்தமெல்லாம்**
**துதிசய ஆனன சுந்தர வல்லி, துணைஇரதி**
**பதிசய மானது அபசய மாகமுன் பார்த்தவர்தம்**
**மதிசயம் ஆகஅன் றோவாம பாகத்தை வவ்வியதே?**

*வியக்கத்தக்க திருவுருவத்தை உடையவளாகிய அபிராமி, தாமரைகளெல்லாம் துதிக்கும் வெற்றியுடைய திருமுகத்தையுடைய அழகுக் கொடி போன்றவள்; துணைவியாகிய இரதியின் கணவனாகிய மன்மதன் பல இடங்களில் பெற்ற வெற்றியானது தோல்வியாகும்படியாக முன்பு நெற்றிக் கண்ணால் பார்த்தவருடைய திருவுள்ளம் தனக்குரிய வெற்றியாக மாற, அதனால் அல்லவோ அப் பெருமாட்டி அவருடைய இடப்பாகத்தை மேற் கொண்டது?*

[பார்த்தவர் தம் மதியினிடம் சயமாவதற்காக அல்லவா வாமபாகத்தை வவ்வியது என்றும் கொள்ளலாம்.

அதிசயம்—வியப்பு. துதி ஆனனம், சய ஆனனம் என்று கூட்டுக. உவமைக்கு ஆற்றாமல் தாமரைகள் தோல்வியுற அவற்றை வென்ற வெற்றியையுடைய திருமுகம். சுந்தர வல்லி—அழகிய கொடி போன்றவள். துணை—மனைவி. இரதி பதி—காமன். சயமானது—முன்பெற்ற வெற்றி; ஆனது: எழுவாய் வேற்றுமைச் சொல்லுருபு. அபசயம்—தோல்வி, முன் பெற்ற சயம் இப்போது அபசயமாக மாறியது. முன் பார்த்தவர்—முற்காலத்தில் நெற்றிக் கண்ணைத் திறந்து பார்த்த சிவபெருமான். மதி சயம் ஆக—திருவுள்ளம் தனக்கு வெற்றியால் பெற்ற பொருள் ஆகிவிட. சயம்—வென்ற பொருள்; ஆகு பெயர். வாமபாகம்—இடப்பாகம். வடிவுடையாள், சுந்தரவல்லி, மதிசயமாக, அதனாலன்றோ வவ்வியது என்று கூட்டுக.]

அம்பிகை பேரழகுடையவள் என்பது கருத்து. அபிராமி என்ற திருநாமத்துக்கே பேரழகுடையவள் என்பது ஒரு பொருள்.

இது அபிராமி அந்தாதியில் 17-ஆவது பாடல்.

# காலனும் காலும்

அம்பிகையின் தியானத்திலே ஈடுபட்டவர் அபிராமி பட்டர். சென்ற பாட்டில், அம்பிகை இறைவனுடைய வாம பாகத்தை வவ்விய செய்தியைச் சொன்னார். அர்த்தேசுவர நாரியாக எம்பெருமாட்டியைத் தியானித்தார். ஆம்; இவர் அபிராமியின் பக்தராதலின், "சிவபெருமான் தம் வாம பாகத்தில் அம்பிகையை வைத்திருக்கிறார்" என்று சொல்லாமல், "அவர் வாமபாகத்தை அம்மை எடுத்துக் கொண்டாள்" என்கிறார், அருணகிரிநாதரும் இப்படிச் சொல்வார்.

"ஒருவரைப் பங்கில் உடையாள்"

"த்ரியம்பகனைப் பாகத்தில் வைக்கும் பரம கல்யாணி."

இப்போது, இருவரும் ஒருவராம் அந்த வடிவத்தை நினைக்கிறார்; "எனக்கு அந்தத் திருவுருவத்தோடு காட்சி தரவேண்டும்" என்று பிரார்த்திக்கிறார்.

சிவபெருமானும் அம்பிகையும் ஒருவருள் ஒருவராக மறைந்திருக்கும் சமயமும் உண்டு; பாதி பாதியாக இணைந்திருக்கும் செவ்வியும் உண்டு; தனித்தனியாக இருந்து கணவன் மனைவியாக வீற்றிருக்கும் திருக்கோலமும் உண்டு. வாம பாகத்தை வவ்வியது அர்த்த நாரீசுவரத் திருக்கோலம். உலகம் தோற்றுவதற்குமுன் இந்தக் கோலத்தில் இறைவன் வெளிப்படுகிறானும். பிறகே தத்துவங்கள் தோன்றுகின்றன என்று பெரியவர்கள் சொல்வார்கள். சங்க நூலாகிய ஐங்குறு நூற்றின் கடவுள் வணக்கப் பாடல் மாதிருக்கும் பாதியனையே பாடுகிறது.

"நீல மேனி வாலிழை பாகத்து
ஒருவன் இருதாள் நிழற்கீழ்
மூவகை உலகும் முகிழ்த்தன முறையே"

என்பது அந்தப் பாடல். 'நீலத் திருமேனியும் தூய ஆபரணங்களும் கொண்ட அம்பிகையை ஒரு பாதியிலே கொண்ட சிவபெருமானுடைய இரண்டு திருவடி நிழலின் கீழே, மேல், கீழ், நடு என்று அமைந்த மூன்று வகை உலகங்களும் ஒன்றன்பின் ஒன்றாக முறையே தோன்றின' என்பது இந்தப் பாடலின் பொருள்.

சக்தியின் தோற்றம் இல்லாவிட்டால் சிவம் தொழிற்படாது. சக்தி தோற்றியவுடன் படைப்பு முதலிய தொழில்கள் தொடங்குகின்றன. முதலில் பாதியாக ஒட்டித் தோன்றிய அன்னை பின்பு தனியாகவே பிரிந்து இணைந்து நிற்கிறாள். ஒட்டித் தோன்றிய கோலமே பழையது என்று மணிவாசகர் பாடுகிறார்.

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ."

இங்கே அர்த்தநாரீசுவரக் கோலத்தைத் தொன்மைக் கோலம் என்கிறார்.

அபிராமிபட்டர் இப்போது ஒட்டியிணைந்த அர்த்தநாரீசுவரக் கோலத்தையும், ஒட்டாமல் தனியே இணைந்த கல்யாணசுந்தரக் கோலத்தையும் மனத்திலே தியானம் செய்கிறார்.

**வவ்விய பாகத்து இறைவரும் நீயும்**
**மகிழ்ந்திருக்கும்**
**செவ்வியும், உங்கள் திருமணக்**
**கோலமும் சிந்தையுள்ளே.**

மக்கள் முதலில் திருமணம் செய்துகொண்டு அப்பால் இணைவார்கள். இங்கே மாறுன முறையில் ஒரு நிகழ்ச்சி நிகழ்கிறது. முதலில் ஒன்றுக இருந்தவர்கள் பிறகு பாதி பாதியாகத் தோற்றினுர்கள். அப்போது வவ்விய பாகத்தையுடைய இறைவரும் அம்பிகையும் இணைந்த செவ்வியைக் காணுகிறேம். பின்னல் அவ்விருவரும் வேறு பிரிந்து திருமணம் செய்து கொள்கிருர்கள். இது உலகப் படைப்புக் காக எம்பெருமாட்டி செய்கிற நாடகம்.

ஒரு பெண்மணி கன்னியாக வீட்டுக்குள்ளே மறைந்து நின்ருள். பின்பு வீட்டு வாசலுக்கு வந்து தலையை மட்டும் காட்டினுள். கல்யாணம் ஆயிற்று. வெளியிலே கணவனுடன் வரலானுள். இதுபோலவே அம்பிகை சக்தனிடத்தில் சக்தியாக மறைந்து ஒன்றி நின்ருள். அப்பால் பாதி தன்னைக் காட்டிக் கொண்டாள். பிறகு வேருக நின்று அவனைக் கைப்பிடித்துக் குடும்ப நிர்வாகத்தை மேற் கொண்டாள்.

முதலில், 'வவ்விய பாகத்து இறைவரும் நீயும் மகிழ்ந் திருக்கும் செவ்வி'யைக் காட்ட வேண்டும் என்ருர். அப்பால், 'உங்கள் திருமணக் கோலம் என்முன் வர வேண்டும்', என்கிருர்.

அம்பிகையின் திருவடிப் போதைத் தம் உள்ளப் பொய்கையில் மலரச் செய்தவர் இந்த ஆசிரியர். நான் என்ற அகந்தையைப் போக்கியவர். அம்பிகையின் தியானம் உள்ள இடத்தில் அகந்தை இராது. அகந்தை உள்ள இடத்தில் அவள் அருள் ஒளி இராது.

''அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும்
தொழும்பர் உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே''

என்று குமரகுருபர முனிவர் பாடுவார். எத்தனைதான் முயன்ருலும் நான் என்னும் அகங்காரமும் எனது

என்னும் மமகாரமும் மக்கள் உள்ளத்திலிருந்து எளிதில் நீங்குவதில்லை.

> "யான்என தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்
> குயர்ந்த உலகம் புகும்."

என்ற குறளில், இந்த இரண்டும் அற்றவர்கள் முத்தி யின்பம் பெறுவார்கள் என்ற கருத்தைக் காண்கிறோம்.

நாம் இரவிலே போய்க் கதவைத் தட்டுகிறோம். "யார்?" என்று உள்ளே இருப்பவர்கள் கேட்டால், நாம் பெயரைச் சொல்லாமலே, "நான்" என்கிறோம். மறு படியும், "யார்?" என்று கேள்வி எழுந்தால், "நான்தான்" என்று அழுத்திச் சொல்கிறோம். அகங்காரமே நானாகவும் தானாகவும் வடிவெடுக்கிறது.

வேடிக்கையாக ஒரு கருத்தை இங்கே சொல்லலா மென்று எண்ணுகிறேன். நாம் உண்ணும் உணவில் குழம்பு என்றும் ரஸம் என்றும் இரண்டு வியஞ்சனங்கள் இருக்கின்றன. எல்லாம் சேர்ந்து குழம்பியது குழம்பு. குழம்பிற்கும் ரஸத்திற்கும் உள்ள முக்கியமான வேறுபாடு என்ன? குழம்பில் தான் இருக்கும்; ரஸத்தில் அது இல்லை. ஆன்மிக வாழ்விலும் இப்படி ஒன்று உண்டு. தான் இருந்தால் குழப்பம் அல்லது குழம்பு உண்டு; மனம் ஐயத்திலே சிக்கிக் குழம்பும். தான் இல்லாவிட்டால் ரஸம் தோன்றும்.

அகந்தை ஒழிந்தால் இன்பம் பெறலாம். அதை எப்படி ஒழிப்பது? தெய்வத்தைத் தியானம் செய்வதனால் அதனை ஒழிக்கலாம். அபிராமியின் திருவடியை எண்ணி எண்ணி இந்த அகந்தையினின்றும் நீங்கியவர் ஆசிரியர். அந்த அநுபவத்தைச் சொல்கிறார்.

**அவ்வியம் தீர்த்து என்னை ஆண்ட பொற்பாதமும்.**

"எனக்கு இருந்த அகந்தையைப் போக்கி என்னை ஆளாகக் கொண்ட பொலிவு பெற்ற திருவடி" என்று நினைக்கிறார்.

அம்பிகைக்கு ஆளான பிறகு துன்பமே இல்லாத இன்ப வாழ்வு உண்டாகிறது. மனம் நிர்மலமான பிறகு அகந்தை இல்லை; மமகாரம் இல்லை; கவலை இல்லை, ஆயினும் இந்த வாழ்வின் இறுதியிலே மரணம் என்ற பெரிய துன்பம் ஒன்று இருக்கிறதல்லவா? அது வரும்போது சிறிதும் கவலையின்றி இருக்க வேண்டும். அப்படி இருப்பவர்கள் ஜீவன் முக்தர்கள்.

இந்தப் பக்தர், "அம்மா, அந்த இறுதிக் காலத்தில் இப்போது என்னை ஆண்ட பாதம் வந்து காப்பாற்ற வேண்டும்" என்று இந்தப் பாட்டில் வேண்டிக்கொள்கிறார்.

"அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்"

என்று ஆழ்வாரும்,

"மாகத்தை முட்டி வரும்நெடுங் கூற்றன்வந் தாலென் முன்னே
தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்"

என்று அருணகிரிநாதரும், இப்படியே வேறு பலரும் இத்தகைய விண்ணப்பத்தைச் செய்திருக்கிறார்கள்.

"மிகவும் கொடியவனாகிய யமன் உயிரை உடம்பினின்றும் பிரிப்பதற்காக மரண காலத்தில் என்னைப் பற்ற வரும்போது நீ என்முன் பிரத்தியட்சமாக எழுந்தருளிக் காப்பாற்ற வேண்டும்" என்பது இவ்வாசிரியர் செய்து கொள்ளும் வேண்டுகோள்.

### வெவ்விய காலன் என்மேல் வரும்போது வெளிநிற்கவே!

'அர்த்தநாரீசுவரக் கோலத்தோடு வரவேண்டும்' என்று சொன்னவர், 'திருமணக் கோலத்தோடு வர

வேண்டும்' என்றார்; பிறகு, 'என்னையாண்ட பொற் பாதத்தோடு வரவேண்டும்' என்று சொல்லி முடித்தார்.

அவ்வியம் தீர்த்து என்னை ஆண்ட பொற்பாதமும்
ஆகி வந்து
வெவ்விய காலன் என்மேல் வரும்போது
வெளிநிற்கவே.

முதலில் அர்த்தநாரீசுவரத் திருவுருவத்தை நினைத் தார். அம்பிகையின் பக்தராகையால், ஒட்டி நின்ற அந்தக் கோலத்தின் ஒரு பாதி முழுமையாக வளர்ந்து நின்ற திருமணக்கோலத்தை நினைத்தார். அம்பிகையின் திருவுருவில் உள்ள பல அங்கங்களிலும் பக்தருக்குப் பற்றுக் கோடாக இருப்பது திருவடி. அது இப்போது அவ்வியம் தீர்த்து ஆண்டு கொண்டிருப்பது; ஆதலின் அதனோடு தொடர்புடைய அடியவர் அந்த அடியை இறுதியிலே சொன்னார்.

திருடன் வருவான் என்று அஞ்சிய ஒருவன் போலீஸ் அதிகாரியை உதவிக்கு அழைக்கிறான். "ஐயா, நீங்களும் உங்கள் சேவகனுமாக வாருங்கள். ரிவால்வரோடு வாருங்கள்'' என்று சொல்கிறார். ரிவால்வர்தான் திருடனை ஒறுக்க ஏற்ற கருவி. அதுபோல இவர் பாடுகிறார்.

காலனை ஓட்டுவதற்கு அம்பிகையின் திருவடிதான் தக்க துணை. திருக்கடவூர் காலசங்கார க்ஷேத்திரம். சிவபெருமானே காலனை உதைத்தார். அவர் தம் இடக்காலாலே காலனை உதைத்தார். அந்த வாம பாகம் யாருடையது? அம்பிகையினுடையது. நுட்பமாக ஆராய்ந்தால், காலனை உதைத்துக் காலபயத்தை நீக்கியது அம்பிகையின் திருவடியென்றே சொல்ல வேண்டும். ஆகவே காலனால் வரும் துன்பத்தைப் போக்க வேண்டும் என்று சொல்ல வரும்போது அந்தப் பொற்பாதத்தை இறுதியிலே சொல்லி வற்புறுத்தினார்.

அம்மையின் திருவடியையே பற்றுக்கோடாகக் கொண்டு ஆணவம் நீங்கி அன்பு செய்த ஆசிரியர், இந்த வாழ்க்கையின் இறுதியிலே காலபயத்தைப் போக்கவும் அது துணை செய்ய வேண்டும் என்று வேண்டுகிறார்.

வவ்விய பாகத்து இறைவரும் நீயும்
மகிழ்ந்திருக்கும்
செவ்வியும், உங்கள் திருமணக் கோலமும்,
சிந்தையுள்ளே
அவ்வியம் தீர்த்தென்னை ஆண்டபொற் பாதமும்
ஆகிவந்து
வெவ்விய காலன்என் மேல்வரும் போது
வெளிநிற்கவே.

*தாயே, நீ பற்றிக் கொண்ட வாமபாகத்தையுடைய சிவபெருமானும் நீயும் ஒன்றி மகிழ்ந்திருக்கும் நிலையில் உள்ள கோலமும், உங்கள் திருமணக் காட்சியைக் காட்டும் கோலமும், என் உள்ளத்திலே இருந்த அகந்தையைப் போக்கி ஆண்டு கொண்ட பொலிவு பெற்ற திருவடியு மாகி நீ எழுந்தருளி வந்து கொடுமையான காலன் உயி ரைக் கொள்ள என்னை நோக்கி வரும்போது கண்முன் தோன்றி அன்று அவனால் வரும் ஏதத்தைப் போக்கியருள வேண்டும்.*

[வவ்விய—தானே விரும்பி முயன்று பெற்ற. பாகம்—வாமபாகம். செவ்வி—அவசரம்; சமயம். அவ்வியம்—பொறாமை; இங்கே அகந்தையைக் குறித்தது. பொன்-பொலிவு; ஞானப் பொலிவைக் குறித்தது; எழிற் பொலிவு என்றும் கொள்ளலாம். என்மேல் வரும்போது-என்னைப் பற்றுவதற்கு ஆற்றலோடு வரும்போது. வெளி நிற்க-வெளிப்படையாக வந்து நிற்பாயாக. வெளிநிற்க என்றாலும், அப்படி நின்று காலனால் வரும் துன்பத்தை மாற்றவேண்டும் என்பதே கருத்து. ''அந்தப் பொல்லாத பயல் வருவான்; அப்போது சிறிதே தலையைக் காட்டி விட்டுப் போ'' என்று சொல்வது போன்றது இது.]

அம்பிகையின் சரணாரவிந்தங்களைப் பற்றிக்கொண்ட வர்களுக்கு யமபயம் இல்லை என்பது கருத்து,

இது அபிராமி அந்தாதியில் 18-ஆவது பாடல்.

# ஆனந்த வெள்ளம்

**கோ**யில்கள் நிரம்பிய தமிழ்நாட்டில், 'விக்கிரக ஆராதனை அவசியமா?' என்ற கேள்விக்கே இடம் இல்லை. ஊருக்குப் பொதுவான கோயில், வீதிக்குப் பொதுவான கோயில், வீட்டில் பூஜை அறை என்று வைத்துப் பல மூர்த்திகளைத் தொன்று தொட்டு வழிபட்டு வருகிறோம். 'அடையாளம், பெயர், உருவம் இல்லாத கடவுளுக்கு உருவம் அமைப்பது நியாயமா?' என்று இவற்றின் உண்மையைத் தெரியாதவர்கள் கேட்கக் கூடும்.

நாம் வழிபடும் ஆலயங்களும் விக்கிரங்களும், நாம் வாழ்கின்ற வீடும் நாம் எடுக்கும் உடம்பும் போன்றன அல்ல. வீடும் உடம்பும் மனிதனுக்குப் பயன்படுவன. அதுபோலக் கடவுளுக்காக ஆலயமும் விக்கிரகமும் உண்டாகவில்லை. கடவுளை வழிபட்டுப் பயன் அடையும் பக்தர்களுக்காகவே அவை ஏற்பட்டன.

எந்தப் பொருளையாவது மனத்தில் எண்ணவேண்டு மானால் அந்தப் பொருளுக்கு ஒரு பெயரும் உருவமும் இருக்க வேண்டும். நாமரூப நாட்டம் உடையது மனம். அவை இல்லாவிட்டால் மனம் பற்றாது. இறைவன் உலகிலுள்ள உயிர்களைக் காப்பாற்றியருள உருவம் எடுத்து வருகிறான். அவன் குணம் இல்லாதவன்: உருவம் இல்லாதவன். ஆயினும் வேண்டுமானால் உருவம் எடுத்துக்கொண்டு வருவான். அவன் எல்லாம் வல்லவன்; அகடித கடனா சாமர்த்தியம் உள்ளவன். ஆதலின் அடியார்களைக் காப்பாற்ற வேண்டி உருவம் எடுத்துக்கொள்ளும் ஆற்றல் படைத்தவனாக இருக்கிறான். அடியார்களுக்கு நன்மை செய்யவேண்டுமென்ற கருணை உள்ளவன்.

ஓர் ஏழைக்கு மற்ருேர் ஏழையினிடம் இரக்கம் பிறக்கிறது. அவனுக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும் என்று எண்ணுகிருன். எண்ணி என்ன பயன்? அவனுடைய கருணை மனத்தளவில் நின்றுவிட வேண்டியதுதான். அவனும் ஏழையாக இருப்பதுதான் அதற்குக் காரணம். பணக்காரனுக இருப்பவனுக்கு ஆயிரம் ரூபாய் அளிக்கும் சக்தி இருந்தாலும் கொடுக்க வேண்டும் என்ற இரக்கம் இல்லாவிட்டால் ஏழைக்குப் பயன் இல்லை. ஆகவே ஆற்றலும் வேண்டும்; இரக்கமும் வேண்டும். இறைவனிடம் இந்த இரண்டும் உள்ளன.

உயிர்க்கூட்டங்களின் மனமும் வாக்கும் இறைவனை அணுக முடியா. மனம் எண்ணவும் வாக்குப் பேசவும் வேண்டுமானுல் உருவமும் பெயரும் வேண்டும். மனமும் வாக்கும் அவனை அணுகா என்பது உண்மை. ஆனுல் அவன் ஆற்றலாலும் கருணையினுலும் மனத்தையும் வாக்கையும் அணுகுகிருன். அவனுடைய திருவருள் துணையினுல் அவன் திருவுருவத்தைக் கண்ட பெரியார்கள் தாம் கண்டதைப் பிறரும் தெரிந்து வழிபட விக்கிரகங்களிலும் ஓவியங்களிலும் உருவாக்கிக் காட்டச் செய்கிருர்கள்.

"அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவன்இறைவன் என்றுஎழுதிக் காட்டொ ணுதே"

என்று அப்பர் சுவாமிகள் கூறுவார்.

"அருட் கண்ணுல் நோக்காதார் அல்லாதாரே"
என்றும் அருளுவார்.

ஆகவே அருட்கண்ணினுல் இறைவன் தேசுத் திருவுருவத்தைத் தரிசித்து இன்புற்றவர்கள், நாமும் புறக் கண்ணுல் கண்டு வழிபட்டு இன்பம் அடையும்படி அந்த உருவத்தை அமைக்கச் செய்தார்கள். முதலில் அகத்தே கண்ட திவ்ய வடிவத்தைப் பிறகு புறத்தே வடிக்கச்

செய்தார்கள். நாம் அந்த வடிவத்தை முதலில் கண்ணால் கண்டு பிறகு மனத்திலே பதித்தால் முறுகிய பயிற்சியின் விளைவாக அந்தத் தேசுத்திருவுருவத்தை அகக்கண்ணி ஞல் தரிசிக்கும் பேறு நமக்கும் கிடைக்கும். அகக்கண்ணில் கண்டவர்கள் முகக்கண்ணுக்குக் காட்டினார்கள். இப் போது முகக்கண்ணில் கண்டவர்கள் பின்பு அகக்கண்ணில் காணும் நிலை பெற வேண்டும்.

ஆலயங்களிலுள்ள மூர்த்திகளைத் தரிசிக்கிறோம். மற்றக் காட்சிகளை மறந்து இறைவன் திருவுருவத்தையே கூர்ந்து கண்டு இன்புற வேண்டும். பல நாட்களாகப் பிரிந் திருந்த கணவனைக் கூட்டத்தில் கண்ட மனைவி மற்ற வர்கள்பால் பார்வையை ஓட்டாமல் அவனையே பார்ப்பது போல் பார்க்க வேண்டும். இந்த ஒருமைப்பாடு நமக்கு எளிதிலே கிடைக்காது. தீபாராதனை செய்யும்போது இறைவன் திருவுருவத்தைத் தரிசித்து நன்றாகப் படம் எடுத்துக் கொள்ள வேண்டும். பின்பு அந்த உரு வத்தை மனத்தில் பதிக்க வேண்டும். புறத்திலே கண் டதை அகத்திலே ஒரு கணம் நினைக்கலாம். நிலையாக அதை வைத்துப் பார்ப்பது எளிதில் முடியாது. ஆகவே இடைவிடாமல் புறத்தே கண்ட திருவுருவத்தை அகத்தே நிறுத்தி நிறுத்திப் பயில வேண்டும். இந்தத் தியானச் சிறப்பினால் உள்ளத்திலே புகுந்த அந்த வடிவம் உயிரோவியமாகவும் சுடருருவமாகவும் மாறும், சாமான்யமாக இருந்த அப்பளம் கொதிக்கும் எண் ணெயில் போட்டவுடன் விரிந்து வெளுத்துச் சுவை பெறுவது போல, புறத்தே கண்ட உருவத்தை உள்ளத்தே அன்புடன் வைத்துத் தியானம் செய்தால் அந்த உருவம் விரிந்து மலர்ந்து ஒளி வடிவமாக மாறும். அப்பால் இன்ப அநுபவம் தலைப்படும். விக்கிரக வழி பாட்டின் பயனே இந்த உண்முக அநுபவந்தான். இதற்கு முதற்படியே ஆலய வழிபாடு, பூஜை முதலியன. ஆகவே விக்கிரகத்தை வழிபட்டாலும், தானே பூஜைசெய்தாலும்

உண்முகத்தில் தியானம் செய்து பயிலவேண்டும். புறத்திலே வழிபாடு செய்யாமல் உள்ளே தியானம் செய்வது எளிதில் கைகூடாது. ஆதலால்தான் சரியை, கிரியை-யோகம் என்று படிப்படியாக வைத்திருக்கிறார்கள். பிறர் பூஜை செய்வதைப் பார்த்து உருகுவது சரியை; தானே பூஜை செய்வது கிரியை; உண்முகத்திலே தியானம் செய்வது யோகம். ஒன்றுக்கு ஒன்று படியாக இருப்பது.

கண்ணிலே கண்டதைக் கருத்திலே பதிந்து அகக் கண்ணிலே கண்டு மகிழும் அநுபவத்தைத் தருபவை ஆலய வழிபாடும் பூஜையும். இந்த உண்முக அநுபவத்தைப் பெற்றவர் அபிராமிபட்டர். கண்ணுற் கண்டபோது வேறு காட்சிகள் கண்ணிற் படுவதில்லை. வேறு காட்சிகளைக் கண்டால் ஒருமைப்பாடு சிதறிவிடும். ஒன்றையே கண்டு உண்முகக் காட்சியாக மாற்றும்போது, உள்ளத்தில் ஒருமைப்பாடு உண்டாகிறது. பல பல எண்ணங்களைக் கொண்டு அலைந்து கலங்கும் மனத்தில் இறைவியைத் தியானம் செய்து வந்தால் தெளிவு பிறக்கும். அப்போது உண்மை புலப்படும். தெளிவான ஞானம் மாறாமல் நிற்கும். அதனால் குழப்பமும் கவலையும் நீங்கி இன்ப வெள்ளத்தில் மிதக்கலாம். மனம் முழுவதும் அம்பிகையின் சோதி வடிவமே நிறைந்திருக்கும்போது வேறு உணர்ச்சி புகுவதற்கு இடம் இல்லையல்லவா?

இத்தகைய அநுபவத்தை ஆசிரியர் சொல்லுகிறார்.

**வெளிநின்ற நின் திரு மேனியைப் பார்த்து**
**என் விழியும் நெஞ்சும்**
**களிநின்ற வெள்ளம் கரைகண்டதில்லை.**

**அபிராமி அம்பிகையின் திருவுருவம் வெளிப்படையாக நாமும் தரிசிக்கும் வகையில் திருக்கோயிலில் ஒளிர்கிறது. அம்பிகையையே நேரில் கண்டாற்போன்ற**

களிப்பு உண்மையான பக்தர்களுக்கு அபிராமியைத் தரிசிக்கும்போது உண்டாகிறது. அவர்களுடைய கண்கள் இன்புறுகின்றன. இந்த அளவோடு அவர்கள் நிற்ப தில்லை. அம்பிகையை அப்படியே உள்ளே விழுங்கு கிறார்கள்; கண்ணால்தான். கருத்திலே அம்பிகையின் திருமேனி சோதி விட்டுச் சுடர்கிறது. புறத்தே கண்ட காட்சிக்கும் அதற்கும் எத்தனை வேறுபாடு! ஓர் அழகிய பெண்ணின் போட்டோவை முதலில் காண்கிறோம். பிறகு அவளையே பார்க்கிறோம், படத்தில் ஓரளவு கவர்ச்சி இருந்தாலும் நேரில் பார்க்கும்போது உண் டாகும் இன்பத்துக்கு ஈடாகுமா? அவ்வாறே புறத்தே பார்த்துப்பெற்ற இன்பத்திலும் அகத்தே பார்த்த இன்பம் கங்கு கரையின்றிப் பெருகுகிறது. வெளியே நின்ற அம்பிகையின் திருமேனியைப் பார்த்து விழியிலே களி நின்றது; இன்பம் தோன்றி நிலையாக இருந்தது. பின்பு விழியிலே கண்டதை நெஞ்சிலே நிறுத்திப் பார்க்கும் போது அந்த ஆனந்த வெள்ளத்துக்குக் கரையே காண முடியவில்லையாம். விழி திருமேனியைப் பார்த்துக் களி கொண்டதோடு நின்றிருந்தால் இந்த அநுபவம் உண்டாகாது. நெஞ்சும் அந்தத் திருமேனியைக் கண்டத னால்தான் கரைகாணாக் களிவெள்ளம் பொங்கியது.

இதன் பயன் என்ன? அந்த நெஞ்சம் ஒரே இன்ப வெள்ளமாக வேறு ஒன்றுக்கும் இடம் கொடாமல் இருக் கிறது. இப்போது கலக்கம் இல்லை; அணுவளவும் அழுக் கில்லை. வெறும் கண்ணாடியைப் பார்த்தால் அதன் உருவம் தெரியும். கீழே ஓர் அழகிய படத்தை வைத்து மேலே அந்தக் கண்ணாடியை வைத்தால் கண்ணாடியின் உருவமே நம் கண்ணில் புலப்படுகிறதில்லை; படந்தான் தெரிகிறது. கண்ணாடியில் அழுக்கு இருந்தால் அந்தப் படத்தோடு அதுவும் தெரியும். படம் தெளிவாகத் தெரி கிறதென்றால் கண்ணாடியில் அழுக்கே இல்லை, தெளிவாக இருக்கிறது என்று கொள்ள வேண்டும். அதுபோல

நெஞ்சில் தேவியின் திருவுருவம் தெளிவாகத் தெரிகின்ற அநுபவம் இருந்தால் அந்த நெஞ்சில் அழுக்கில்லாத தெளிவு இருக்கிறது என்றே கொள்ள வேண்டும்.

கருத்தினுள்ளே தெளிகின்ற ஞானம் திகழ்கின்றது

என்கிறார் ஆசிரியர். கண்ணிலே அபிராமியின் அழகுத் திருமேனியைப் பார்த்துக் களிகொண்டார். அப்பால் கருத்திலே பார்த்துக் கரைகாணா ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார். அப்போது கருத்தானது, தெளிவான ஞானம் நிரம்பியதாயிற்று.

இந்த அநுபவம் எப்படி வந்தது? எல்லாம் எம்பெருமாட்டியின் திருவருளால்தான் உண்டாயின. அவள் இந்தக் குழந்தையின் உள்ளத்தில் நம்மைத் தரிசிக்கச் செய்ய வேண்டும் என்று திருவுள்ளம் கொண்டாள். கண்ணிலே காணும் காட்சியோடு நின்றிருந்தால் இந்த அநுபவம் வந்திராது. அதற்குமேல் உண்முகக் காட்சி பெற்றார். தெளிந்த ஞானம் பெற்றார். இவ்வளவும் அம்பிகையின் அருளால்விளைந்தவை. இந்தஅநுபவமே முடிவான பேரின்ப அநுபவமன்று. இன்னும் அம்பிகை மேலான அநுபவங்களைத் தருபவள். 'இந்த அளவுவரைக்கும் என்னை இழுத்துவந்து ஆனந்த வெள்ளத்தில் அமிழ்த்திய பிராட்டி இன்னும் என்ன என்ன பெருவாழ்வை வழங்கத் திருவுள்ளம் கொண்டிருக்கிறாளோ!' என்று அதிசயத்தோடு எண்ணிப் பார்க்கிறார்.

கருத்தினுள்ளே தெளிகின்ற ஞானம் திகழ்கின்றது;
என்ன திருவுள்ளமோ!

தம் அநுபவ அதிசயத்திலே நின்று பாராட்டியவர் அம்பிகையைப் பற்றிச் சொல்கிறார் கரசரணாதி

அவயவங்களையுடைய வடிவத்திலும், ஸ்ரீசக்கரம் முதலிய யந்திரங்களிலும், மந்திரங்களிலும் அவள் உறைந்து அன்பர்களுக்கு அருள் செய்கிறாள். அம்பிகையின் அன்பர்கள் சக்கரபூஜை செய்யும் பழக்கமுள்ளவர்கள், அம்பிகையின் பல பல நிலைகளுக்கு ஏற்றபடி பல பல யந்திரங்கள் உண்டு. அவற்றில் ஒன்று நவகோண சக்கரம், "வீற்றிருப்பாள் நவ கோணத்திலே" என்று வராகி மாலை பாடுகிறது. அபிராமி பட்டர் இந்தச் சக்கரத்தைக் குறிக்கிறார். தேஜோமயமான ஒன்பது கோணங்களுடைய சக்கரத்தில் ஆவாகனம் பண்ணி வழிபடுபவர்களுக்கு நலம் வழங்குபவள் எம்பெருமாட்டி.

**ஒளி நின்ற கோணங்கள் ஒன்பதும் மேவி உறைபவளே.**

ஸ்ரீ சக்கரத்தில் உள்ள ஒன்பது ஆவரணங்களையே ஒன்பது கோணமாகக் கொண்டு, ஒவ்வோர் ஆவரணமாகிய சக்கரத்திலும் இலங்குபவள் தேவி. இங்கே கோணம் என்பது ஆகுபெயராகக் கோணங்களையுடைய சக்கரத்தைக்குறித்த தாகக் கொள்ள வேண்டும்.

சகுண உபாசனையினால் தியானம் முறுகிவரும் என்பதை அறிந்த பெரியவர்கள் காட்டிய வழிகளில் உருவ வழிபாடும் யந்திர பூஜையும் முக்கியமானவை. அந்த இரண்டிலும் ஈடுபட்டவர் அபிராமிபட்டர். ஆதலின் இங்கே அந்த இரண்டையும் சொன்னார்.

**வெளிநின்ற நின்திரு மேனியைப்**
**பார்த்துஎன் விழியும்நெஞ்சும்**
**களிநின்ற வெள்ளம் கரைகண்ட**
**தில்லை; கருத்தினுள்ளே**
**தெளிகின்ற ஞானம் திகழ்கின்றது:**
**என்ன திருவுளமோ?**
**ஒளிநின்ற கோணங்கள் ஒன்பதும்**
**மேவி உறைபவளே!**

[ஒளி நிலையாக நிற்கும் நவகோண சக்கரத்தை விரும்பி அதில் தங்கும் அபிராமியே, புறத்திலே யாவரும் காண எழுந்தருளிய நின்னுடைய அழகிய திருக்கோலத்தைப் புறத்தும் அகத்தும் தரிசித்து, அதனால் அடியேனுடைய கண்களிலும் நெஞ்சிலும் நிலைத்து நின்ற ஆனந்த வெள்ளத்துக்குக் கரைகாண முடியவில்லை. அடியேன் உள்ளத்தில் தெளிந்து நின்ற மெய்ஞ்ஞானம் விளங்குகின்றது; இன்னும் என்ன என்ன அநுபவத்தை அடியேனுக்கு வழங்கவேண்டுமென்பது உன்னுடைய திருவுள்ளமோ!

வெளி—புறம். விழி புறத்தில் வடிவத்தையும், நெஞ்சு அகத்தில் தேசுருவத்தையும் கண்டன. தெளிநின்ற—தெளிந்து நின்ற, தெளிவாக நின்ற.]

அம்பிகையைப் புறத்தே தரிசித்து அகத்தே தியானித்தால் மிக்க இன்பம் உண்டாகும் என்பது இதன் கருத்து.

இது அபிராமி அந்தாதியில் 19–ஆவது பாடல்.

# அம்பிகையின் திருக்கோயில்கள்

அம்பிகை எங்கும் உறைகிருள். அவள் எங்கும் நிறைந்த பரிபூரணியாக இலங்குகிருள். வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு கோலம் கொண்டு சேவை சாதிக்கிருள். அம்பிகை கொள்ளும் திருவுருவங்களுக்குக் கணக்கு வழக்கே இல்லை. இன்னும் புதிய புதிய உருவங்களை எடுப்பாள். புராணங்களாலும், சாஸ்திரங்களாலும், ஆகமங்களாலும், வேதங்களாலும் அறியப்படும் அவளுடைய மூர்த்தங்கள் பல. அவ்வக்காலத்தில் பக்தர்களுக்கு அருள் செய்ய எடுத்துக் கொள்ளும் கோலங்கள் பல. எல்லாவற்றையும் தொகுத்துச் சொல்ல யாராலும் முடியாது.

அபிராமி பட்டர் அம்மையின் திருக்கோலங்களை எண்ணிப் பார்க்கிருர். ஏதாவது ஒரு வகைப்படுத்திப் பார்க்கலாம் என்று தோன்றுகிறது. இடங்களை வகைப் படுத்தி, ''இன்ன இன்ன இடங்களில் நீ எழுந்தருளியிருக்கிருய்'' என்று சொல்ல விரும்புகிருர். அவள் உள்ள இடங்கள் எல்லாவற்றையும் சொல்லி முடிக்கத்தான் இயலுமா? ஆதலின் சிலவற்றை எடுத்துச் சொல்ல விரும்பினுர்; சொல்ல முயன்ருர்; இதுவோ, அதுவோ என்று வினவாக வைத்துச் சொல்லலானுர்.

அம்மை என்று நினைத்தவுடன் அப்பனுடைய நினைவும் உடன் வருகிறது. மற்ற அம்மையப்பர்களைப் போலவா இவர்கள் இருக்கிருர்கள்? ஏதோ சம்பிரதாயத்துக்கு, ''உடம்பு இரண்டேயன்றி உயிர் ஒன்றுதான்'' என்று சொல்வார்கள். ஆனுல் உலக பிதாவும் மாதாவுமாகிய இவர்களுக்கு உடம்புகூட ஒன்றுதான்.

"ஒன்றே உடம்பு அங்கு இடும்பங்கு இரண்டே" என்று குமரகுருபரர் பாடுகிறார். இப்படி அம்மையும் அப்பனும் ஒட்டி இருக்கும் திருக்கோலம் அர்த்தநாரீசுவர மூர்த்தம். அதனைச் சிவபெருமானுடைய திருக்கோலங்களில் ஒன்றாகக் கொள்வது அப்பனைப் போற்றும் பிள்ளைகளின் மரபு. ஆனால் அம்மையைப் போற்றுகிறவர்கள் அது அம்பிகையின் திருக்கோலம் என்பார்கள். இரண்டுக்கும் வேறுபாடு என்ன? "சிவபெருமான் தம் வாமபாகத்தில் அம்பிகையைக் கொண்டிருக்கிறார்; அதனால் அர்த்தநாரீசுவரர் என்ற திருநாமம் கொள்கிறார்" என்பது சிவனடியார் சொல்லும் முறை. அம்மையின் அடியார்கள், அவளே தன் வலப்பாகத்தில் சிவபெருமானை வைத்திருக்கிறாள் என்று சொல்வார்கள், அதனால் அன்னையை அர்த்தேசுவர நாரி என்று புகழலாம் என்று தோன்றுகிறது.

அர்த்தநாரீசுவரரானாலும், அர்த்தேசுவர நாரியானாலும் கோலம் ஒன்றுதான். வலப்பக்கத்திலிருந்து பார்க்கிறவர்களுக்கு அர்த்தநாரீசுவரராகவும், இடப்பக்கத்திலிருந்து சேவிப்பவர்களுக்கு அர்த்தேசுவர நாரியாகவும் காட்சியளிப்பாள் போலும்!

இந்தத் திருக்கோலம் மிகப் பழைய வடிவம் என்று நூல்கள் கூறுகின்றன. சங்க நூலாகிய ஐங்குறுநூற்றில் எல்லா உலகமும் தோன்றுவதற்குக் காரணமான மூர்த்தி மாதிருக்கும் பாதியனே என்று ஒரு பாட்டு வருகிறது.

இந்தக் கோலத்தை மாணிக்கவாசகர் **'தொன்மைக் கோலம்'** என்கிறார்.

அபிராமிபட்டர் முதலில் அந்தப் பழைய கோலத்தைத் தியானிக்கிறார். "எம்பெருமாட்டியே, நீ எழுந்

தருளியிருக்கிற புனிதமான திருக்கோயில் நின்னுடைய பதியின் ஒருபக்கமோ?'' என்று கேட்கிறார்.

**உறைகின்ற நின் திருக்கோயில்**
**நின் கேள்வர் ஒரு பக்கமோ?**

வாமபாகத்தை வவ்வியவளாதலின், அந்தப் பக்கத்தையே எண்ணுகிறார். ''ஒரு பக்கமாய பரம்பரன் தேவி'' (245) என்பது **தக்கயாகப்பரணி.** அம்பிகைக்கு **ஸ்ரீகண்டார்த்த சரீரிணி** என்ற திருநாமம் இருப்பதை **லலிதா சகசிரநாமத்திற்** காணலாம்.

அபௌருஷேயமென்றும் அநாதியென்றும் வேதத்தைச் சொல்வார்கள். அது மிக மிகப் பழமையான நூல்; அம்பிகையைப்பற்றி முதல் முதலாகத் தெரிவிக்கும் நூல் அதுதான். பிறகு அதிலிருந்து பல நூல்கள் விரிந்தன. அம்பிகை வேதத்தை அருளியவள்; வேதவடிவாக இருப்பவள்; வேதத்தின் பொருளாக விளங்குபவள்; வேதத்தின் தொடக்கமாகிய, அடியாகிய, ஓங்காரத்தில் இருப்பவள்; ஓங்காரம் என்னும் கூட்டில் இருக்கும் கிளியாக அவளைச் சொல்வார்கள்; ஆதலின் அடுத்தபடி,

**அறைகின்ற நான்மறையின் அடியோ?**

என்றார்.

வேதத்தின் சாரமாகவும் முடியாகவும் இருப்பவை உபநிஷத்துக்கள். அவற்றை வேதாந்தம் என்று சொல்வார்கள். ஞானபாகமாக விளங்கும் அப்பகுதியில் அம்பிகை இருக்கிறாளாம். அவள் இருந்தால்தானே ஞானம் ஒளிரும்?

**அறைகின்ற நான்மறையின் அடியோ? முடியோ?**

அம்பிகை வேதத்தின் ஆதியாகவும் அந்தமுமாக நிற்கிறாள் என்று முன்பு பாடினார்.

"துணையும் தொழும் தெய்வமும் பெற்ற தாயும்
சுருதிகளின்
பணையும் கொழுந்தும் பதிகொண்ட வேரும்"

என்று முன்பு வந்ததை நாம் பார்த்தோம்.

"மாசுணமோ மறைத்தலையோ மயானமோ வாக்கிறந்த
தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி"

என்று அஞ்ஞவதைப் பரணியும்,

"போதத்தின் வழிநின்முர் புந்தியோ புறங்காடோ
வேதத்தின் மத்தகமோ விடவரவோ மெல்லமளி"

என்று பாசவதைப் பரணியும் தேவி துயிலும் பாயலாக மறையின் தலையைக் கூறுகின்றன.

இனி நான்காவது இடத்தைச் சொல்கிருர். அம்பிகை சந்திரமண்டலத்தின் நடுவிலேயிருந்து அமுத ஊற்றைப் பொங்கச் செய்கிருள் "மதிமண்டலத் தமுதமயமாய் அம்மை தோன்றுகின்றதும்" என்று மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழில் குமரகுருபரர் பாடுகிருர். 'சந்த்ர மண்டல மத்யகா' என்பது லலிதா சகசிரநாமம். அதைச் சொல்கிருர்.

அமுதம் நிறைகின்ற வெண் திங்களோ?

சந்திரனை அமுத கிரணன் என்று சொல்வார்கள். அம்பிகை அங்கே எழுந்தருளியிருப்பதனுல் அவன் அமுதம் நிறைந்தவனுனன்.

அடுத்தபடி,

கஞ்சமோ?

என்கிருர். அம்பிகை தாமரையில் வீற்றிருக்கிருள். அம்பிகை வெவ்வேறு வகையான கஞ்சங்களில் வெவ்வேறு வடிவத்தோடு வீற்றிருக்கிருள். ஆறு ஆதாரங்களிலும் ஆறு வேறு கமலங்கள் உள்ளன. அவற்றில் தேவி

வெவ்வேறு நிலையில் தன் அம்ச மூர்த்திகளை எழுந்தருளச் செய்திருக்கிறாள்.

மூலாதாரத்தில் உள்ள கமலம் நான்கு இதழ்களை உடையது. அந்தக் கஞ்சமலரில் அம்பிகை வீற்றிருக்கிறாள். 'மூலாதாராம்புஜாரூடா' என்று லலிதா சகசிர நாமம் இதைக்குறிக்கிறது. அங்கே ஐந்து திருமுகங்களோடு வீற்றிருக்கிறாள். அப்படியே ஆறு இதழ்களையுடைய ஸ்வாதிஷ்டான கமலத்தில் நான்கு முகங்களோடு விளங்குகிறாள். 'ஸ்வாதிஷ்டாநாம்புஜக்தா' என்ற திருநாமம் தேவிக்கு உண்டு. பத்து இதழ்களை உடைய மணிபூரக கமலத்தில் மூன்று முகங்களுடன் இலங்குகிறாள். 'மணிபூராப்ஜ நிலயா' என்பது லலிதா சகசிர நாமம். நான்காவது ஆதாரம் அநாஹதம். பன்னிரண்டு இதழ்களை உடைய இந்த மலரில் இரண்டு திருமுகங்களுடன் அம்பிகை கோயில் கொண்டிருக்கிறாள். அதனால் அவளுக்கு 'அநாஹதாப்ஜ நிலயா' என்ற திருநாமம் உண்டாயிற்று. அடுத்ததாகிய பதினாறு தளங்களையுடைய விசுத்தி என்னும் ஆதாரகமலத்தில் ஒரு முகமும் மூன்று கண்களும் உடையவளாக வீற்றிருக்கிறாள். அதனால், 'விசுத்தி சக்ரநிலயா' என்ற திருநாமம் அம்பிகைக்கு உரியதாக இருக்கிறது. கடைசி ஆதாரம் ஆக்ஞை. இரண்டு இதழ்களையுடைய இந்தக் கஞ்ச மலரில் ஆறுமுகங்களுடன் எம்பிராட்டி ஒளிர்கிறாள். அதனால் 'ஆக்ஞாசக்ராப்ஜ நிலயா' என்ற அருமைத் திருநாமத்தை உடையவளாக இருக்கிறாள்.

இந்த ஆறு ஆதாரங்களுக்கும் மேலே இருப்பது பிரம்ம ரந்திரம். அங்கே அம்பிகை முழுத்தேசுடன் ஆயிர இதழ்க் கமலத்தில் எழுந்தருளியிருக்கிறாள். அந்த மலருக்கு ஸஹஸ்ரார பத்மம் என்று பெயர். எத்திசையிலும் உள்ள பன்முகமுடையவளாகப் பொலிகிறாள் அங்கே. 'ஸஹஸ்ராராம்புஜாரூடா' என்றும், 'ஸஹஸ்ரதள பத்மஸ்த்தா'

என்றும் லலிதா சகசிர நாமம் அம்மையைப் போற்றுகிறது. பொதுவாக, 'பத்மாஸனு' என்றே ஒரு திருநாமம் தேவிக்கு உண்டு.

இந்தப்பாட்டில், 'வெண்திங்களோ, கஞ்சமோ' என்று சேர்ந்து வருவதனுல் வெண்மையைக் கஞ்சத்திற்கும் கூட்டி, 'வெண்கஞ்சமோ' என்றும் கொள்ளலாம். அம்பிகை வெள்ளைத் தாமரையில் கலைமகளாகவும் இருந்து கல்விக்குத் தெய்வமாக விளங்குவதை எண்ணிச் சொல்லியது இது என்றும் சொல்லலாம். 'ஸரஸ்வதி' என்றே ஒரு திருநாமம் எம்பெருமாட்டிக்கு உண்டு.

அம்பிகையின் திருக்கோலங்களை ஒவ்வொன்முகச் சொல்லிக் கொண்டே வந்த அபிராமி பட்டர், அந்த அந்தக் கோலத்தை அவ்வப்போது தியானித்துக் கொண்டே பாடினுர். அவர் உள்ளம் உருகியது. வெவ்வேறு இடத்தில் வெவ்வேறு கோலத்தோடு இருப்பதாகத் தியானிக்கும்போது அந்த இடமும் அந்தக் கோலமும் அவருடைய உள்ளத்திலே இடம் கொள்கின்றன. அம்பிகை உறையும் இடங்களில் முக்கியமானது அன்பர் களின் உள்ளம் அல்லவா?

> ''அகந்தைக் கிழங்கை அகழ்ந்தெடுக்கும் தொழும்பர்
> உளக்கோயிற்கு ஏற்றும் விளக்கே''

என்பது மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ்.

இந்தப் பக்தருடைய நெஞ்சு நெகிழ்கிறது. ''உன்னைப் பற்றி நினைக்கவும், உன்னைத் தியானிக்கவும் எனக்கு ஒரு கருவியைக் கொடுத்திருக்கிறுயே! அந்த உள்ளமும் உன்னுடைய திருக்கோயில் தானே?'' என்று உருகினுர். உடனே,

என்றன் நெஞ்சகமோ?

என்று பாடினார், இறைவனுடைய வாம பாகம், வேதத்தின் அடி, அதன் முடி, சந்திரன், தாமரை என்று ஐந்து இடங்களைக் கூறி, ஆறாவதாகத் தம் நெஞ்சத்தைச் சொன்னவர் அதோடு நிறுத்த மனம் வரவில்லை. மனத்தை அணு என்று சொல்வார்கள். இத்தகைய சிறிய இடத்தில் இருப்பவள் என்பது அவளுடைய கருணையைக் காட்டும்; பெருமையைக் காட்டாது. இதற்கு முன் சொன்னவை யாவும் உயர்ந்த இடங்கள். கடைசியில் தாழ்ந்த இடத்திலா கொண்டு வந்து நிறுத்துவது என்று எண்ணினார் போலும்! ஏழாவதாக,

மறைகின்ற வாரிதியோ?

என்றார். அம்பிகை பாற்கடலினிடையே வைஷ்ணவி சக்தியாக இருக்கிறாள். பாற்கடலில் முன்பு தேவலோகப் பொருள்களெல்லாம் மறைந்து கிடந்தன. அதனால் அதனை, 'மறைகின்ற வாரிதி' என்றார். சுதா சமுத்திரத்தினிடையே அம்மை இருப்பதாகச் சொல்வார்கள். ஆதலின் 'வாரிதி' என்பது அந்த அமுதக் கடலைச் சொல்வதாகவும் கொள்ளலாம். 'ஸுதா ஸாகர மத்யஸ்தா' என்பது தேவியின் ஆயிர நாமங்களில் ஒன்று. அம்பிகை எழுந்தருளியிருக்கும் பிந்து ஸ்தானத்துக்கே ஸுதா ஸிந்து (அமுதக் கடல்) என்ற பெயர் உண்டு. அதையே குறித்ததாகவும் கொள்ளலாம்.

ஆக, ஏழு இடங்களைச் சொன்னார். இந்த ஏழு இடங்களில்தானா இருக்கிறாள்? அவள் இல்லாத இடமே இல்லை.

அவள், 'பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்த'மாக இருக்கிறாள், அவளுக்குப் 'பூர்ணா' என்றே ஒரு திருநாமம் இருக்கிறதே!

அவள், ஓரிடத்திலிருந்து ஓரிடத்துக்குப் போகாதவள்; அவள் எங்கும் இருப்பவளாதலின் இந்தச் சலனம் அவளுக்கு இல்லை. அப்படியே காலத்திலும் சலனம் இல்லாதவள்; அசலை.

அவள் நித்திய மங்கலை; எப்போதும் மங்கலம் குறையாமல் இருக்கிறவள். மங்களாக்ருதி, ஸுமங்கலி என்பவை அவளுடைய திவ்யத் திருநாமங்கள்.

எங்கும் நிறைந்த பூரணை, சலனம் இல்லாத அசலை, என்றும் மங்கலத்தோடிருக்கும் மங்கலை என்றஇந்த மூன்றையும் இணைத்துக் கடைசியில் அம்பிகையை விளிக்கிறார்.

பூரணாசல மங்கலையே!

பூரணமங்கலை, அசலமங்கலை என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். அசலமங்கலை என்பதற்கு 'மலைராஜனுக் கிருகண் மணியாய் உதித்துமலை வளர் காதலிப்பெண்' ணாகிய பார்வதி என்று பொருள் கொள்வதும் பொருந்தும்.

**உறைகின்ற நின்திருக் கோயில்நின்**
**கேள்வர் ஒருபக்கமோ?**
**அறைகின்ற நான்மறை யின்அடி**
**யோ?முடி யோ? அமுதம்**
**நிறைகின்ற வெண்திங்க ளோ?கஞ்ச**
**மோ?என்றன் நெஞ்சகமோ?**
**மறைகின்ற வாரிதி யோ?பூர**
**ணாசல மங்கலையே!**

[எங்கும் நிறைந்தவளாயும் தளர்ச்சியற்றவளாயும் நிறைந்த மங்கலம் உடையவளாயும் உள்ள அபிராமி அன்னையே, நீ எழுந்தருளியிருக்கின்ற நின்னுடைய அழகிய கோயில், நின் பிராண நாதராகிய சிவபிரானுடைய ஒரு பக்கமாகிய வாமபாகமோ? உன் புகழைச் சொல்கின்ற

நான்கு வேதங்களின் மூலமாகிய பிரணவமோ? அவற்றின் முடியாகிய உபநிஷத்துக்களோ? அமுதம் நிறைந்திருக்கும் வெண்மையான சந்திரனே? தாமரை மலரோ? அடியே னுடைய நெஞ்சாகிய இடமோ? எல்லாப் பொருளும் மறைவதற்கு இடமாகிய கடலோ?

அதுவோ இதுவோ என்று கேட்டாலும் அந்த இடங் களில் எல்லாம் இருக்கிறாய் என்பதுவே கருத்து.

திருக்கோயில், திரு—கண்டார் விரும்பும் தோற்றம்; தெய்வத்தன்மையும் ஆம். கேள்வர்—கணவர். அறை கின்ற—சொல்கின்ற. முரசு முழங்குவதுபோல முழங்குவ தாதலின் அறைகின்ற நான்மறை என்றார். நான்மறை யின் அடியோ என்று கூட்டிப் பொருள் கொள்க. பூரணம் என்பதை அருள் நிறைவு என்றும் கொள்ளலாம; குறைவிலா நிறைவான பொருள் என்பதும் பொருந்தும். அசலம்—சலனமற்றது; மலை,]

அம்பிகை இருக்கும் இடங்கள் இவை என்று கூறியது இந்தப் பாடல், இது அபிராமி அந்தாதியில் 20-ஆவது பாட்டு.

# வடிவும் வண்ணமும்

'**பூ**ரணசைல மங்கலையே!' என்று விளித்து நிறுத்திய வுடன் அம்பிகையின் மங்கலமான திருவுருவம் இந்தப் பேரன்பருடைய உள்ளத்தில் தோன்றியது. அப்படியே தியானத்தில் ஈடுபட்டார். எம்பெருமாட்டியின் திருவுரு வத்திலுள்ள அங்கங்களைக் கண்டு களித்தார். தாயாக நிற்கும் பிராட்டியினிடம் ஞான அமுதை நுகரும் பிள்ளை யாக நின்றார் அன்பர். குழந்தைக்கு அன்னையின் நகிலில் கண் போகும், அது பசித்திருப்பதனால். அப்படி ஞானதாக முடைய அன்பர் ஞான அமுது பெய்யும் தனங்களைத் தியானித்தார்.

அவள் மங்கலமுடையவள்; நித்திய சுமங்கலி; என்றும் மாறாத மங்கலத்தை உடைய பிராட்டி. என்றும் சாவா மூவாப் பேராளனாகிய சிவபெருமானை நாயகனாகப் பெற்றிருத்தலின் அவளுடைய மங்கலம் என்றும் மங்காமல் இலங்குவது, அதனால் 'மங்கலை' என்றார். 'மங்கலாக்ருதி' என்பது அம்பிகையின் திருநாமங்களில் ஒன்று; மங்கலமான வடிவுடையவள் என்பது பொருள். கும்பகோணத்தில் எழுந்தருளியிருக்கும் அன்னைக்கு மங்களாம்பிகை என்பது திருநாமம். ஸுமங்கலி என்பதும் அம்பிகையின் ஆயிர நாமங்களில் ஒன்று.

அவளுடைய நகில்கள் சிவந்த கலசத்தைப்போல உருண்டு திரண்டிருக்கின்றன. அகில லோகத்தையும் ஈன்றும் அவள் கன்னிகையாகவே இருத்தலின் அவளுடைய தனங்கள் வடிவு குன்றாமல் உள்ளன.

"பங்கயற்க ணரியபரம் பரனுருவே தனக்குரிய
படிவம் ஆகி
இங்குஅயற்கண் அகனுலகம் எண்ணிறந்த சராசரங்கள்
ஈன்றும் தாழாக்
கொங்கை அற்கண் மலர்க்கூந்தற் குமரி"

என்பது திருவிளையாடற் புராணம்.

இங்கே மங்கலை என்றதுபோல, "சங்கரனார் மனை மங்கலமாம் அவளே" (44) என்று பின்னே ஒரு பாடலில் சொல்வார். "மழுவாள்திரு நெடுமங்கல மகளே" (தக்கயாகப்பரணி, 321) என்பார் ஒட்டக்கூத்தர்.

'செங்கலசம் முலையாள்' என்று அன்னையைக் குழந்தை நினைப்பது போல நினைத்த அன்பருக்கு அம்மையின் மற்றொரு பண்பும் நினைவுக்கு வந்தது. அவள் அன்னையாக நிற்பதோடு பிறரையும் அன்னையாகக் கொண்டு தான் குழந்தையாகவும் தோன்றி விளையாடுபவள் என்று எண்ணினார். உடனே,

மலையாள்

என்றார். மலைக்கு மகளாக வந்தவள் அல்லவா? பர்வத ராஜனுடைய மகளாக அவதாரம் செய்தமையால் பார்வதி என்ற பெயரைப் பெற்றாள். "வரைராசனுக்கிருகண் மணியா யுதித்துமலை வளர்காதலிப்பெண் உமையே" என்று தாயுமானவர் பாராட்டுவார்.

மலையாள் என்பதற்கு மலையின்மேல் வாழ்பவள் என்றும் பொருள் கொள்ளலாம். பண்டாசுரனை அம்பிகை அழித்து வெற்றிகொண்ட பிறகு லலிதாம்பிகைக்கும் காமேசுவரருக்கும் ஏற்ற வகையில் திருக்கோயில்களை அமைக்க எண்ணினார்கள் தேவர்கள். தெய்வத்தச்சனாகிய விசுவகர்மாவையும், அவுணத் தச்சனாகிய மயனையும் அழைத்துப் பதினாறு ஸ்ரீநகரங்களைச் சமைக்கும்படி சொன்னார்கள். அந்தச் சிற்பியர் தலைவர் இருவரும் அப்படியே பதினாறு நகரங்களை

அமைத்தார்கள். அவற்றில் ஒன்பது மலைமேல் இருந்தன. ஏழு கடல்களில் இருந்தன. அந்த ஒன்பது மலைகளின்மேல் வாழ்பவளாதலின் 'மலையாள்' என்னும் பெயருடையவள் என்றும் கொள்ளலாம்.

மேரு, மலயாசலமாகிய பொதியில், விந்தமலை ஆகிய மலைகளில் அம்பிகை திருக்கோயில் கொண்டிருக்கிறாள். அதனால் ஸுமேருமத்யச்ருங்கஸ்த்தா, மேருநிலயா, விந்த்யாசல நிவாஸினி, மலயாசல வாஸினி என்ற திருநாமங்கள் அம்மைக்கு உண்டாயின.

குழந்தையாக நின்று பார்க்கும் ஆசிரியர் கண்ணால் பார்க்கிறார்; உடனே கருத்தால் எதையோ நினைக்கிறார். முலையாள் என்று உருவத்தை எண்ணியவர் மலையாள் என்று மலைமீது கருத்தைச் செலுத்தினார். மறுபடியும் திருவுருவத்தில் கண்ணைச் செலுத்தினார். இப்போது அம்மையின் திருக்கரங்களை அவர் தியானித்தார். அவள் கையில் வளைகளை அணிந்திருக்கிறாள். அவை துவளத் துவள அசைகின்றன. சங்கினால் ஆன அந்த வளைகளில் பல நிற மணிகளைப் பதித்து அழகு செய்திருக்கிறார்கள். அதனால் பல வண்ணங்களை வீசுகின்றன.

வருணச் சங்கு அலை செங்கை.

இப்படி உள்ள பெருமாட்டி மிகவும் நுட்பமான கலைகளின் உருவமாகவும் இருக்கிறாள். அவள் சகல கலைகளையும் தன் கலாபமாகத் தாங்கும் மயில் போல உலவுகிறாள்.

சகல கலா மயில்.

கலை அவள் உருவம்; கலைகள் அவளால் உண்டாக்கப்படுகின்றன; கலைகளையே அவள் தன் உரையாடலாகக் கொண்டிருக்கிறாள். அவள் சகலகலாவல்லியாக விளங்குகிறாள். சதுஷ்ஷஷ்டி கலாமயீ, கலாவதி, கலாலாபா, கலாத்மிகா, கலாநாதா, கலாநிதி, காவ்யகலா என்று

லலிதா சகசிரநாமத்தில் வரும் திருநாமங்களால் தேவிக்கும் கலைகளுக்கும் உள்ள தொடர்பு நன்கு விளங்கும்.

. கலா என்பது மயிலின் தோகைக்கும் பெயர். ஆதலின் அதனோடு சேர்த்து மயில் என்றார். "கலாமயிற் கூத்தயர் குளிர்புனம்" (மீனாட்சி பிள்ளைத் தமிழ்.)

இத்தகைய அன்னை சிவபெருமானுடைய திருமேனியில் ஒரு பக்கத்தை உரிமையோடும் பெற்று ஆளுகிறாள். அவர் தம் தலையில் கங்கையைத் தரித்திருந்தாலும் அதனால் கோபம் கொள்ளாமல் அவரிடத்தினின்றும் நீங்காமல் இருக்கிறாள்.

கங்கை எத்தகையது? "என்னைத் தாங்குவார் யார்!" என்ற அகந்தையோடு தாவி வந்தது; அலைகள் பொங்க ஆரவாரித்து வந்தது. அப்படி வந்தாலும் இறைவருடைய சடையிலே அது அடங்கித் தங்கியது.

"விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும்—பெண்ணை
இடத்திலே வைத்தஇறைவர்தம் சடாம
குடத்திலே கங்கையடங் கும்"

என்று பாடினார் காளமேகப் புலவர். தாவி வந்த கங்கையினிடம் பொங்கிய அலைகளெல்லாம் இறைவருடைய புரிந்த சடை ஒன்றில் அமைந்து, அலையாமல் பொங்காமல் தங்கி விட்டன. அதனால்,

**தாவு கங்கை பொங்கு அலை**
**தங்கும் புரிசடையோன்**

என்கிறார் அபிராமிபட்டர். அத்தகைய இறைவருடைய ஒரு பக்கத்தில் இருந்து ஆளுகின்றாளாம் தேவி.

**தாவுகங்கை**
**பொங்கலை தங்கும் புரிசடையோன்புடை**
**ஆளுடையாள்.**

இதுவரைக்கும் அம்பிகையின் உருவத்தையும் நிலையையும் சொன்ன அன்பர் அவள் வண்ணத்தைச் சொல்ல வருகிறார். வடிவைச் சொன்னவர் வண்ணத்தைச் சொல்கிறார்.

வண்ணங்கள் ஐந்து. மஞ்சள், நீலம், சிவப்பு, வெள்ளை, பச்சை என்பன அவை. அம்பிகை வெவ்வேறு கோலங்களில் இந்த ஐந்து வேறு வண்ணங்களையும் உடையவளாக ஒளிர்கிறாள்.

பிங்கலை நீலி செய்யாள் வெளியாள்
பசும் பெண்கொடியே.

**பிங்கலை** என்பது மஞ்சள் அல்லது பொன்னிற முடையவள் என்பதைக் குறிக்கும், "ஆயி சுந்தரி நீலி பிங்கலை","குமாரி பிங்கலை" என்று **திருப்புகழில்** பாடுவார் அருணகிரிநாதர். ஸ்வாதிஷ்டான சக்கரத்தில் ஆறிதழ்த் தாமரையில் எழுந்தருளியிருக்கும் காகினி என்னும் அம்பிகையின் திருமேனி பொன்னிறமுடையது. '**பீதவர்ணா**' என்று **லலிதா சகசிரநாமம்** இந்தத் திருக்கோலத்தைக் குறிக்கிறது.

**நீலி**—நீல நிறமுடையவள்; நீலமும் கறுப்பும் ஒன்றாகக் கொள்வர். கருநிறக் காளியாக அம்பிகை விளங்குகிறாள்: நீலி என்றது காளியை. "ஆயி சுந்தரி நீலி" என்பர் அருணகிரிநாதர். "மகிடன் தலைமேல் அந்தரி நீலி" (8) என்று முன்பு இவ்வாசிரியரே பாடியுள்ளார்.

மூலாதார சக்கரத்தில் ஐந்து முகத்தோடு நான்கு இதழ்களையுடைய தாமரையில் சாகினி என்ற திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கும் அம்பிகை நீலவண்ணத் திருமேனியுடையவள்: அந்தக் கோலத்தை நினைந்து பாராட்டியதாகவும் கொள்ளலாம்.

**செய்யாள்:** லலிதாம்பிகையின் நிறம் செம்மை. இதை முதற்பாட்டிலே, "உதிக்கின்ற செங்கதிர்" முதலிய உவமைகளால் புலப்படுத்தினர்.

மணிபூரக சக்கரத்தில் பத்து இதழையுடைய தாமரையில் மூன்று முகங்களுடன் எழுந்தருளியிருக்கும் 'லாகினி' யென்னும் கோலத்தில் அம்பிகை செந்நிறமுடையவளாக இருப்பாள். அவளை 'ரக்தவர்ணு' என்று **லலிதா சகசிரநாமம்** போற்றுகிறது; அந்தக் கோலத்தை எண்ணியதாகவும் கொள்ளலாம்.

'செய்யாள்' என்பது திருமகளுக்கு ஒரு பெயர். "செய்யவள் தவ்வையைக் காட்டி விடும்" என்பது குறள். அம்பிகையே திருமகளாக இருந்து விளங்குகிருள் என்று சொல்வார்கள்; ஆதலின் இங்கே செய்யாள் என்பதற்குத் திருமகளாக நின்று நலம் செய்பவள் என்றும் பொருள் கொள்ளலாம்; "மறைகின்ற வாரிதியோ" (20) என்று முன்பாட்டில் சொன்னதையும் காண்க.

**வெளியாள்**—வெள்ளை நிறம் உடையவள். ஆக்ஞா சக்கரத்தில் இரண்டிதழ்க் கமலத்தில் ஆறு முகங்களுடன் எழுந்தருளிய அம்பிகைக்கு ஹாகினீ என்று பெயர். அப்பெருமாட்டியின் நிறம் வெள்ளை. 'சுக்லவர்ணு' என்று **லலிதா சகசிரநாமம்** பாராட்டும்.

கலைமகள் வெண்மையான நிறம் உடையவள்.

"வெள்ளை உருப்பளிங்கு போல்வாள்"

என்று கம்பர் பாடியிருக்கிருர். அம்பிகையே கலைமகளாகவும் இருத்தலின், வெளியாள் என்பதற்கு வெள்ளை நிறத்துடன் நாமகளாக இருக்கும் பிராட்டி என்றும் பொருள் கொள்ளலாம்.

**பசும்பெண் கொடி:** பார்வதியின் நிறம் பச்சை. ஆதலின் மரகதவல்லி என்று தேவியைச் சொல்வது வழக்கம்.

“அரவின் அமளியின் அகில பணமணி
அடைய மரகதம் ஆனஓர்
இரவி வெயில்இலன்; மதியும் நிலவிலன்;
இறைவி ஒளிவெளி எங்குமே”*

என்று தேவியின் மரகதச் சோதியைத் தக்கயாகப் பரணி (156) வருணிக்கிறது.

“பச்சை எறிக்கும் ப்ரைபயன்”, “தெரிவரும் சுத்தப் பச்சை நிறப்பெண்” என்பன திருப்புகழ்.

பச்சை நிறமுடைமையின் அம்பிகைக்குச் சியாமளா என்ற திருநாமம் உண்டாயிற்று.

அநாஹத சக்கரத்தில் பன்னிரண்டு இதழ்களையுடைய தாமரையில் இரண்டு முகங்களுடன் இருக்கும் ராகிணியின் நிறம் பச்சை; ‘ச்யாமாபா’ என்பது அவளுக்குரிய நிறத்தைப் புலப்படுத்தும் திருநாமம். அந்தக் கோலத்தை எண்ணியது என்றும் சொல்லலாம்.

பச்சை நிறத்தைச் சொன்னமையின் அந்நிறமுடைய கொடியைப் போன்றவள் என்று கூறினார்.

மங்கலம் மங்காதவளாகவும், செங்கலசம் போன்ற நகிலும் வளைகளையுடைய கைகளும் உடையவளாகவும், மலைமகளாகவும், சகல கலா மயிலாகவும், சிவபெருமானுடைய ஒரு பக்கத்தை ஆளுபவளாகவும் இருக்கும் தேவி, பிங்கலை முதலிய ஐந்து வண்ணமுடையவளாக விளங்குகிறாள் என்று வாக்கிய முடிவு செய்து கொள்ள வேண்டும்.

---

* ‘ஈசுவரியுடைய திருமேனிச் சோதிப் பசுமையாலே, தான் எழுந்தருளியிருந்த நாகராசா படம் ஆயிரத்திலும் உள்ளவான ஆயிரம் விற்பிடி மாணிக்கங்களும் தம் சிவப்புக் கெட்டு மரகத ரத்தினமாயின. இனி மற்றுரைப்பது என்? ஒப்பற்ற ஆதித்தனும் சோதியிலன்; சந்திரனும் அவ்வண்ணமே; உலகம் அடங்கத் தேவியுடைய சோதியே எங்கும் பிரகாசித்தது’ என்பது இதன் பழைய உரை.

**மங்கலை, செங்கல சம்முலை**
**யாள், மலை யாள், வருணச்**
**சங்கலை செங்கைச் சகல**
**கலாமயில், தாவுகங்கை**
**பொங்கலை தங்கு புரிசடை**
**யோன்புடை ஆளுடையாள்,**
**பிங்கலை நீலிசெய் யாள்வெளி**
**யாள்பசும் பெண்கொடியே!**

[மங்கல வடிவினளும், சிவந்த கலசம்போலப் பருத்த தனங்களை உடையவளும், மலைமகளும், பல நிற வளைகள் அசையும் சிவந்த கையைஉடையவளும், எல்லாக் கலைக்கும் நாயகியான மயில் போன்றவளும், பாய்ந்த கங்கையில் பொங்கிய அலைகள் அமைதியாகத் தங்கும் புரிந்த சடையை உடைய பரமசிவனது ஒரு பக்கத்தைத் தனக்கே உரியதாகக் கொண்டு ஆளும் உரிமை உடையவளுமாகிய அபிராமி, பொன்னிறம் உடையவள்; நீலவண்ணம் படைத்தவள்; செந்நிறமானவள்; வெண்மை நிறத்தினள்; பச்சைப் பெண் கொடி போன்றவள்.

செங்கலசம்முலையாள்: மகர ஒற்று, விரித்தல் விகாரம்; ஓசையை நோக்கி விரிந்தது.

வருணச் சங்கு-வருணன் தந்த சங்கு என்றும் சொல்லலாம்.

சடையோன் புடையாள், உடையாள் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்; சடையை உடையவனுடைய ஒரு பக்கத்தில் இருப்பவள், தலைவி என்று பொருள் கொள்ள வேண்டும். உடையாள் என்பது, ''ஸ்வாமிநி'' என்ற திருநாமத்துக்குச் சரியான மொழி பெயர்ப்பு]

அம்பிகையின் வடிவத்தையும் வண்ணத்தையும் தியானித்துப் பாடியது இந்தப் பாடல். இது அபிராமி அந்தாதியில் 21-ஆம் பாட்டு.

# பிறவா வரம்

அம்பிகையின் புகழிலே ஊறிக் கிடந்தது அபிராமி பட்டரின் நெஞ்சம். அவளுடைய வடிவையும் வண்ணத்தையும் தியானித்து அவர் பாடினர். இன்னும் அவருடைய வியப்பு மாறவில்லை. ''பசும் பெண் கொடியே'' என்று நிறுத்தினவர் அந்தக் கொடியை மறுபடியும் புகழத் தொடங்குகிருர்.

அவள் மென்மையே வடிவானவள். கோமளாங்கி, என்றும் லலிதா என்றும் திருநாமங்களைப் பெற்றவள்; ஆதலின் கொடி போன்றவள். எந்த அடையும் இன்றிக் கொடியே என்ருல் போதுமே என்று தோன்றுகிறது.

கொடியே!

என்ருர். ஆம், கொடி தளர்ந்து ஒசிந்து நிற்பதுபோலவே அம்பிகை நிற்பாள். அவள் உயிர்க்கூட்டங்களுக்கு இரங்கிக் கருணையினுல் நெகிழ்ந்து விளங்குபவள். பொதுவாகப் பெண்களை அம்புஜவல்லி, சண்பகவல்லி என்று கொடிகளின் பெயரை வைத்து அழைப்பது வழக்கம். எம்பெருமாட்டி இத்தகைய வல்லிகள் யாவரினும் சிறந்த கொடியாக இருக்கிறவள். ஆதலின் அவளுக்கு அடையே வேண்டாம்.

ஆயினும் மரபை ஒட்டி ஒரு நினைவு வந்தது. தண்மைக்கும் மென்மைக்கும் சிறந்தது வஞ்சிக்கொடி. அதைப் பெண்களுக்கு உவமை கூறுவது வழக்கம். அம்பிகை வஞ்சுளவல்லிபோல இருக்கிருள்; ஆதலின் அடுத்தபடி,

இளவஞ்சிக் கொம்பே!

என்ருர். கொடியின் ஒரு கிளையையும் கொம்பு என்று சொல்லலாம். திருவாசகத்தில்,

'கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித்
தாய்வஞ்சிக் கொம்பினையே''

என்று அம்பிகையை வஞ்சிக்கொம்பு என்று மாணிக்க வாசகர் கூறியிருக்கிருர். வஞ்சி யென்பது ஒரு மரத்துக்கும் பெயர். ஆதலின் அம்மரத்தில் பூவுடன் விளங்கும் கொம்பு போன்றவளே என்றும் பொருள் கொள்ளலாம்.

இவ்வாறு மென்மை மிக்கவளாக இருக்கும் அம்பிகை தன் பெருங்கருணையினுல் அடியவர்களை ஆண்டு கொள்கிருள். பக்தர்களும் ஞானிகளும் பக்குவத்திஞல் உயர்ந்து அவளுடைய பேரருளைப் பெறுகிருர்கள். ஆயினும் அவர்களைக் கேட்டால், "எனக்கு என்ன தகுதியிருக்கிறது? அம்பிகை தன் பெருங் கருணையினுல், ஒன்றுக்கும் பற்ருத அடியேனையும் ஆண்டு கொண்டாள்'' என்று கூறுவார்கள்.

''யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்கும் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள்வைத்தாய்க்கென் எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை''

என்று மாணிக்கவாசகர் கூறுவதைக் காண்க,

இந்தக் குரலிலே அபிராமி பட்டர் பாடுகிருர். 'பக்குவம் இல்லாத எனக்கு அருள் செய்தாள் எம்பெருமாட்டி. கனிமரம் பழுக்க வேண்டுமாஞல் அதற்குரிய காலம் உண்டு. பருவத்தால் அன்றிப் பழுப்பதில்லை,

அந்த மரங்கள். அது போலவே அன்னையும் அன்பர்களின் தகுதியை நோக்கி அவர்களுக்கு உரிய பக்குவம் வரும்போது தன் அருளாகிய கனியை நல்குவாள். இது அவள் இயல்பு. ஆனால் இது என்னளவில் அமையவில்லை. நான் பக்குவம் அடைந்த பிறகு அம்பிகையின் அருள் பெறலாம் என்று இருந்தால், அது இந்தப் பிறவியில் நடக்கும் காரியம் அன்று. இந்தப் பிறவியில் என்ன? இன்னும் பல பல பிறவிகள் எடுத்தாலும் எனக்கு இந்தப் பக்குவம் வருமா என்று ஐயப்படுகிறேன். அத்தகைய தாழ்ந்த நிலையில் இருந்த எனக்கு இந்த வஞ்சிக்கொம்பு பழுத்துக் கனியைத் தந்தது. இது பெரிய ஆச்சரியம் அல்லவா? ஆம்! இது உண்மையிலும் உண்மை. இதற்குக் காரணம் அபிராமியின் பெருங்கருணை தான். காலம் அல்லாத காலத்தில் பழுத்த கற்பகமரம் போன்றவள் இந்தத்தாய்.'

இப்படி யெல்லாம் எண்ணிப் பார்க்கிறார் இந்தப் பக்தர். அந்த எண்ணங்களின் சாரமாக வருகின்றன, சொற்கள்.

எனக்கு வம்பே பழுத்த படியே!

படி என்பது உருவம் அல்லது முறை. வம்பே பழுத்தல் என்பது காலம் அல்லாத காலத்தில் பழுப்பதைச் சொல்வது. கொடியென்றும் கொம்பென்றும் விளித்தார். கொம்பு என்பது பூங்கொம்பைக் குறிப்பது. பூ வந்தால் பிறகு காய் வந்து கனி வரவேண்டாமா? அந்தக் கொம்பு இதோ பழுத்துவிட்டது. ஆனால் பல காலம் காத்திருந்து பருவம் வரும்போது பழுக்க வேண்டிய அது விரைவிலே பழுத்துவிட்டது. இது பெரு வியப்பு அல்லவா? இவ்வாறே 'வம்பெனப்பழுத்த' பெருங் கருணையை, மாணிக்கவாசகரும் எண்ணி இன்புறுகிறார். அநுபூதிமான்களுக்கு இறையநுபவம் ஒன்று போலவே இருக்கும்.

"உம்பர்கட் கரசே, ஒழிவற நிறைந்த
யோகமே, ஊற்றையேன் தனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே"

என்பது திருவாசகம்.

பழுத்தபடியே—பழுத்த கனியின் உருவமே என்று பொருள் கொள்வது சிறப்பு.

**கொடியே, இளவஞ்சிக் கொம்பே,**
**எனக்கு வம்பே பழுத்த படியே?**

கொடி, கொம்பு, பழுத்த படி என்றெல்லாம் சொன்னவருக்கு மலரும் மணமும் நினைவுக்கு வந்தன. அம்பிகையை மணமாகச் சொன்னால் அதனைத் தாங்கும் மலர் எது? அவள் வேதத்தின் உட்பொருளாக இருக்கிறவள்; ஆதலின் வேதம் என்னும் மலரின் பரிமளமாக இருப்பதாகச் சொல்லலாம் அல்லவா?

**மறையின் பரிமளமே!**

இவ்வாறு விளங்கும் இறைவி தன் கருணையினால் எத்தனையோ திருவிளையாடல்களைப் புரிகிறாள்; பல திருவவதாரங்களை எடுக்கிறாள். அப்படி எடுத்த அவதாரங்களுக்குள் மிகச் சிறந்தது பார்வதியாக எழுந்தருளிய திருக்கோலம். இமராஜன் புதல்வியாக வந்து வளர்ந்து சிவபெருமானைத் திருமணம் செய்துகொண்டாள். அதனால் ஹைமவதி, கிரிஜா, பர்வத வர்த்தனி, பார்வதி, மலைமகள் என்ற திருநாமங்கள் அப்பெருமாட்டிக்கு அமைந்தன.

மிக்க பனி அடர்ந்த பெரிய மலை இமாசலம். அதனால் அதனைப் 'பனிமால் இமயம்' என்று சொல்கிறார் ஆசிரியர். அந்த மலையில் பெண் யானையைப்போல உலாவி வளர்ந்தாள் அம்பிகை. ஆதலின்,

**பனிமால் இமயப் பிடியே!**

என்று துதிக்கிறார். குமர குருபர முனிவரும் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழில்,

"வளர்சிமய

இமயப் பொருப்பில் விளையாடும் இளமென் பிடியே"

என்று அழைத்தார்.

மலையரசனின் புதல்வியாக வளர்ந்தது அவளுடைய எளிமையைக் காட்டுகிறது. அவளே எல்லோருக்கும் தாயாக இருக்க, ஒருவனுக்கும் ஒருத்திக்கும் மகளாக இருந்து வளர்ந்தது அதிசயம் அல்லவா? ஜனனி, மாதா, ஸ்ரீமாதா என்றெல்லாம் திருநாமங்களைப் பெற்ற அவள் பர்வதராஜனுடைய மகளாக வந்தாள். அவள் யார் யாருக்குத் தாய்? எல்லோருக்குமே தாய். பிரமன் முதல் புழுவரையில் உள்ள ஜீவராசிகள் அனைத்திற்கும் தாயாக விளங்குவதனால் அப்பெருமாட்டிக்கு 'ஆப்ரம்ஹ கீட ஜனனி' என்ற திருநாமம் வந்தது. பிரமன் முதலிய தேவர்களுக்கெல்லாம் அவள் தாய். அவளே தன்னிடமிருந்து அவர்களைப் புறப்படவிட்டு, அவரவர்களுக்குரிய செயல்களைச் செய்யும் வண்ணம் ஆணையிட்டிருக்கிறாள்.

**பிரமன் முதலாய தேவரைப் பெற்ற அம்மே!**

என்று மேலே பாடினார்.

"பிரமற்கும் அம்மனை"

"பிரமனைப் பண்டு பெற்ற பெருந்திரு"

என்று **தக்கயாகப் பரணி** அம்மையைப் பிரமனுடைய தாயாகக் கூறும். முன்னுள்ள பாடலின் உரையில் அதன் உரையாசிரியர், 'பிரமற்கும் அம்மனை என்ற உம்மையால் விட்டுணு புரந்தராதிகட்கும் தாயாதல் முடிந்தது' என்று எழுதியிருக்கிறார்.

இதுகாறும் அம்பிகையின் பலவகைப் புகழ்களைக் கூறி மகிழ்ந்த ஆசிரியர், இப்போது அவளுடைய திருமுன் ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்க வருகிறார். அவர் வேண்டிக் கொள்வது உலகியற் பொருளை அன்று.

''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை''

என்று வள்ளுவர் கூறுவார். அந்தப் பிறவாமையை அருளும் படி அபிராமியம்மையிடம் விண்ணப்பித்துக் கொள்கிறார்.

பிறவியே பல துன்பங்களுக்குக் காரணமாவது. பிறவி அற்றுவிட்டால் என்றும் மாறாத பேரின்ப வாழ்வை எய்தலாம். இப்போது பிறந்து விட்டபடியால் இறப்பினின்றும் உய்ய இயலாது. ஆனால் இறைவியின் திருவருளைப் பெற்று விட்டால், இந்தச் சரீரத்தை உதறிய பிறகு, இனி இங்கே வந்து பிறவாத நிலை வரும். வினை காரணமாகவே பிறவி வருகிறது. இறைவியின் திருவருளால் வினையற்று விடின் உடனே பிறவாத நிலையாகிய முக்தி கிடைத்து விடும். அத்தகைய நிலை தமக்கு வேண்டுமென்று கேட்கிறார் ஆசிரியர்.

**அடியேன் இறந்து இங்கு இனிப்**
**பிறவாமல் வந்து ஆண்டுகொள்ளே!**

''நின் அடியையே பற்றுக் கோடாகக் கொண்டவன் ஆதலால், எனக்கு வேண்டியதை யாரிடம் சொல்வது? உன்னிடமே விண்ணப்பித்துக் கொள்கிறேன். இப்போது பிறந்துவிட்டேன். இந்த உடம்பை எப்படியும் விட்டுச் செல்ல வேண்டியதுதான். அப்படி இறந்து விட்டால் மீண்டும் இவ்வுலகில் வந்து பிறக்கக்கூடாது. அந்த நிலை வர வேண்டுமானால் என்னுடைய முயற்சி பயன்படாது. நீ எளியேனிடத்தில் கருணை பூண்டு நீயே என்னிடம் வந்து என்னை ஆளாகக் கொண்டு நலம் புரிய வேண்டும். நீ ஆண்டு கொள்ளா விட்டால் எமனுடைய வாதனையும்

பிறப்புத் துன்பமும் மாறி மாறி வந்து கொண்டே இருக்கும். ஆதலின் இனிமேல் நான் பிறவாத நிலை பெறும் படியாக நீ என்பால் எழுந்தருளி என்னை ஆண்டு கொள்ள வேண்டும். ஆட்கொண்டால் அப்பால் பிறவி இல்லை என்பது உறுதி.'

பெரியவர்கள் யாவரும் கேட்டுக் கொள்ளும் பிரார்த்தனை இது.

''பிறவா திருக்க வரந்தர வேண்டும்''

என்று பட்டினத்தார் பாடினார். அபிராமிபட்டரும் அந்த வரத்தையே வேண்டுகிறார்.

**கொடியே, இளவஞ்சிக் கொம்பே,**
**எனக்குவம் பேபழுத்த**
**படியே, மறையின் பரிமள**
**மே, பனி மால்இமயப்**
**பிடியே, பிரமன் முதலாய**
**தேவரைப் பெற்றஅம்மே,**
**அடியேன் இறந்திங்கு இனிப்பிற**
**வாமல்வந்து ஆண்டுகொள்ளே.**

[கொடி போன்றவளே, இளைய வஞ்சிமரத்திலுள்ள பூங்கொம்பு போன்றவளே, எனக்குப் பக்குவம் இல்லாவிட்டாலும் அதனை எண்ணாமல் காலம் அல்லாத காலத்தில் பழுத்த இன்பக் கனியின் திருவுருவமே, வேதமென்னும் மலரில் பரவிய மணம்போல இருப்பவளே, பனியையுடைய பெரிய இமயமலையில் உலாவிய பிடிபோன்றவளே, பிரமன் முதலிய தேவர்களைப் பெற்ற தாயே, அடியேன் இப்போது இறந்து, அப்பால் இந்த உலகத்தில் மீண்டும் வந்து பிறவாமல் இருக்கும்படி நீயே கருணையினால் என்பால் எழுந்தருளி ஆளாகக் கொள்ள வேண்டும்.

வம்பு—புதுமை; வழக்கமல்லாத புதுமை. படி-உருவம்.]

அம்பிகையை நோக்கிப் பிறவா வரம் தர வேண்டும் என்று கேட்கிறார் இதனால்.

இது அபிராமி அந்தாதியில் 22-ஆவது பாடல்.

# ஒருமைப்பாடு

ஒருவன் தன் வீட்டின் புறக்கடையில் கிணறு வெட்ட வேண்டுமென்று எண்ணினான். விசாலமான புறக்கடை அது. யாரோ ஒரு பெரியவர் ஒரு மூலையில் வெட்டச் சொன்னார். பத்தடி ஆழம் வெட்டினான். அதற்குள் வேறு ஒருவர், "அந்த இடம் வீட்டுக்கு ஆகாது; இங்கே வெட்டு" என்று சொன்னார். வீட்டுக்காரன் முன்னே வெட்டின இடத்தை விட்டுவிட்டு, இரண்டாமவர் காட்டிய இடத்தில் வெட்டினான். அங்கும் பத்து அடி வெட்டுவதற்குள், பின்னும் ஒருவர் வந்து வேறு இடத்தைக் காட்டினார். இவ்வாறு ஆறு இடங்களில் பத்துப் பத்து அடியாக வெட்டிப் பணச் செலவும் வீண் அல்லலும் உண்டாகவே, அவன் களைத்துப் போனான்.

அதே சமயத்தில் அடுத்த வீட்டுக்காரன் ஒரே இடத்தில் முப்பது அடி வெட்டினான்; தண்ணீர் வந்து விட்டது; கிணறும் அழகாக அமைந்துவிட்டது. முன்னே சொன்னவன் ஆறு இடங்களில் வெட்டின மொத்த ஆழம் அறுபது அடி, அப்படி வெட்டியும் அவன் தண்ணீரைக் காணவில்லை. பின்னவனோ அவன் பட்ட பாட்டில் பாதி யளவே பட்டான்; தண்ணீர் கிடைத்துவிட்டது. காரணம் என்ன? முன்பு சொன்னவன் தொடர்ந்து ஒரே இடத்தில் வெட்டவில்லை; மாற்றி மாற்றிப் பத்துப் பத்து அடியாக வெட்டிக் கொண்டே போனான். ஆயிரம் அடி வெட்டினாலும் அவனுக்குத் தண்ணீர் கிடைக்காது. ஒரே இடத்தில் விடாமல் வெட்டியதால்தான் மற்றவனுக்குத் தண்ணீர் கிடைத்தது.

எந்த முயற்சியையும் இடைவிடாமல் ஊக்கத்துடன் செய்தால்தான் நல்ல பயன் உண்டாகும். இறைவனுடைய

திருவருளைப் பெறும் முயற்சியிலும் இடைவிடாத ஒருமைப் பாடு இருக்க வேண்டும். அவனுடைய திருவுருவத்தைத் தியானிக்கும் திறத்திலும் ஒரே குறிப்பாக இருந்து பழக வேண்டும்.

தெய்வம் ஒன்றுதான், இயல்பாகக் கடவுளுக்கு நாமமோ ரூபமோ இல்லை. நாமரூபம் இல்லாத பொருளை மனம் பற்றுது. மனம் படைத்த மக்கள் தன்னைத் தியானித்து வழிபட வேண்டும் என்ற கருணையால் இறைவன் பலவேறு திருவுருவங்களை எடுத்து வருகிறான். அருளாளர்கள் அருட்கண்ணுல் அவன் திவ்ய மங்கள வடிவத்தைக் கண்டு இன்புறுகிறார்கள். பலபல வடிவங்கள் இறைவனுக்கு இருந்தாலும், நம் உள்ளம் எந்த வடிவத்தில் பதிகிறதோ அதனையே இடைவிடாமல் தியானிக்க வேண்டும்.

அம்பிகையினிடம் பக்தி பண்ணும் உபாசகன் ஒருவன் எவ்வளவுதான் சிறப்பாகப் பூஜை செய்தாலும் அவன் உள்ளத்தில் அப்பெருமாட்டியின் திருவுருவம் பதியாது. புறத்தே காணும் தரிசனத்துக்குப் பயன் அகத்திலே தியானிப்பதுதான். அப்படித் தியானிக்கும் போது ஒரு குறிப்பிட்ட திருவுருவத்தையே இடைவிடாமல் தியானித்துப் பழகவேண்டும். இன்று ஒன்று, நாளை ஒன்று என்று மாறி மாறி நினைத்தால் எந்த உருவமும் மனத்தில் பதியாது. எல்லா உருவங்களும் அம்பிகையின் திருவுருவங்களாக இருக்கலாம். ஆனால் அவற்றில் ஏதேனும் ஒன்றை இடைவிடாமல் பற்றி உள்ளத்தில் நட்டுக்கொள்ள வேண்டும், புறக்கடையில் எங்கே வெட்டினாலும் தண்ணீர் வரும். ஆனால் மாறி மாறி வெட்டாமல் ஒரு குறிப்பிட்ட இடத்திலே இடைவிடாமல் வெட்டினால்தான் தண்ணீரைக் காண முடியும். அதுபோலவே எம்பெருமாட்டியின் திருக்கோலங்கள் பல இருந்தாலும், அவற்றில் எந்தக் கோலம் நம் உள்ளத்தில் உணர்ச்சியையும் கிளர்ச்சியையும் எழுப்பு கிறதோ, அதைப் பற்றிக் கொள்ள வேண்டும்; இடை

விடாமல் தியானம்செய்ய வேண்டும். அப்போதுதான் அந்த திருவுருவம் தேசுடைய வடிவமாக மாறித் திவ்வியமான காட்சியைக் காணும் பேறு கிடைக்கும்.

"ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன்
ஒன்றேஎன் உள்ளத்தின் உள்ளடைத்தேன்"

என்று காரைக்காலம்மையார் பாடுகிறார். ஒன்றையே இடைவிடாமல் உள்ளத்தே அடைக்கும் வன்மை யாருக்கு இருக்கிறதோ அவர் அம்பிகையின் திவ்ய தரிசனத்தை அகக்கண்ணில் கண்டு களிக்கும் நிலையை அடைவார்.

அபிராமிபட்டர் அவ்வாறு அபிராமியின் திருவுருவத்தையே எப்போதும் உள்ளத்தே தியானிப்பவர். வேறு கோலத்தை நினைப்பதில்லை இதனால் மற்றக் கோலங்களைக் கண்டு வெறுப்பதில்லை.

சின்னஞ்சிறு குழந்தை வீட்டிலுள்ள எல்லோரிடமும் தாராளமாகப் பழகுகிறது. யார் எடுத்தாலும் வந்து விளையாடுகிறது. அவரவர்கள் குழந்தையை அணைத்தும் கொஞ்சியும் முத்தமிட்டும் விளையாடுகிறார்கள். அவ்வளவு பேர்கள் கையிலும் அது தவழ்கிறது. ஆனாலும் பால் குடிக்க வேண்டுமென்றால் அது தன் தாயையே நாடிச் செல்கிறது. பசி வந்துவிட்டால் குழந்தை வேறு எவரையும் நாடுவதில்லை. மற்றச் சமயங்களில் பிறரோடு கொஞ்சி விளையாடினாலும், இப்போது அவர்கள் அழைத்தாலும் போவதில்லை. தன் பசியை ஆற்றிக்கொள்ளத் தன் தாயையன்றி வேறு யாரையும் பற்றிப் பயன் இல்லை என்பது அந்தக் குழந்தைக்குத் தெரியும்.

அப்படித்தான் உண்மையான உபாசகன் இருப்பான். அவனுக்குத் தெய்வம் ஒன்றே என்ற உண்மை நன்றாகத் தெரிந்திருக்கும். எல்லா உருவங்களையும் கண்டு வழிபடுவான். ஆனால் தியானம் செய்யும்போது தன் வழிபடு தெய்வத்தின் கோலத்தில் மனத்தைப் பதிப்பான். அந்தத்

தெய்வத்தின் கோலங்களும் பலவாக இருக்கும். ஆயினும் அவற்றில் ஏதேனும் ஒன்றில் ஈடுபட்டுத் தியானிப்பான்.

அபிராமிபட்டர் அபிராமியின் திருக்கோலமல்லாமல் வேறு ஒரு கோலத்தைத் தம் மனத்தே கொள்ளவில்லை.

**கொள்ளேன் மனத்தில் நின் கோலம் அல்லாது.**

இது மற்றத் தெய்வங்களினிடம் பகை பாராட்டும் இயல்பு அன்று. உண்மையைச் சொல்லப் போனுல் அவருக்கு அம்பிகையின் கோலங்கள் பல இருப்பினும் அவற்றில் அபிராமியின் திருவுருவக் கோலம் ஒன்றே தியானிப்பதற்குரிய பொருளாக நின்றது. அப்படியானுல் அம்பிகையின் மற்றக் கோலங்களை அவர் விரும்பவில்லை. என்று சொல்லலாமா? ஓரிடத்திலே கிணறு வெட்டுவதைப் போல, குழந்தை பசி வந்தால் தன் தாயை நாடிச் சென்று பால் குடிப்பதுபோல, அபிராமியின் திருக்கோலத்தையே மனத்திலே பதித்துத் தியானம் புரிந்தார் அபிராமிபட்டர்.

குழந்தை தாயினிடம் எப்போதுமே இருக்கிறதில்லை; பால் குடிக்காத சமயங்களில் மற்றவர்களிடமும் அது இருக்கிறது. தந்தையிடமும், அத்தையிடமும், அண்ணனிடமும், அக்காளிடமும் விளையாடுகிறது. வீட்டிலுள்ள யாவரும் குழந்தைக்கு மாறி மாறி விளையாட்டுக் காட்டுகிருர்கள். ஆனுல் அயலாரைக் கண்டால் குழந்தை போவதில்லை. அவர்கள் எவ்வளவு ஆசையாகக் குழந்தையை எடுத்துக் கொள்ள வந்தாலும் போகிறதில்லை. தன் வீட்டுக்காரரோடு, தன் தாய்க்கு வெவ்வேறு வகையில் உறவினராகத் தன் வீட்டில் வாழும் மக்களோடு பழகி இன்புறுகிறது.

அன்பர்களும் தம்முடைய தியானமூர்த்தியோடு உறவான அடியார்களின் கூட்டத்தோடு சேர்ந்திருப்பதையே விரும்புவார்கள். அவர்களை விட்டுப் பிரிந்து வேறு வகை

யான கூட்டத்திலே சேருவதற்கு அவர்கள் அஞ்சுவார்கள். அபிராமிபட்டர் அம்பிகையின் அன்பர் கூட்டத்தினின்றும் என்றும் பிரியாமல் வாழ்ந்தார்.

அன்பர் கூட்டந்தன்னை விள்ளேன்.

இவ்வாறு இருப்பதால் தொண்டர்களின் பக்தி மேலும் மேலும் உரம் பெறுகிறது. மனிதன் சங்கத்தைச் சார்ந்து, சார்புக்கேற்ற பழக்க வழக்கங்களைக் கொள்கிறவன். நல்லவர்கள் கூட்டத்திலே பழகுபவனுக்கு அவனை அறியாமலே தீய பழக்கங்கள் விலகி, நல்ல பழக்கங்கள் உண்டாகும். அம்பிகையினிடம் பக்தி பண்ணுகிறவர்கள் சாதனம் செய்து வரும் காலத்தில் அவர்களுடைய பக்தியைக் குலைக்கும் வகையில் பல இடைஞ்சல்கள் வந்து நேரலாம். அதனால் மனம் தளர்ந்து பக்தியின் உரம்குறைந்து போகலாம். பக்தி மாறாமல் இருக்க வேண்டுமானால் தக்க பாதுகாப்பு வேண்டும். அடியார்களுடைய பழக்கம் அந்தப் பாதுகாப்பைத் தரும் பக்தியே இல்லாமல் இருப்பவர்களும் அடியார்களின் கூட்டத்தில் சேர்ந்து விட்டால் அவர்களை அறியாமலே பக்தி உண்டாகும், பக்தி கொண்டவர்கள் தொண்டர் கூட்டத்தில் இருந்தால் அந்தப் பக்தி மேன்மேலும் வளரும்.

ஆதலால் அம்பிகையைத் தியானம் பண்ணும் சாதனத்தில் ஈடுபட்ட அபிராமிபட்டருக்கு அது சிறந்த பயன் தரும் வகையில் அமைவதற்கு ஏற்ற பாதுகாப்புக் கிடைத்தது. தொண்டர் கூட்டத்தின் நட்புக் கிடைத்தது. அதனால் அவர் பக்தி மேன்மேலும் வளரலாயிற்று.

வீதிக்கு நடுவில் விளக்கை ஏற்றி வைத்தால் அது நிற்காது. சுவர்களால் பாதுகாப்புடைய அறையில் ஏற்றினால் அது தளராமல் எரியும். உள்ளத்தே அம்பிகையின் திருவுருவை வைத்துத் தியானம் செய்பவருக்கு அந்தத் தியானத்துக்குத் தீங்கு நேராத சூழ்நிலை அமைந்

தது. அன்பர்களின் கூட்டத்தில் அவர் இருந்தார். அவர்களை விட்டு நீங்காமல், அவர்களில் ஒருவராகக் கலந்து நின்றார்.

**கொள்ளேன் மனத்தில் நின் கோலம் அல்லாது;**
**அன்பர் கூட்டந்தன்னை விள்ளேன்.**

உறவினர்களின் கூட்டத்தை விட்டு விலகாத குழந்தை தன் வீட்டை விட்டு வெளியேறவும் அஞ்சும். அப்படியே உபாசனை தெய்வத்தைத் தியானம் செய்யும் பக்தன் அத் தெய்வத்தின் அடியார்களோடு உறவு கொண்டாடுவான்; வேறு சமயத்தில் நாட்டம் இராமல் இருப்பான்.

எந்தச் சமயத்தில் இருந்தாலும் உய்ய வழி உண்டு. இயல்பாக நமக்குக் கிடைத்த சமயத்தைப் பற்றிக் கொண்டு அதன் நெறியிலே நின்று ஒழுகினால் நிச்சயமாக நலம் கிடைக்கும். ஆகவே தான் கைப்பிடித்த சமயத்தினின்றும் பிறழாமல் வாழ்வது பக்தன் கடமை. தான் நம்பி வாழும் தெய்வத் தியானத்தாலும், அடியார் கூட்டுறவினாலும் அநுபவத்தில் நன்மையைக் கண்டவன் வேற்றுச் சமயத்தில் புக வேண்டும் என்ற ஆசையைக் கொள்ள மாட்டான்.

**பரசமயம் விரும்பேன்.**

இவ்வாறு அபிராமிபட்டர் தாம் ஒன்றையே விரும்பி ஒன்றையே துணிந்து ஒன்றையே உள்ளடைத்த வகையைச் சொன்னார். அபிராமியின் திருக்கோலத்தைத் தியானித்து, அவளுடைய பக்தர்கள் கூட்டத்தைச் சார்ந்து வாழ்ந்து, அந்த வைதிக சமயத்தையே பற்றிக் கொண்டு நின்றார்.

அவருக்கு ஓர் உண்மை தெரியும். ஆயிரம் ஆயிரம் கோலம் எடுத்து அன்பர்களுக்கு அருள்புரிய வரும் அம்பிகை எங்கும் நிறைந்தவள் என்பது அவருக்குத் தெரியும். அவள் இவ்வுலகத்திலுள்ள எல்லாப் பொருள்

களினூடும் அந்தர்யாமியாய் இருக்கிறாள். இந்த உலகத்தைக் கடந்து, மனித மனம் எட்டாத இடத்திலும் இருக்கிறாள். எல்லாப் பொருளினூடும் அடங்கி உள்ளே இருக்கிறாள்; எல்லாப் பொருளையும் தனக்குள்ளே அடக்கி அவற்றிற்கு அப்பாலும் இருக்கிறாள்.

வியன் மூவுலகுக்கு
உள்ளே, அனைத்தினுக்கும் புறம்பே!

பக்தர்களின் சிறிய உள்ளத்தில் பெட்டியில் அடங்கும் மாணிக்கம்போல நின்று ஒளி விடுகிறாள் அம்பிகை. ஆனால் அந்த அளவில் நின்று விடுகிறவளா அவள்? அவள் எங்கும் நிறைந்திருப்பவள். விரிந்த மூவுலகுக்கும் உள்ளே, அந்த உலகங்களிலுள்ள உயிர்க் கூட்டத்தின் உள்ளே அந்தர்யாமியாய் நிலவுகிறாள். இந்தப் பிரபஞ்சத்துக்கு அப்பால், எல்லாப் பொருளுக்கும் புறம்பேயும் இருக்கிறாள்.

"இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய
வேத முதல்வன்"

என்று நற்றிணையில் வருகிறது. அம்பிகை உள்ளும் இருக்கிறாள்; புறம்பும் இருக்கிறாள்.

கடவுள் என்ற சொல்லே இந்த இரண்டு தன்மைகளையும் சுட்டும் பொருளை உடையதாக அமைந்திருக்கிறது. எல்லாப் பொருளையும் கடந்து, எல்லாப் பொருளுக்கு உள்ளும் நிற்பவன் எவனோ அவனே கடவுள். அம்பிகை அப்படி இருக்கிறாள்.

இவ்வாறு சர்வாந்தர்யாமியாய், சர்வத்தையும் தன்னுள் வியாப்பியமாக்கிய வியாபக வஸ்துவாய் இருக்கும் அவள் கருணையினால் உள்ளம் கொள்ளும்படி ஒரு கோலம் கொண்டு வந்தாள். எங்கும் பரந்து வீசுகிற காற்று ஒரு நுழைவாயில் வழியே புகுந்து வேகமாக வீசுவதுபோல, விபுவாக இருக்கும் அன்னை திருக்கோலம் கொண்டு

உள்ளத்தே தியானப் பொருளாகப் புகுகிருள். அதன் பயனை அன்பர்கள் நுகர்கிருர்கள். வெளியிலே நின்ருல் காற்றின் சுகத்தைப் பெருதவர்கள் நுழை வாயிலில் நின்று அதன் வேகத்திஞல் இன்பம் பெறுவதுபோல, தியான மூர்த்தி யிஞல் இன்பம் பெறுகிருர்கள் உபாசகர்கள்.

அந்த இன்பத்தை அபிராமிபட்டர் சொல்ல வருகிருர். எப்படிச் சொல்வது? அம்பிகையைத் தியானம் பண்ணிஞல் பழைய உணர்வே மாறிவிடுகிறது. உலக எண்ணம் மங்கிப் போகிறது. மதோன்மத்தமான நிலை உண்டாகிறது. கள்ளைக் குடித்தவன் பழைய நிலையை மறந்து நிற்பதுபோலே ஒரு வகைப் போதையிலே நின்று தடுமாறும் உணர்ச்சி அமைகிறது. அம்பிகையை உள்ளத்தே தியானிப்பதஞல் இந்த இன்பம் விளைகிறது. உள்ளே விளைந்த ஆனந்தத் தேஞக, அமுதக் கள்ளாக அவள் இருக்கிருள்.

உள்ளத்தே விளைந்த கள்ளே!

இந்தக் கள்ளை உண்டதஞல் ஒரு விதமான இன்ப மயக்கம் ஏற்படுகிறது. கள்ளைக் குடிப்பதஞல் உண்டாகும் மயக்கத்துக்குக் களி என்று பெயர். இந்தக் கள்ளால் உண்டாகும் ஆனந்த அநுபவமும் ஒருவகைக் களியே ஆகும். அம்பிகையே ஆனந்த உருவாக இருக்கிறவள் அல்லவா?

களிக்கும் களியே!

இவ்வாறே அம்பிகையின் தியானத்திஞல் விளையும் பேரானந்த நிலையைக் குமரகுருபரர் மீஞட்சியம்மை பிள்ளைத் தமிழில் பாடுகிருர்.

'உருகி உருகி நெக்குநெக்குள்
உடைந்து கசிந்திட் டசும்பூறும்
உழுவ லன்பிற் பழவடியார்
உள்ளத் தடத்தில் ஊற்றெடுத்துப்

பெருகு பரமா னந்தவெள்ளப்
பெருக்கே!''
''விழித்துறங்கும் தொண்டர்
உழுவலன் பென்புருகநெக்கு
அள்ளூற உள்ளே கசிந்தூறு
பைந்தேறல்''

என்பவற்றைக் காண்க.

இப்படியெல்லாம் உள்ளத்தே நின்று ஆனந்த ஊற்றுகப் பெருக்கெடுக்கும் அம்பிகை எப்போதும் கண்ணுள் மணியாக நின்று, மெய்யான பார்வையை அருள் கிருள். அன்னையின் அருள் பெற்ற பிறகு காணும் காட்சியே வேறு. அதற்கு முன் பஞ்சபூதப் பொருளாகத் தோற்றிய உலகம் இப்போது அம்மையின் திருவுருவாகத் தோற்று கிறது. அவள் அன்பர்களின் கண்ணுள் மணியாக நின்று இந்தக் காட்சியைக் காணச் செய்கிருள். பக்தர்கள்பால் இரக்கம் கொண்டு இந்த நிலையை அருள்கிருள்; கண்மணி யாக நிற்கிருள்.

**அளிய என் கண்மணியே!**

அபிராமிபட்டர் தம் கடைப் பிடியையும் அதனுல் விளைந்த அநுபவத்தையும் இந்தப் பாடலில் சொன்ஞர்.

**கொள்ளேன் மனத்தில்நின் கோலம்அல்**
**லாது; அன்பர் கூட்டந்தன்னை**
**விள்ளேன்; பரசம யம்விரும்**
**பேன்; வியன் மூவுலகுக்கு**
**உள்ளே, அனைத்தினுக் கும்புறம்**
**பே, உள்ளத் தேவிளைந்த**
**கள்ளே, களிக்கும் களியே,**
**அளியஎன் கண்மணியே!**

[ விரிந்த மூன்று உலகங்களுக்கும் உள்ளே அந்தர்யாமி யாக உள்ள தாயே, எல்லா உலகங்களுக்கும் அப்பால்

உள்ள பொருளே, நினைப்பவருடைய உள்ளத்தே தம்மை மறக்கும்படி விளைக்கும் கள்ளைப் போன்றவளே, அதனால் களிக்கின்ற களிப்பாக இருப்பவளே, இரங்குவதற்குரிய அடியேனுக்குக் கண்ணில் மணிபோல நின்று உண்மைக் காட்சியைக் காண உதவுபவளே, அடியேன் நின்னுடைய திருவுருவத்தையல்லாமல் வேறு எதையும் என் மனத்தில் தியானப் பொருளாகக் கொள்ளமாட்டேன்; நின் அன்பர் களின் கூட்டத்தை என்றும் பிரிந்து நிற்க மாட்டேன்; பிற சமயத்தை விரும்பேன்.

வியல்—விரிவு. மூவுலகு—அந்தர் மத்திய பாதலம். உலகுக்கும் என்ற முற்றும்மை தொக்கு நின்றது. உள்ளே என்பதும் புறம்பே என்பதும் இடவாகு பெயர்கள்.]

இந்தப் பாடலோடு திருவாசகத்தில் வரும்,

"கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு; குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்; நரகம்பெறினும்
எள்ளேன் திருவரு ளாலே
இருக்கப் பெறின்; இறைவா,
உள்ளேன் பிறதெய்வம் உன்னைஅல்
லால்; எங்கள் உத்தமனே!"

என்னும் பாடல் ஒப்பு நோக்குவதற்குரியது.

ஒருமைப் பாட்டினால் இன்பம் விளையும் என்ற கருத்தை உடையது இந்தப் பாடல்.

இது அபிராமியந்தாதியில் வரும் 23-ஆவது பாடல்.

# தனிப் புகல்

மனிதன் தனக்கு விருப்பமான பொருளைப் பல படியாகப் பாராட்டுவது வழக்கம். எந்த எந்தப் பொருள்கள் அருமையாகச் சேமித்து வைக்கப் பெறுகின்றனவோ, அந்த அந்தப் பொருள்களை உவமையாகவோ, உருவகமாகவோ எடுத்து ஆள்வது அன்புக்கு அடையாளம். குழந்தையை, 'பொன்னே, மணியே' என்று பாராட்டிக் கொஞ்சுவது பெற்றவர்களுக்கு இயல்பு. விலை உயர்ந்த பொருளாகிய பொன்னையும் மணியையும் பெறுதற்கரிய பொருளாகிய மக்கட் செல்வத்தோடு ஒப்பிட்டுப் பாராட்டுதல் பொருத்தமான செயல்தான்.

எல்லாப் பொருளுக்கும் மேலான பொருள் பரம் பொருள். தாய் இளங்குழந்தையைப் பாராட்டுவது போல், முதிர்ந்த குழந்தை தாயையும் பாராட்டலாம். ஆனால் உலகியலில் அத்தகைய பாராட்டை நாம் கேட்பதில்லை. எல்லா உலகுக்கும் தனித் தாயாக விளங்கும் அம்பிகையைப் பக்தர்கள் வாயாரப் பாராட்டுவார்கள். அதனால் அப்பெருமாட்டிக்குத் தனியே ஒரு சிறப்பு உண்டாவதில்லை. ஆனால் பாராட்டும் அன்பர்களின் கருத்தில் களிப்பும், நாவில் இனிப்பும் பொங்கும்.

அபிராமிபட்டர் எம்பெருமாட்டியை வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்து வழிபாடு செய்வதில் சிறந்தவர். தாம் பெற்ற புலமையை அந்தப் பெருமாட்டியின் திருவடியில் அர்ப்பணிக்கிறவர். புதிய புதிய முறையில் அன்னையின் புகழைப் பாடவேண்டும் என்ற பேரார்வம் உடையவர். அந்த முறையில் இப்பொழுது விலை உயர்ந்த

பொருள்களை அம்பிகைக்கு உவமையாக்கிச் சொல்ல முந்துகிறார்.

மணிகள் ஒன்பதானாலும் அவற்றுள் நாயகமாக நிற்பது மாணிக்கம். ஒன்பது கிரகங்களுள் சூரியன் சிறந்து நிற்பதுபோல, அந்த மணிகளுள் செம்மணியே சிறந்து நிற்கும். அம்பிகை செக்கச் செவேலென்ற வண்ணம் உடையவள். அந்த வண்ணத்தூடே ஒளியும் இணைந்து நிற்கும். அந்தத் திருக்கோலத்தை உன்னும் போது அபிராமிபட்டருக்கு மாணிக்கம் நினைவுக்கு வருகிறது.

**மணியே!**

மணிக்குப் பெருமை அதன் நிறத்தினால் மட்டும் அமைவது அன்று. ஒளியினால் சிறப்பு எய்துவது மணி. மணியும் ஒளியும்போல என்பது பழமொழி. முதலில் மணியைச் சொன்னவர் அதற்குச் சிறப்புத் தருகின்ற ஒளியையும் நினைத்தார். பெருமாட்டி தான் இணைந் திருக்கும் இடங்களில் எல்லாம் அழகையும் ஒளியையும் உண்டாக்குகிறவள்.

ஒரு வகையில் சிவபெருமானையும் மணி என்று சொல்லலாம். அவனும் செம்மேனி உடைய பெருமான் தான்.

"சிவனெனும் நாமம் தனக்கே உடைய
செம்மேனி எம்மான்"

என்பது தேவாரம். சிவபெருமானிடத்தில் உயிராக நின்று நலம் செய்கிறவள் அன்னை. அவன் மாணிக்க மானால், அவனோடு ஒன்றி நின்று சக்தியைப் பெறச் செய்யும் அன்னை அந்த மணியின் ஒளியாகும். எனவே அன்னையை மாத்திரம் எண்ணி, 'மணியே' என்று சொல்லப் புகுந்தவர் அம்மையையும் அப்பனையும் எண்ணி,

**மணியின் ஒளியே!**

என்றார். பூவில் மணம் போலவும், நீரில் தண்மை போலவும், அனலில் வெம்மை போலவும், மணியில் ஒளி போலவும் சிவபெருமானிடம் நின்று நிலவுகிறவள் அன்னை.

நவமணிகள் தனித்தனியே இருந்தால் அத்துணைச் சிறப்பு உண்டாகாது. பல வகையில் இணைந்து அணிகளாக நிற்குமானால் அவற்றின் அழகும் பயனும் மிகுதியாகும். தனி முத்தைவிட முத்துமாலை சிறந்தது; அணிவதற்குரியது. தனியாக இருக்கும்போது வெறும் மணி என்று சொல்லும் அளவில் அது அமையும். பிற மணிகளோடு சேர்ந்து பொன்னும் கலந்து அணியாகும்போது சிறந்த பயனை அடைகிறது. பூவைத் தனியே அணிவதை விட மாலையாக்கி அணிவது சிறப்பாதல்போல, மணியையும் அணியாக்கிப் புனைதல் சிறப்பு. எம்பெருமாட்டி பல பல நலங்களெல்லாம் இணைந்த திருவுருவம் உடையவள். காணவும் பேசவும் நினைக்கவும் உரிய இனிய பண்புகள் அவள்பால் உண்டு. பல மணிகளை ஒன்றாக்கி இணைத்து அணியாக அமைத்தால் எத்தனை பயனும் பெருமையும் உண்டாகுமோ, அத்தனை பயனும் பெருமையும் அம்பிகையால் உண்டாகின்றன. ஒவ்வொரு தெய்வத்தினிடம் ஒவ்வொரு மணியைப் போல ஒவ்வொரு பண்பு சிறந்து நிற்கும். எம்பெருமாட்டியிடம் பல மணிகள் ஒன்றுபட்ட அணியைப் போலே எல்லாக் குணங்களும் மிளிர்ந்து விளங்கும். ஆதலின், மணி என்றும் மணியின் ஒளி என்றும் புகழ்ந்தவர்,

**ஒளிரும் மணி புனைந்த அணியே!**

என்றார்.

அணியைச் சொன்னவுடன் எம்பெருமாட்டி பலவகை ஆபரணங்கள் புனைந்திருத்தல் நினைவுக்கு வந்தது.

"இழையணி சிறப்பிற் பழையோள்"

என்று திருமுருகாற்றுப்படையும்,

"நீல மேனி வாலிழை"

என்று ஐங்குறுநூறும் அம்மையைப் போற்றுகின்றன. வாலிழை என்றது, மக்களால் இயற்றப்படாமல் அமைந்த தெய்விக அணிகலன்களை, ஏனைய மகளிர் தம்முடைய அழகை மிகுவிக்க அணிகளைப் புனைந்து கொள்வர். அன்னையோ இயல்பாகவே பேரழகு உடையவள். அவள் திரிபுரசுந்தரி.

"அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத வல்லி"

என்று பாடுவார், இவ்வாசிரியர். எம்பிராட்டிக்கு அணிகளால் அழகு அமைய வேண்டும் என்பது இல்லை. அதற்கு மாறாக அன்னையின் திருமேனியினால் அணிகள் அழகு பெறுகின்றன. ஆதலின்,

அணியும் அணிக்கு அழகே!

என்று பாடினார்.

இதுகாறும் சொன்ன நயப்பாடுகளெல்லாம் அபிராமி அம்மையின் திருவருளுக்கு ஏங்கி நிற்கும் அன்பர்கள் அநுபவத்தில் அறியும் தன்மையன. அன்னை பலருக்கும் பொதுவான தாயாக இருந்தாலும் அவளை அணுகி அன்பு செய்வாருக்குத் தன்னுடைய இனிய கோலத்தைக் காட்டி அருள் புரிகிறாள். தன்னுடைய இனிய கல்யாண குணங்களை நினைக்கச் செய்து மனத்தில் சாந்தத்தை உண்டாக்குகிறாள். அவள் உலகிலுள்ள ஆருயிர்க் கூட்டங்களெல்லாம் தன்னை அடைந்து நலம் பெறவேண்டும் ... பெருங்கருணை உடையவள். அதன் பொருட்டே ...வற்றினும் நுண்ணிய பொருளாக இருக்கும் ...னுடைய உள்ளம் கொள்ளும் வகையில்

அழகுத் திருக்கோலம் கொண்டு எழுந்தருளுகிறாள். கருவி கரணங்களுக்கு அப்பால் நுண்பொருளாக இருக்கும் பெருமாட்டி ஆருயிர்களை நோக்கி உருவமும் நாமமும் படைத்து வருகிறாள். அப்படி வரும் தாயை நெடுஞ் சேய்மையிலே கண்டு ஓடிக் காலைப் பற்றிக்கொள்ளுதல் நல்ல குழந்தையின் இயல்பு. சில முரட்டுக் குழந்தை களோ அன்னை எப்படி வந்தாலும் அவளுடைய கருணைச் செயலை உணராமல் மனம்போன போக்குப்படி ஓடுகிறார் கள். வீட்டில் இருந்து அன்னை அன்புடன் ஊட்டும் உணவை நல்ல குழந்தைகள் உண்ணுகிறார்கள். பொல் லாத குழந்தையோ வீட்டுக்குப் புறம்பே போய் வீதியி லுள்ள மண்ணைத் தின்கிறது. வீடு அன்னையின் ராஜ்யம். அதற்குள் இருந்து விளையாடும் குழந்தை அன்னையைப் பற்றிக்கொண்டு நல்ல உணவைப் பெறுகிறது. அன்னை யின் அருள் எல்லையாகிய வீட்டைக் கடந்து புறம் போந்து புழுதியையும் மண்ணையும் உண்ணும் குழந்தையை அன்னை நாடி வந்து அடிக்கிறாள்; அடித்துத் திருத்துகிறாள். அதுபோல எம்பெருமாட்டியின் அருள் எல்லையில் நின்று அவளை அணுகிப் பணிந்து நலம் பெறுகிறார்கள் நல்ல பிள்ளைகள். அல்லாதவர்களோ அந்த எல்லைக்குப் புறம்பே வந்து பிரபஞ்ச வாசனையில் ஈடுபட்டு இந்திரியத் துக்குப் பொருளாகும் நுகர்ச்சிகளையே நுகர்கிறார்கள். தன்னை அணுகாமல் இவ்வாறு பிரபஞ்சச் சேற்றில் உழலு கிற குழந்தைகளைத் திருத்துவதற்காக எம்பெருமாட்டி அவர்களுக்குத் துன்பத்தைத் தருகிறாள். அவர்களுக்குத் தாயாக நிற்பினும் இப்பொழுது திருத்தும் பொருட்டு ஒறுப்பவளாக, நோயாக வருகிறாள். இதனை நினைந்து,

அணுகாதவர்க்குப் பிணியே!

என்கிறார். பொல்லாத பிள்ளைகள் தம்முடைய தாயைப் பேயென்றும் நோயென்றும் சொல்லுவது வழக்கம்.

அதுபோல அன்னையின் பெருமையை உணராத மக்கள் அவளை மதிப்பதில்லை; நோயாகக் கருதுவர் என்றும் ஒரு பொருள் கொள்ளலாம்.

ஏதோ ஒரு வகையில் அம்மையைப் பிணியே என்று சொன்னவர், மனம் ஆற்றுமல் அடுத்து,

பிணிக்கு மருந்தே!

என்கிருர். பொல்லாதவர்களுக்குத் துன்பம் தரும் நோயாகவும் நல்லவர்களுக்கு நோயைத் தீர்க்கும் மருந்தாகவும் அன்னை உதவுகிருள். அன்னையை உபாசிக்கிறவர்கள் பல வகையான பிணியினின்றும் விடுதலை பெறுவார்கள். 'ஸர்வவ்யாதி ப்ரசமனி' என்பது அம்பிகையின் திருநாமங்களுள் ஒன்று. மனிதன் உடம்பில் பல வகை நோய்கள் உண்டாகின்றன. அந்த நோய்களுக்காவது மருத்துவரைக் கொண்டு பரிகாரம் தேடலாம், நோய்களுக்கு இடமாகிய உடம்பைப் பெறுவதே ஒரு பெரிய நோய். பிறப்பு என்னும் அந்த நோய்க்கு உலகிலுள்ள எந்த மருத்துவரிடமும் மருந்து இல்லை. அம்மையின் அருள் மருந்து ஒன்றினுலேதான் அது தீரும். மருந்தை உட்கொள்ளுகிறவர்களுக்குப் பிணி தீருவதுபோல, எம் பெருமாட்டியின் திருக்கோலத்தை உட்கொண்டு தியானிப்பவர்களுக்குப் பிறவி என்னும் பெரிய பிணி தீரும். இந்தக் கருத்தை எண்ணி,

பிணிக்கு மருந்தே!

என்ருர். இந்தக் கருத்தைக் குமர குருபர முனிவர் **மீனுட்சி அம்மை பிள்ளைத் தமிழில்,**

"வெம்பாசம் மருவியபிணிகெட
மலை தரும் அருமைமருந்தே"

"பிறவிப் பெரும்பிணிக்கோர் மருந்தே"

என்று பாடியுள்ளார். மற்ற எல்லாவற்றையும்விடப் பிறவிப் பிணிக்கு மருந்தாக நிற்கும் இயல்பே சிறந்தது.

ஆதலின் மணிமுதலாகப் பலவற்றைச் சொன்னவர் கடைசியில் 'மருந்தே' என்ருர்.

இனி, அப்பெருமாட்டியால் அமரருக்கும் நலம் உண்டாவதை நினைக்கிருர். பண்டாசுரன் முதலிய அசுரர்கள் தேவர்களுக்குத் தீமை புரிந்தனர்; நல்லோர் இயற்றும் வேள்விகளை அழித்து அமரர்களுக்குப் பலபடியான இன்னல்களை விளைவித்து நடுங்கச் செய்தனர். அமரர்கள் சிறந்த போகத்தை உடையவர்கள். தாம் செய்த புண்ணியத்தின் பயனுகச் சிறந்த நுகர்ச்சிகளை நுகர்பவர்கள். இவ்வுலக வாழ்வில் இன்பமும் துன்பமும் கலந்து வரும். தேவலோக வாழ்வில் முழுதும் இன்பமாகவே இருக்கும் ஆதலின் 'சொர்க்க வாழ்வு', 'தேவ போகம்' என்றெல்லாம் பாராட்டிச் சொல்லும் முறை வந்தது. பல வகையான போக போக்கியங்கள் குறைவின்றி நிரம்பப் பெற்ற தேவர்கள், அசுரர்களால் தம் நிலை மாறித் துன்பத்தை அடைந்தார்கள். அவர்கள் பெற்றபோகம் தலைதடுமாறியது. வேண்டியபொழுது வேண்டும் அளவில் உணவு உண்ணுகின்றவன் கையிலிருந்து உணவைப் பறிப்பதுபோலே அசுரர்கள் தேவர் வாழ்வைக் குலைத்தனர் உணவு இழந்து பசியால் நலிவு பெற்றவரைப்போலத் தேவர்கள் ஆயினர். தம்முடைய ஆற்றல் பயன் பெருது என்று கருதி யாவரும் அம்மையைச் சரண் புகுந்தனர். அம்மை அசுரர்களைத் தொலைத்துத் தேவர்களுக்குப் பழையபடி இன்ப வாழ்வை அருளினுள்.

"அமரர் வாழ்வு வாழ்வாக அமுத பானம் ஈவாளே"

என்று **தக்கயாகப்பரணி** இந்தக் கருணைச் செயலைப் பாராட்டும். இடையில் தம் போகத்தை இழந்து பட்டினிப் பட்டாளமாக நின்ற அமரர்கள் இப்பொழுது அன்னையின் பேரருளால் முன்னையினும் சிறந்த போகத்தைப் பெற்று

வாழ்கிருர்கள். அன்னை அவர்களுக்குப் பெரு விருந்தை அருளினுள். அவளே பெருவிருந்தாக நின்று அவர்களுக்கு இன்ப வாழ்வை வழங்கினுள்.

அமரர் பெருவிருந்தே!

அமரர் முன்பே ஒரு விருந்து பெற்றவர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதம் உண்டார்கள். அது பழைய விருந்து. ஆனல் எம்பெருமாட்டியின் திருவருளோ அதைவிடப் பெரியது. அமுதம் உண்டும் அசுரர்களால் விளைந்த இன்னல் களைப் போக்க மாட்டாமல் திண்டாடினுர்கள். அமுத விருந்து செய்யாததை அம்மையாகிய பெருவிருந்து செய்தது. அமுதமாகிய பழைய விருந்து சிறு விருந்து. அம்பிகையாகிய புது விருந்து பெரு விருந்து.

விருந்து என்பதற்குப் புதுமை என்ருெரு பொருள் உண்டு. அவர்கள் அம்பிகையினுல் வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு நலம் பெற்றும் அவர்கள் அவளை முற்றும் உணர்ந்திலர். அவளுடைய அழகும் பெருமையும் ஒரு காலைக்கு ஒரு கால் புதியனவாகத் தோன்றி வியப்பை அளிக்கின்றன. அம்பிகையை வணங்கித் தியானித்து அன்பு செய்யும் அடியார்கள் அவளை நன்கு உணர்ந்தவர்கள். அமரர்களோ இன்னல் விளையும்போதெல்லாம் அன்னையை அணுகுபவர்கள். ஒவ்வொரு முறை அணுகும் போதும் வெவ்வேறு புதுமையை அவர்கள் அம்பிகையிடம் காண் கிருர்கள். எல்லாப் புதுமைகளிலும் பெரிய புதுமையாக அம்பிகை நிலவுகிருள். இந்தக் கருத்தை எண்ணியும், 'அமரர் பெருவிருந்தே' என்று கூறியதாகக் கொள்ளலாம்.

அன்பர்கள் தம்முடைய ஆதரத்தினுல் எம்பெரு ாட்டியை எண்ணுகின்ற வகையில் பலபடியாக எண்ணி

மகிழ்ந்த ஆசிரியர், பின்பு அமரருக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பையும் கூறி, இறுதியில் தம்முடைய உறுதிப் பாட்டைச் சொல்ல வருகிறார். மணியாகவும் ஒளியாகவும் அணியாகவும் அழகாகவும் பிணியாகவும் மருந்தாகவும் விருந்தாகவும் நிற்கும் அபிராமி பக்தர்களின் புகலிடமாக நிற்பவள். அவளை அறிந்துகொள்ளாத வரையில் நமக்குப் புகலிடம் எங்கே என்ற ஐயமும் அச்சமும் மக்களுக்கு நேரும். பெரும் கூட்டத்தில் ஒளி மங்கிய மாலை நேரத்தில் அன்னையைப் பிரிந்த குழந்தை மாதர்களில் ஒவ்வொருவராக அணுகி முகத்தைப் பார்த்து ஏமாந்துபோவது போல, மக்களும் தெளிவில்லாத மாயை காரணமாக யாரைப் புகல் புகுவது என்று அறியாமல் உழலுகிறார்கள். கானலை நீர் என்று எண்ணிக் கடுவெளி திரியும் மான் எத்தனை நேரம் நாடி ஓடித் தேடினாலும் நீரை அடையாது. முயற்சி மிக மிக நீரைக் காணாத ஏமாற்றமும் அயர்ச்சியும் உண்டாகின்றன. அப்படி இன்றி, நீர் நிலையைக் கண்டு விட்டாலோ வேறு எதனிலும் நாட்டம் இன்றி அங்கேயே நின்று விடும். அதுபோலப் பிரபஞ்ச வாசனையில் ஈடுபட்ட உயிர்கள் யார் யாரையோ அணுகி அவர்களால் மேலும் மேலும் துன்பம் உண்டாவதையே காண்கின்றன. அம்பிகை ஒருத்திதான் தக்க பற்றுக்கோடு என்பதை உணர்ந்து அந்தப் பெருமாட்டியின் திருவடித் தாமரையைப் பற்றிக்கொண்டால், அப்பால் வேறு ஒருவரையும் நாடிச் செல்லும் அவசியம் இராது.

வறுமையால் துன்புற்றவர்கள் தமக்குப் பொருள் உதவும் வள்ளல்க்ள் எங்கே என்று தேடுவார்கள். அவர்கள் தேடி வந்தால் அவர்களது குறிப்பறிந்து வரையறையின்றித் தருவது வள்ளன்மை. திருவள்ளுவர்.

''இலன்என்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலன்உடையான் க்ண்ணே உள''

என்று ஒரு திருக்குறட்பாவில் சொல்கிருர். அதற்குப் பல பொருள்கள் உண்டு. அவற்றுள் ஒன்று, 'தன்பால் வந்து இரந்தோர் அப்பால் வேறு ஒருவரிடம் சென்று யான் இல்லாதவன் என்று கூருத வகையில் நிறைவான பொருளே வழங்க வேண்டும்' என்பது. இதே கருத்தை வேறு ஒரு பழம்பாட்டுச் சொல்கிறது. 'சோழனிடம் சென்று இரந்து பொருள் பெற்ற புலவர்கள் மீட்டும் பொருளுக்காக வேறு யாரிடமும் சென்று கையேந்த வேண்டிய அவசியம் இல்லாமல் போகும்' என்ற பொருளுடையது அது.

"செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர்—ஒருநாளும்
பூதலத்தார் தம்மைப் பொருள்நசையாற் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்"

என்பது அந்தப் பாட்டு.

உலகியலுக்கு உதவியாகும் பொருளேத் தரும் வள்ளல்களே இவ்வாறு செய்வார்கள் என்ருல், என்றும் மாருத முத்தி இன்ப வாழ்வைத் தரும் எம்பெருமாட்டியின் வள்ளன்மை சொல்லும் தரமோ? அந்தப் பெருமாட்டியின் திருவடியைப் பணிந்த பிறகு பணிந்தவர்க்கு எல்லாக் குறையும் நிரம்பும் குறைவிலா நிறைவாகிய அன்னையின் திருவருள் சார்ந்தாரையும் குறைவிலா நிறைவுடையவராகச் செய்யும், ஆதலின், 'உன்னுடைய பாத பத்மத்தைப் பணிந்த பிறகு வேறு ஒருவரை நான் பணியேன்' என்று சொல்லி முடிக்கிருர் ஆசிரியர்.

**பணியேன் ஒருவரை, நின் பத்மபாதம்
பணிந்தபின்னே.**

மணி முதலிய அரிய பொருளாகவும் அமரர்களுக்குப் பெரு விருந்தாகவும் நின்று அருள் செய்யும் அபிராமி

தன்னுடைய திருவடி மலரைப் பணிந்தவர்களுக்கு ஒன்றாலும் குறை வைக்காமல் நிரப்பிவிடுவாள். ஆதலின் அவள் திருவடியைப் பற்றினவர்கள் வேறு புகலைத் தேடும் அவசியமும், மன இயல்பும் இல்லாதவர்கள் ஆகிறார்கள்.

**மணியே, மணியின் ஒளியே,**
**ஒளிரும் மணிபுனைந்த**
**அணியே, அணியும் அணிக்கழ**
**கே, அணு காதவர்க்குப்**
**பிணியே, பிணிக்கு மருந்தே,**
**அமரர் பெருவிருந்தே,**
**பணியேன் ஒருவரை நின்பத்ம**
**பாதம் பணிந்தபின்னே.**

[மாணிக்கத்தைப் போன்றவளே, மணியில் கலந்த ஒளி போன்றவளே, பிரகாசிக்கும் மணிகளால் புனையப் பெற்ற ஆபரணம் போன்றவளே, அணியும் அணிகளுக்கு அழகாக விளங்குபவளே, உன்னை அணுகிப் பணியாதவர்களுக்குப் பிணி போன்றவளே, பிறவி என்னும் நோய்க்கு மருந்தாக இலங்குபவளே, அமரர்களுக்குப் பெருவிருந்தாக இருந்து வாழ்வு தருபவளே, நின்னுடைய தாமரையைப் போன்ற திருவடியைப் பணிந்த பிறகு வேறு ஒருவரையும் வணங்க மாட்டேன்.]

இது அபிராமி அந்தாதியில் உள்ள 24-ஆம் பாடல்.

# அடியார் உறவு

ஒருவனுக்கு நல்ல எண்ணங்களும் நல்ல பழக்கங்களும் வரவேண்டுமானல், அவனுக முயன்ருல் எளிதில் அந்த முயற்சி கைகூடாது. நல்லவர்களோடு சேர்ந்து பழகினல் அவன் விரும்பாவிட்டாலும் அவனை அறியாமல் நல்ல பழக்கங்கள் அவனிடம் உண்டாகும். மனிதனைச் சமுதாய விலங்கு (Social animal) என்று சொல்வார்கள். அவன் தனித்து வாழ இயலாது. பல மக்களிடையே கூடி வாழ்வதே மனிதனுடைய இயல்பு. ஒவ்வொரு வீட்டிலும் சில சில சிறப்பான பழக்கங்கள் இருக்கும். அந்த வீட்டில் பிறந்தாலும் வளர்ந்தாலும் அந்தப் பழக்கங்கள் எளிதில் வந்துவிடும்.

ஓநாய்ப் பையன் ஒருவனைப்பற்றிய செய்தி முன்பு பத்திரிகையில் மிக விசேஷமாக அடிபட்டது. அந்தப் பையனைக் காட்டிலிருந்து மீட்டு வந்து பழக்கினலும் அவன் கையால் உணவை எடுத்து உண்ணத் தெரியாமல் வாயினலேயே உண்டானும். இளமை தொடங்கி வந்த பழக்கம் அது. நல்ல பழக்கங்களும் அப்படியே அமையும்.

ஆகவே தெய்வ வழிபாடு, தெய்வத்தைத் துதித்தல், தியானித்தல், பூசை செய்தல் முதலியவற்றை முயன்று பழகிக் கொள்வதைவிட அவற்றைச் செய்பவர்களோடு சேர்ந்து நெருங்கிப் பழகினல் அவை தாமே எளிதில் படிந்துவிடும். அதனல்தான் பெரியவர்கள் சாதுக்களின் சங்கம் அருளநுபவம் பெறும் வழியில் நமக்குத் துணை நிற்கும் என்று சொல்கிருர்கள்.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

என்று தாயுமானவர் பாடுகிறார். 'இன்பநிலையை நான் தேடிப் போகவேண்டிய அவசியம் இல்லை; அதுவே என்னை நாடிக்கொண்டு வருவதற்கு ஒரு வழி உண்டு. அந்த வழிதான் அடியார் கூட்டத்தில் சேர்ந்து அவர்களுக்குப் பணி புரிதல். அடியார்க்கு அடியான் ஆகும் ஆற்றலை நீ எனக்கு அருள் செய்தாயானால் அதுவே போதும்; அதன் வழியே நான் இன்பநிலை பெறுவேன்' என்று நினைத்துப் பாடியது இது.

அடியாருடன் ஒன்றி வாழ்வதன் சிறப்பை உணர்ந்தே சுந்தரமூர்த்தி நாயனார் திருத்தொண்டத் தொகை என்ற திருப்பதிகத்தைப் பாடியருளினார். "அடியார் நடுவுள் இருக்கின்ற அருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம், முடியா முதலே" என்று மணிவாசகர் இறைவனை வேண்டிக் கொண்டார்.

வீதியில் பெருங்கூட்டம் போகிறது. ஊரில் பெரிய திருவிழா. யாவரும் கோயிலை நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறார்கள். ஓர் இளைஞன் தன் வீட்டு வாசலில் வந்து பார்க்கிறான். கூட்டம் கோயிலை நோக்கி மெல்ல மெல்ல நகர்ந்து கொண்டிருக்கிறது. அவனுக்குச் சோம்பலாக இருக்கிறது. மனத்துக்குள் போகலாம் என்ற விருப்பம் சிறிது தோன்றினாலும் உடம்பு வணங்கமாட்டேன் என்கிறது. ஆனாலும் வாசலில் நின்றவன் மெல்ல வீதிக்கு வருகிறான். எப்படியோ கூட்டத்தின் நடுவில் அகப்பட்டுக் கொள்கிறான். அப்புறம் அந்தக் கூட்டமே அவனை உந்தித் தள்ளிக்கொண்டு போகிறது. எப்படியோ கோயிலை அடைந்து விடுகிறான். இது உடம்பைப் பொறுத்தவரையில் நிகழும் நிகழ்ச்சி.

இப்படியே சத்சங்கத்தில் பயில்கிறவர்களுக்கு உரையில் நல்ல பழக்கம் ஏறும். நான், நான் என்று சொல்லிக் கொண்டிருப்பவன் அடியேன் என்று சொல்லப் பழகிக்கொள்வான். எவரையும் நீ என்று சொல்லுகிறவன் நீங்கள் என்று மரியாதையாகப் பேசத் தெரிந்து கொள்வான். எந்தப் பேச்சிலும் இறைவனுடைய திருவருள் நினைப்பையும் கலந்து பேசுவான். பெரியவர்களோடு சேருவதற்குமுன், ''இந்தக் காரியத்தைச் செய்து முடித்துவிடுகிறாயா?'' என்று கேட்டால், ''ஓ! அற்புதமாகச் செய்து முடித்துவிட்டு மறுகாரியம் பார்க்கிறேன்'' என்று சொல்லி மார்தட்டுவான். நல்லோர்களுடைய கூட்டுறவு வந்த பின்போ, ''இறைவன் திருவருளைத் துணைக் கொண்டு செய்ய முயல்வேன்'' என்பான். செருக்கும் தருக்கும் மாறி அடக்கமும் பணிவும் உண்டாகும்.

மனத்தில் தோன்றும் விருப்பு வெறுப்புகளும் இவ்வாறே மாறுதல் அடையும். நல்லவற்றிலே நாட்டமும் பொல்லா தவற்றிலே அருவருப்பும் உண்டாகும். காரண காரியத்தை எண்ணுமலே இந்தப் பழக்கம் உண்டாகும்.

இப்படி மன மொழி மெய்களாகிய மூன்று கரணங்களாலும் இயற்றும் செயல்களில் நல்ல பண்பு வளரும். எத்தனைக்கு எத்தனை அடியார் திருக்கூட்டத்தில் நெருங்கி நெடுங்காலம் பழகுகிறேமோ, அத்தனைக்கு அத்தனை நாமும் அவர்களைப்போல் ஆகிவிடுவோம். மனத்தை அடக்கி இறைவன்பால் செலுத்தும் பயிற்சி, தனியாக ஆராய்ந்து பார்த்து, நூல்களைப் படித்தால் மட்டும் வருவதில்லை, அடியார் கூட்டத்தைச் சேர்ந்து பழகுவதனல்தான் வரும். இந்த உண்மையை அபிராமிபட்டர் சொல்கிருர்.

''நான் அடியார்களைப் பணிந்து அவர்களைப் பின் பற்றினேன். அதனல் பிறப்பறுக்கும் வழியைத் தெரிந்து

கொண்டேன்'' என்றார். ஆனால் அடியார்களைப் பணிந்து அவர்களோடு உறவுகொள்ளும் நிலை கூட மிக எளிது என்று சொல்ல இயலாது. பூர்வ ஜன்ம புண்ணிய வசத்தினால்தான் சத்சங்கம் நமக்குக் கிடைக்கும்.

"தவமும் தவமுடையார்க்கு ஆகும்"

என்பது வள்ளுவர் வாய்மொழி. முன்னைத் தவம் இருந்தால்தான் இப்பிறப்பில் நல்லோர்களுடன் கூடும் வாய்ப்புக் கிடைக்கும். உலகத்தில் நல்லவர்களும் இருக்கிறார்கள்; கெட்டவர்களும் இருக்கிறார்கள். நாம் யாருடனும் சேர்ந்துகொள்ளலாம். எல்லோரும் நல்லவர்களுடன் சேர்ந்துகொள்ள முயன்றால் அதைத் தடுப்பார் இல்லை. ஆனால் அப்படி நடக்கிறதா? நல்லவர்கள் உலகத்தில் குறைவாகத்தான் இருக்கிறார்கள். அவர்களை நாடிச் செல்பவர்களும் குறைவாகவே இருக்கிறார்கள். முன்பு தவம் செய்தவர்கள் குறைவாக இருப்பதுதான் இதற்குக் காரணம்.

திருவள்ளுவர் ஒரு கருத்தைச் சொல்கிறார். தவத்தின் சிறப்பைப் புலப்படுத்துவதற்காக அதைச் சொல்கிறார். முற்பிறவியில் நல்ல செயல்களைச் செய்து புண்ணியத்தை ஈட்டினவர்கள் இந்தப் பிறவியில் பொருளையும் போகத்தையும் பெறுவார்கள். அல்லாதவர்கள் வறுமையில் ஆழ்ந்து துன்புறுவார்கள். உலகத்தில் வறியவர்களே மிகுதியாக இருக்கிறார்கள். அதற்குக் காரணம் என்ன? திருவள்ளுவர் சொல்கிறார்.

"இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்."

'உலகத்தில் பொருள் இல்லாதவர் பலராக இருப்பதற்குக் காரணம், நோன்பு நோற்பவர்கள் சிலர். தவம் செய்யாதவர்களே பலர்' என்று அவர் சொல்கிறார்.

வெறும் பொருளுக்கே இந்த நிலையென்றால், சத் சங்கத்திலே ஈடுபடுவதற்கு இன்னும் பெரிய தவம் செய்ய வேண்டும். அப்படிச் செய்பவர் பின்னும் சிலரே என்பதில் ஐயம் இல்லை.

அபிராமி பட்டர் இதை நினைவாகச் சொல்லுகிறார். "தாயே, நான் உன் அடியார்களின் பின்னே திரிந்து அவர்களை வழிபட்டுப் பிறப்பை அறுக்கும்பொருட்டு முற் பிறவிகளில் நிறைந்த தவத்தைச் செய்து அதன் பயனை அடைந்திருக்கிறேன்" என்கிறார்.

**பின்னே திரிந்து உன் அடியாரைப்**
**பேணிப் பிறப்பு அறுக்க**
**முன்னே தவங்கள் முயன்றுகொண்டேன்.**

இப்போது விளைந்த விளைவைக்கொண்டு முன்னே இதை விதைத்திருக்க வேண்டும் என்று அநுமானித்துச் சொன்னது இது.

யாரேனும் ஒரு செல்வரிடம் பொருள் உதவி பெற வேண்டுமானால், அவருக்குப் பின்னாலே சென்று அவர் போகும் இடங்களெல்லாம் போய், அவர் உள்ளம் இரங் கச் செய்கிறான் ஏழை. யாராலேனும் ஒரு காரியம் ஆக வேண்டுமானால் அவர் பின்னே திரிந்து, காலத்தைப் பாராமல், உழைப்பைப் பாராமல், எப்படியாவது அவ ருடைய அன்பைப் பெறவேண்டுமென்று முயல்வது உலக இயல்பு. அப்படிச் சென்று திரிந்து பெறும் பொருள் சிறிது.

ஆனால் அடியார்களைத் தொடர்ந்து பின்பற்றுவதனால் பிறப்பை அறுக்கும் அரிய பேறு கிடைக்கும் என்றால், என்னதான் செய்யக் கூடாது? ஒரு கண இன்பத்துக்காக மகளிர் பின்னே திரிவது காமுகர் இயல்பு. தாயின்

உதவியை நாடி அழுது பின்னே திரிவது குழந்தையின் இயல்பு. இங்கே அபிராமிபட்டர் அடியார்களை அண்டினால் அறிதற்கரிய இரகசியத்தை அறிந்து கொள்ளலாம் என்ற எண்ணத்தினால் அவர்கள் பின்னே திரிந்து வழிபட்டார்.

ரசவாத வித்தை ஒரு பரதேசிக்குத் தெரியும் என்று ஒரு வதந்தி உண்டானால் போதும்; அது உண்மையா, அல்லவா என்று யோசிக்காமல் அவர் பின்னே ஆயிரம் பேர் திரிவார்கள். இந்தப் பிறவி எடுப்பதற்குப் பயன் மீட்டும் பிறவியை அடையாமல் செய்துகொள்வதுதான். அந்தப் பெரும்பயனைப் பெறுவதற்கு எத்தனை காலம் அலைந்து திரிந்தாலும் பெரிதன்று. அந்த அருமையை உணர்ந்த அபிராமிபட்டர் அடியார்களின் பின்னே திரிந்தார்.

அவ்வாறு திரிந்து அவர்களைப் போற்றி வழிபட்டதனால் பிறப்பறுக்கும் நிலை உண்டாயிற்று. அடியார்கள் பின்னே திரிந்தவுடனே பிறப்பு அற்றுவிடவில்லை. பிறப்பறுக்கும் வழி இன்னதென்று தெரியவந்தது. பிறப்பறுக்கும் மருந்தைத் தெரிந்துகொண்டார். அது கிடைத்துவிட்டால் பிறப்பு அறுக்கும் நிலை தானே வந்துவிடும். உணவுக்கு வழியின்றி வறுமையினால் உழலும் ஏழைக்குப் பணம் கிடைத்தால் அதைக் கொண்டு உணவு பெறுவது எளிதல்லவா? அதுபோன்று பிறப்பை அறுக்க வழி தெரியாமல் அலைபவனுக்கு அதை நீக்கும் மருந்து கிடைத்தால், அவனுக்கு உடனே பிறப்பு நீங்கிவிட்டது போன்ற இன்பமே உண்டாகும். மருந்தை உண்ணுவது பெரிய காரியம் அன்று.

பிறவியைவிடப் பெரிய நோய் வேறு இல்லை. மற்ற நோய்கள் உடம்பில் உண்டாகின்றன. நோய்க்கு இடமாகிய உடம்பைப் பெறுவதுதான் பிறவி. அதுவே எல்லா நோய்களிலும் பெரிய நோய். பெரிய நோய்க்கு உரிய மருந்து மிக்கபெருமையை உடையதாக இருக்க

வேண்டும். அபிராமி என்னும் அரும் பெரு மருந்தே அந்த நோயைத் தீர்க்க வல்லது. இந்த இரகசியத்தை அடியாரைப் பின்பற்றித் திரிந்து பேணியதால் அவர் உணர்ந்து கொண்டார். அபிராமி மும்மூர்த்திகளுக்கும் மூலமாகிய பெருமாட்டி என்பதை உணர்ந்தார்.

அவள் பிறவாதவள்; எல்லோரையும் பிறக்க வைப்பவள்; மும்மூர்த்திகளையும் பெற்ற அன்னை; "மும் முதற்கும் வித்தே" என்பது மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ். அவள் அநுக்கிரகம் இருந்தால் இனிப் பிறவாத நிலையைப் பெறலாம். அடிக்கிற தாய் அணைப்பது போல, நம்மைப் பிறவிப்பிணிக்கு ஆளாக்கிய அன்னை அதனினின்றும் விடுதலை பெறவும் அருளுகிறாள்.

பின்னே திரிந்து உன் அடியாரைப் பேணிப்
 பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண்டேன்; முதல்
 மூவருக்கும்
அன்னே, உலகுக்கு அபிராமி என்னும்
 அருமருந்தே!

உலகில் வாழ்கிற ஜீவர்களுக்கு நன்மை உண்டாக வேண்டும் என்ற கருணையினால் ஸ்ரீராஜராஜேசுவரி அன்பர் கண்டு தரிசிக்கும் பேரழகியாக, அபிராமியாக நின்று காட்சி தருகிறாள்.

அருமருந்தே என்பதற்கு அரிய அமுதமே என்றும் பொருள்கொள்ளலாம். அமுதம் சாவாமையைத் தருவது. தன்னை நம்பிப் பணிந்த அடியார்களுக்கு மரணமிலாப் பெருவாழ்வைத் தருபவளாதலின் அமுதமாக இருக்கிறாள்.

மருந்தைக் கண்டுகொண்ட பிறகு சும்மா இருப்பார்களா? அதனை எப்படிப் பயன் படுத்திக் கொள்ள

வேண்டுமோ, அப்படிப் பயன்படுத்தி நலம் பெற வேண்டும். அபிராமியை உள்ளத்தில் என்றும் மறவாமல் வைத்துத் தியானித்துத் துதிக்கும் செயலைச் செய்கிறார், அபிராமி பட்டர். அதுதான் இந்த மருந்தை நுகரும் வகை. மருந்தை உண்ட பிறகு கவலை என்ன? இது மிகச் சிறந்த மருந்தாதலின் உடனே பலிக்கும். ஆகவே, "இனி என்ன கவலை?" என்ற பெருமிதத்தோடு இருக்கிறார் இந்த அன்பர்.

என்றும் மறவாமல் உள்ளத்தே நிறுத்தி, அந்தத் தியான நிலையினின்றும் பிறழாமல் நிற்கிறார்; இடைவிடாமல் ஏத்துகிறார். இனி அவருக்கு ஏது குறை? சூரியன் எங்கே உதித்தால் என்ன? சந்திரனுக்கு வடகோடு உயர்ந்தால் என்ன? தென்கோடு உயர்ந்தால் என்ன? உலகத்தில் கலிபுருஷனுடைய ஆட்சி நடந்தால் என்ன? நடக்காவிட்டால் என்ன? யார் புகழ்ந்தால் என்ன? யார் இகழ்ந்தால் என்ன?

அணுக வேண்டியதை அணுகி அடைய வேண்டியதை அடைந்தவர் அவர். அவருடைய உள்ளம் நிறைவு பெற்று விட்டது. தனக்கு உவமை இல்லாத அன்னையின் தாள் சேர்ந்த அவருக்கு மனக் கவலை இல்லாமல் போய் விட்டது.

இந்த நிலையை அவர் அடைந்ததற்குக் காரணம் அடியாருடைய உறவு.

பின்னே திரிந்துஉன் அடியாரைப் பேணிப்
பிறப்பறுக்க
முன்னே தவங்கள் முயன்றுகொண் டேன்; முதல்
மூவருக்கும்
அன்னே, உலகுக்கு அபிராமி என்னும்
அருமருந்தே,
என்னே இனி? உன்னை யான்மற வாமல்நின்று
ஏத்துவனே.

[முதற் கடவுளராகிய திரிமூர்த்திகளுக்கும் தாயே, உலகத்து உயிர்களின் நன்மையின் பொருட்டு அபிராமி என்று போற்றப்பெற்று வரும்அரிய மருந்து போன்றவளே, உன்னை யான் என்றும் மறவாமல் நிலையாக நின்று துதிப்பேன்; இனி எனக்கு என்ன கவலை?(இப்பேறு கிடைத்த தற்குக் காரணம் என்ன?) நின் அடியவரின் பின்னே அவருக்கு ஆளாகத் திரிந்து, அவர்களைப் போற்றிப் பிறப்பை அறுப்பதற்குத் தக்கபடி, முன் பிறவிகளில் தவத்தைச் செய்திருக்கிறேன்.

அடியாரைப் பின்னே திரிந்து பேணி என்று கூட்டுக. உலகுக்கு-உலகின் நன்மைக்காக.]

இது அபிராமி அந்தாதியில் உள்ள 25-ஆவது பாட்டு.